திருவாரூர் வருக! திருவருள் பெறுக!!

# திருவாரூர்

# அருள்மிகு தியாகராஜசுவாமி திருக்கோயில்

## தலவரலாறும் - சிறப்புகளும்

பிறக்க முக்தி - மூலாதாரத்தலம்



அருள்மிகு தியாகராஜ சுவாமி



அருள்மிகு கமலாம்பாள்




தியாக. பவானந்தம்

79/116, புதுத்தெரு, திருவாரூர். 610 001. போன்: 240718 செல்: 94427 14240



## அருள்மிகு ரு(ரி)ணகரேஸ்வரர்

கடன் தீர்ப்பாய் கவலைகள் தவிர்ப்பாய்
உடனிருப்பாய் உடல்நோய்கள் தீர்ப்பாய்
உயர்ந்தவைகாட்டி உகந்தவைதருவாய்
தாயும் சேயும் தரணியில் சிறக்க
கருவினைக் காத்து காலத்தில் சேர்ப்பாய்
ஆரூ ரு(ரி)ண விமோசனரே போற்றி!



## அருள்மிகு ரௌத்திர (ராகு) துர்க்கை

மாயவன் தனக்கு முன் மணிமுடியளித்த ஆரூர்
தூயனை வணங்கி ஆங்கு துர்க்கையை விதியினால் தாபித்து
ஆய்மலர் தூவி அன்பால் அர்ச்சனை புரியின் மன்ன
நீ உளந்தனில் இன்று நினைந்தது முடியும் என்றான்.

- ஸ்ரீ ஞானசம்பந்த முனிவர்.

உ
சிவமயம்

திருவாரூர்

அருள்மிகு தியாகராஜ சுவாமி திருக்கோயில்

(சர்வதோஷ பரிகாரத்தலம்)

# தலவரலாறும் சிறப்புகளும்



**தொகுப்பும் வெளியீடும் :**

**தியாக. பவானந்தம்,**

79/116, புதுத்தெரு, திருவாரூர் – 610 001.

போன் : 240718 செல் : 94427 14240

*சித்தாந்த இரத்தினம்* **தி. பவானந்தம்,**
*கூட்டுறவு நிலவள வங்கிச் செயலாளர் (ஓய்வு)*
*பன்னிரு திருமுறை மன்ற செயலர்*
*79, புதுத்தெரு, திருவாரூர்.*
*தொலைபேசி: (04366) 240718, செல் : 94427 14240*

*22.8.2009*

## முன்னுரை :

***ஆயிரம் பிறை கண்டு கனகாபிஷேகம் கண்ட தருமபுரம் ஆதீனம் 26-ஆவது பட்டம் ஸ்ரீலஸ்ரீ குரு மகா சந்நிதானம் அவர்களின் பொற் பாதங்களுக்கும்***

***திருவாவடுதுறை ஆதீனம் 23-ஆவது சீர்வளர்சீர் குரு மகா சந்நிதானம் அவர்களின் பொற்பாதங்களுக்கும்***

***வேளாக்குறிச்சி (திருப்புகலூர்) 18 வது ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களின் பொற்பாதங்களுக்கும் அடியேனின் பணிவுகலந்த வணக்கங்கள்.***

*தமிழகத்திலுள்ள கோயில்களுள் பழமையும், மிகப் பெருமையும் கொண்டு விளங்குவது* ***திருவாரூர் அருள்மிகு தியாகராஜ சுவாமி திருக்கோயில்.*** *சப்தவிடங்கத் தலங்களுள் தலையாயதாய்ப், பஞ்சபூதத் தலங்களுள் பிருதுவித்தலமாய், முக்தித் தலங்களுள் பிறக்க முக்திதருவதாய்ப் பெருமை பெற்றது. சங்க காலச் சோழ மன்னர்கள் முடிசூட்டிக் கொள்ளும் எழில் நகரமாகவும் விளங்கிய திருவாரூர், மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூன்றாலும் சிறப்பு மிக்கது. மனுநீதிச் சோழனின் அருள் வரலாறு நிகழ்ந்தேறிய திருவாரூர், நால்வராலும் பல அருளாளர்களாலும் பாடல் பெற்றது. சுந்தரர் அருள் வாழ்வு மலர்ந்த திருவாரூரில்தான் சேக்கிழாரின் பெரிய புராண ஆக்கத்திற்குக் காரணமான திருத்தொண்டத் தொகையும் பிறந்தது.*

*திருவாரூர்த் திருக்கோயில் வரலாற்றை மற்றும் தமிழ் மறையிலிருந்து தொகுத்த சில பாடல்களுடன் வெளியிடுகிறேன். அணிந்துரை வழங்கிய மதிப்பிற்குரிய டாக்டர்.* ***ஏ.எம். சுவாமிநாதன்*** *ஐ.ஏ.எஸ்., அவர்களுக்கும், மற்றும் நிர்வாக அதிகாரி உயர்திரு* ***த. கஜேந்திரன்,*** *எம்.ஏ., பி.எல்., அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.*

*பிழைகள் திருத்தி வடிவமைத்துக் கொடுத்த திருவாவடுதுறை ஆதீனப் புலவர் பேராசிரியர் திரு* **தா.ம. வெள்ளை வாரணனார்** *அவர்களுக்கும், தருமபுரம் ஆதீனம் கலைக்கல்லூரிப் பேராசிரியர் முனைவர்* **ச. சுப்புரத்தினம்** *அவர்களுக்கும், சோளிங்கர் புலவர் சித்தாந்த வித்யாநிதி திரு* **மு. செல்வநாதன்** *அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இதனைப் படித்து இன்புறும் யாவரும் அருள்மிகு தியாகராஜப் பெருமான் அருள்பெற வேண்டுகிறேன்.*

*திருவாரூர்*
*22.8.2009*

*அன்புடன்,*
***தி. பவானந்தம்.***



**ஸ்ரீ குரு தட்சிணாமூர்த்தி சுவாமிகள்,** மடப்புரம்.

(விபரம் பக்கம் : 86, 87)

## வாழ்த்துரை :

*Dr. A.M. Swaminathan, I.A.S., (Rtd.,)*
*Chairman,*
*Staff & Expenditure Reforms Commission.*

*Secretariat,*
*Chennai - 600 009.*
*Phone : 2567 2429 (off) 52087991 (Res.)*
*Date : 30.6.2003*

*பெரியவர் திரு **பவானந்தம்** அவர்கள் சைவ சித்தாந்தத்தில் பெரும் பற்றுள்ள ஆன்மீகச் செம்மல். அவர் முன்பு எழுதியுள்ள திருக்கோயில் வழிபாடு என்ற குறு நூலை நான் படித்து மகிழ்ந்துள்ளேன். இப்போது அவர் எழுதியுள்ள திருவாரூர்த் தல வரலாறு என்றதொரு நூலைப் படித்துப்பாராட்டும் நல்ல வாய்ப்புக் கிடைத்துள்ளது.*

*தமிழகத்தில் வரலாற்றுச் சிறப்பு மிக்க நகரமான திருவாரூரைப் பற்றியும், இந்நாட்டின் பழம்பெரும் கோயில்களில் ஒன்றான அருள்மிகு தியாகராஜர் கோயிலைப் பற்றியும் திரு **பவானந்தம்** அவர்கள் நூலில் அரிய பல செய்திகளைச் சொல்லுகின்றார். மேலும், கோயில் சிறப்புச் சின்னங்கள், புராணக் கதைகள், வழிபாட்டு நடைமுறைகள், பிற்காலப் பெருமைகள் போன்றவைகளும் இப்புத்தகத்தில் நிறைய கிடைக்கின்றன. பன்னிரண்டு திருமுறைகளில் இருந்தும் பொருத்தமான பதிகங்களை ஒருசேரப்பயிலும் வாய்ப்பும் நமக்கு இதன் மூலம் கிடைக்கின்றது. இறுதியாக திருவாரூரைச் சுற்றியுள்ள சில முக்கிய இடங்களைப் பற்றித் தெரிந்து கொள்ளவும் நமக்கு இப்புத்தகம் உதவுகிறது.*

*பயனுள்ள நூலை எழுதி, அழகாக வடிவமைத்து அன்பர்களுக்கு அருளோடு வழங்கும் திரு. பவானந்தம் அவர்களுக்கு என் பணிவான பாராட்டுக்கள் உரியன. வாழ்க அவர்களது பெருந்தன்மை! வளர்க அவர்களது இறைத்தொண்டு!*

*அன்பன்*
***A.M. சுவாமிநாதன்***

## அணிந்துரை :

*வண்ணமொன்றும், வடிவமொன்றும் இல்லாத மூலத்தின் மூலப்பொருளை எண்ணினால் எண்ணமில்லை. எண்ணமோ எண்ணிலில்லை. காற்றினைப் போலக் கட்டுக்குள் இல்லாமலும், கடல் அலையைப் போல உறக்கமில்லாமலும், காண்பதையும், கேட்பதையும் உண்மையெனக் கருதிச் சிந்தனையின்றிச் சென்று வாழ்வதெல்லாம் வாழ்க்கை யென்னும் பித்தத்துள் மூழ்கி, பேதமை கொண்டு பெருநெறி தவறும், மனித வாழ்விற்கு இறைநெறி உணர்த்தி இருமைக்கும் ராஜபாதை அமைத்துத் தந்தவர்கள் திருத்தொண்டர்கள். புண்ணியத்தலங்கள் தோறும் சென்று எண்ணிலா நாமம் கொண்ட இறைவன் திருவருள் பெருக்கும் தலங்களையும் திருக்கோயில்களையும் நமக்கு அடையாளம் காட்டியவர்கள் நாயன்மார்கள். பாலங்களும், பாதைகளும் இல்லாத காலத்தில் கால் நோகக் கயிலை மலையையும் தரிசித்து நம் கண்முன்னே தம் திருப்பாடல்களால் கொண்டு வந்தவர்கள் நாயன்மார்கள். ஆனால் பறந்திட விமானங்களும், பார்த்திடத் தொலைக் காட்சிப் பெட்டிகளும் வந்துவிட்டாலும் பாதைமாறிய வாழ்க்கையில் செல்லும் நமக்கு விரிந்த அவர்களது ஆன்மீக பூமியிலிருந்து கடல் நீரைச் சுமந்து வரும் மேகத்தைப் போல முத்தைத் தேடித்தரும் மீனவனைப் போல நமக்கு இறையருளின் முகவரியைச் சுமந்து வரும் ஆன்மீக வழிகாட்டியாய் அய்யா திரு. பவானந்தம் அவர்கள் இந்நூல் ஆகிய வழிகாட்டியை நமக்கு வழங்கியுள்ளார்கள்.*

*எந்த மாதவஞ்செய்தனை நெஞ்சே! எனக் கடவுளர்களும் தேவர்களும், ரிஷிகளும், முனிவர்களும், சித்தர்களும், நாயன்மார்களும், தொண்டர் திருக்கூட்டமும் தம் சித்தந்தெளிய வணங்கி வழிபடும் பெருமைமிகு சர்வதோஷ பரிகாரத்தலம் எனப் போற்றப்படும் திருவாரூர்த் தியாகேசப் பெருமானின் திருக்கோயிலைப் பற்றிக் கூறியும் திருக்கோயிலைப் பாடி மகிழ்ந்தார் தம் பாடல்களில் சிலவற்றையும் தேர்ந்தெடுத்து வழங்கியுள்ளார்கள். சுருக்கமாகச் சொன்னால் அய்யா திரு பவானந்தம் அவர்கள் பிரபஞ்சத்தை ஒரு பேழைக்குள் கொண்டு வந்துள்ளார்கள்.*

*திறந்து பாருங்கள் திசைகள் தெரியும். சென்று பாருங்கள் வாழ்க்கையில் வசந்த பாதை எதுவெனப்புரியும். இருளில் தவிப்பவர்களுக்கு இது ஓர் அகல்விளக்கு. ஆம்! ஞான வேள்விக்கு இந்நூல் தூண்டுநெருப்பு. தொட்டுப்பாருங்கள் (ஞானத்தை) சுடாது.*

***படித்ததும், பார்க்கத்தூண்டும்! திருவாரூர்த் தியாகேசனின் திருமுகம் காணத் திருவாரூர் வருக! திருவருள் பெறுக!!***


*உங்களோடு,*

***த. கஜேந்திரன்**, எம்.ஏ., பி.எல்.,*

*உதவி ஆணையர், நிர்வாக அதிகாரி,*

*அருள்மிகு தியாகராஜ சுவாமி திருக்கோயில்,*

*திருவாரூர்.*




**பஞ்சமுக வாத்தியம்**

ஆரூரான் சந்நிதி போல்
ஆரூரான் ஆலயம் போல்
ஆரூரான் பாதத்து அழகு போல் - ஆரூர்
மருவெடுத்த கஞ்ச மலர்
வாவி போல் நெஞ்சே
ஓர் இடத்தில் உண்டோ உரை

*(தஞ்சை சரஸ்வதி மகால் சுவடி)*

ஆரூர் இங்கிருக்க-அவ்வூர்த் திருநாளென்று
ஊரூர்கள் தோறும் உழல்வீர்!

*- பட்டினத்தார்*

தொலைவில் இருந்து திருவாரூரைக் கண்டபொழுது
பொன்னுலகம் போலக் காட்சி தந்ததாம் என்கிறார்

*- சம்பந்தர்*

தென் இந்தியாவில் உள்ள சைவத் திருக்கோயில்களில் மிகப்பழமையும், சிறந்த பெருமையும் கொண்டு விளங்குவது **திருவாரூர் அருள்மிகு தியாகராஜ சுவாமி திருக்கோயில்.** கோயில் என்பது தில்லையையும் **பெரிய கோயில்** என்பது திருவாரூரையும் குறிக்கும். சப்தவிடங்கர் தலங்களுள் தலையாயதாய், பஞ்ச பூதத் தலங்களுள் பிருதுவித் (மண்) தலமாய், முக்தித் தலங்கள் ஐந்தினில் பிறக்க முக்தி தரும் பெருமையதாய்த் திகழ்கிறது. சிவனின் ஆறு ஆதாரத்தலத்தில் மூலாதாரமாகத் திகழ்வது திருவாரூர். சோழ மன்னர்களின் தலைநகராகவும் பிற்காலத்தில் முடிசூட்டிக் கொள்ளும் எழில் நகராகவும் விளங்கிய திருவாரூர், மூர்த்தி, தலம், தீர்த்தம், என்ற மூன்றாலும் சிறந்து விளங்குகிறது. திருவாரூர்ப் பெரிய கோயில் எப்போது தோன்றியது என்பதற்கான வரலாறு, இன்று வரை நிர்ணயம் செய்யப்படவில்லை.

1. ஒருவனாய் உலகேத்த நின்ற நாளோ
   திசையெட்டும் தெரிப்பதற்கு முன்னோ பின்னோ
   தேசம் உமை அறிவதற்கு முன்னோ பின்னோ

2. மாடமோடு மாளிகைகள் மல்குதில்லை
மணி - திகழும் அம்பலத்தே மன்னிக்கூத்தை
ஆடுவான் புகுவதற்கு முன்னோ பின்னோ

3. கோலம் நீ கொள்வதற்கு முன்னோ, பின்னோ
குளிர் ஆரூர் கோயிலாகக் கொண்ட நாளே.

4. வேதத்தை விரிப்பதற்கு முன்னோ பின்னோ
விழவாரூர் கோயிலாகக் கொண்ட நாளே - **அப்பர்**

என வினவும் வினாக்களால் கி.பி. 6-ம் நூற்றாண்டுக்கு முன்பே ஆரூர் திருக்கோயில் திகழ்ந்த பாங்கை அப்பர் வாயிலாக அறிய முடிகிறது. மார்கழி திருவாதிரை விழா, பங்குனி உத்திரப்பெருவிழா "ஆழித்தேர்" வித்தகனை நான் கண்டது ஆரூரில் போன்றவற்றைக் கண்ட அப்பர் "எந்த மாதவம் செய்தனை நெஞ்சமே" எனப் போற்றுவதாலும் ஆரூர் தொன்மைப் பெருமையோடு விழாவின் பெருமையும் நன்கு அறிய முடிகிறது.

சோழமன்னர்கள் காலத்தில் திருமூலட்டானம் எனும் பூங்கோயிலில், அரநெறி, ஆடகேஸ்வரம், ஆனந்தேஸ்வரம், விஸ்வகர்மேஸம் எனும் திருக்கோயில்கள் திகழ்ந்ததை தஞ்சை பெரிய கோயில் கல்வெட்டுகளும் இலக்கியங்களும் கூறுக்கின்றன. பின்னர் விஜயநகர நாயக்கர்கள், மராத்தியர்கள் காலத்தில் 1. வன்மீகசம் (மூலட்டானம்) 2. அசலேசம் (அரநெறி) 3. ஆடகேசம், 4. ஆனந்தேசம், 5. விஸ்வகர்மேசம், 6. சித்தீசம், 7. தியாகேசம் என்ற பெயர்களில் ஆரூர் திருக்கோயில்கள் குறிக்கப்பெறுகிறது. தற்பொழுது அனைத்தும் அருள்மிகு தியாகராஜர் திருக்கோயில் வளாகத்தின் உள்ளேயே அமைந்துள்ள பழம் பெரும் கோயில்களாகும்.

திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன். என்று பாடிய சுந்தரர் பெருமான் தியாகேசர் அடியெடுத்துக் கொடுக்கவே திருத்தொண்டத் தொகை இயற்றியருளினார். திருத்தொண்டத் தொகை, சுந்தரர் பாடியிராவிட்டால் திருத்தொண்டர் திருவந்தாதியை நம்பியாண்டார் நம்பியும், திருத்தொண்டர் புராணத்தைச் (பெரிய புராணம்) சேக்கிழார் பெருமானும் பாடியிருக்க முடியாது. அவ்வகையில் ஆரூர், சைவம் தழைக்கத்

தோன்றிய 63 நாயன்மார்கள் புகழ் நிலைக்கக் காரணமாய் உள்ளது. ஆரூர் தியாகராஜர் கோயில் காலம் காலமாகச் சைவத்துறை மிகச் சிறந்து விளங்கவும், சைவ நெறி தழைத்தோங்கவும், நிலையாக அமைந்து விளங்கும் ஒரு தெய்வீகப் பொய்கையாகும். சைவத்திற்கு ஆரூர் தலைமைப் பீடம் எனக் கூறலாம். சமயத் துறையில் மட்டுமில்லாது, சமயம் சார்ந்த இலக்கியம், ஆடல், பாடல், இசை, ஓவியம் போன்ற அனைத்து நுண்கலைகளும், இத்திருக்கோயிலின் கண் வளர்ந்து, மலர்ந்து தெய்வீக மணத்தை உலகெங்கும் பரப்புகின்றன.

திருவாரூர்கோயில், அதிகமான சந்நிதிகள் கொண்ட கோயில் எனச் சிறப்புப் பெற்றது (திருவாரூர் கோயிலில் கருவறைகள் மிகுதி என்பதே ஒரு தனிச் சிறப்பு) சைவ சமயத்தில் பெரிய கோயில் என்றும் அழைக்கப்படுகிறது. கோயில் 33 ஏக்கர் பரப்பு (5 வேலி) 9 ராஜகோபுரங்கள் 80 விமானங்கள் 13 மண்டபங்கள் உள்ளன. பரப்பளவு தெற்கு வடக்கு 666 அடி அகலம், நீளம் கீழ் மேல் 846 அடி.

## கோபுரங்கள் விமானங்கள் :

மறை நான்கும் கோபுரமாய் வான்கிழிக்கும் வாசல் இது, என முத்துக்கவிர்ராயர் தியாகேச குறவஞ்சியிலும் மனுநீதிச் சோழன் நாடகத்திலும் குறிப்பிடுவது போல் வான் கிழிக்கும் வண்ணக் கோபுரங்களாக வெளி மதிலில் நான்கு பெரிய கோபுரங்களும் ஒரு சிறிய கோபுரமும் (கீழ்திசையில் விட்டவாசல்) அணி செய்கின்றன. மகாத்துவாரம் என வாஸ்து நூல்கள் குறிப்பிடும் கிழக்கு ராஜ கோபுரம் ஆரூர் திருக்கோயிலின் முக்கிய திருவாயிலாகும்.

## கிழக்கு கோபுரம் :

கி.பி.12-13 ஆம் நூற்றாண்டில்,, மூன்றாம் குலோத்துங்க சோழன் திரிபுவன ராஜவர்மனால் கட்டப் பட்டது. திரி புவன ராஜவர்மன் உருவமும் அவர் ராஜகுரு ஈஸ்வர சிவா உருவமும் கோபுரமாடத்தில் சிலைகளாக உள்ளன. கோபுரம் உயரம் 118 அடி, முதல் தளம் வரை கருங்கல், 7 நிலைகளில் உள்ளது. இது உடலில் உள்ள 7 ஆதாரங்களைக் குறிப்பிடுகிறது. அந்த கோபுரத்தில் சிவபெருமான் முதலான தெய்வக் கோலங்கள் காட்சியளிக்கின்றன. இக்கோபுரத்தில் அரிதாக, வேறு சிவத்தலங்களில் காணற்கரிய மகா விஷ்ணுவின் அவதாரங்களை சிற்பங்களாக காணமுடிகிறது. துவாரபாலகர்கள்

நேர்த்தியாக வடிவமைக்கப்பட்டுள்ளன. வழிபடுவோர் கிழக்கு கோபுரவாசலில் தேவேந்திரன் இருப்பதாகவும், கிழக்கு கோபுர வழி திரும்பும் பக்தர்களின் பாதி பலனை தேவேந்திரன் பறித்து விடுவதாகவும் தவறான செய்தி நிலவுகிறது. மேலும் தேவேந்திரன் தியாகராஜரை மீண்டும் தேவலோகம் வருமாறு பணிந்தான். கிழக்கு கோபுர வாசலில் காத்திருக்குமாறும் இதன் வழியே வரும் போது என்னை உன்னுடன் அழைத்துச் செல்லலாம் என்றார். ஈசனும் என்றாவது இவ்வழியில் வருவாரா என்றுதான் இந்திரன் காத்திருக்கிறார். எம்பிரானின் திருவிளை யாடல்களில் இதுவும் ஒன்று. அவர் தான் விட்டவாசல் கோபுரம் வழியே செல்லும் வழக்கத்தைக் கொண்டுள்ளாரே! கோபுர உச்சியில் மோட்ச தீபம் போட கீழ்மேல்புறம் தலா 14 குழிகளும் வட தென்புறம் தலா 7 குழிகளும் எண்ணெய் போட உள்ளன. இதற்கு 6 லிட்டர் நல்லெண்ணெய், அரை கிலோ திரிநூல் தேவைப்படும். இதற்கு கோயிலில் கட்டணம் ரூ.500 செலுத்தினால் மோட்ச தீபம் போடுவார்கள்.

### தெற்குக் கோபுரம் :

தருமை ஆதீன சிதம்பர முனிவரால் கி.பி.1897ல் கட்டப்பட்டதாக தெரிகிறது.

### மேலக் கோபுரம் :

கி.பி.15ம் நூற்றாண்டில் சிற்றரசன் மகன் நாகராசனால் கட்டப்பட்டது. இதில் பல தெய்வீகச் சிற்பங்கள் உள்ளன. பாற்கடலைக் கடைவது மற்றும் மனுநீதி வரலாறு நால்வர் உருவங்களும் நேர்த்தியாக உள்ளன. கோபுரத்தின் தென்புறம் சரபேஸ்வரர் சிற்பம் காணப்படுகிறது. பாதி கருங்கல் வேலைப்பாடும் மேல்பாதி சுதை சிற்பங்களாகவும் உள்ளன. 850 சிற்பங்கள், 7 நிலைகள், 11 கலசங்கள் உள்ளன. கலசம் உயரம் 6 1/2 அடி.

### வடக்குக் கோபுரம் :

கருணாகரத் தொண்டை மானால்/ செவ்வப்பநாயக்கரால் கட்டப்பட்டது. உயரம் 94 அடி, 7 நிலை உள்ள இந்த கோபுரவாயிலில் கீழ்புறத்தில் 2 மாடங்களில், ஒன்றில் கருணாகரத் தொண்டைமான் சிலையும் மற்றொன்றில் அவர் காலத்தில் கோயிலை நிர்வகித்த அகோர தியாகராஜ பண்டாரம் சிலையும் உள்ளன. இந்த கோபுரம் 1976ல் புதுப்பிக்கப்பட்டது. கோபுரத்தில் தியாகர் மற்றும் சிவமூர்த்தங்கள் சுதை வேலையாக உள்ளன.

## விட்டவாசல் கோபுரம்:

பக்கம் மனுநீதி சோழன் நினைவுச் சின்னமான கல்தேர், பசுமாடு கன்று, வீதிவிடங்கன், மன்னர் தேர் ஓட்டுவது போன்ற வரலாற்றுக் கருங்கல் சிற்பங்கள் உள்ளன. அவசியம் பார்க்க வேண்டிய கலைக்கூடம், நீதி வழுவாச்சோழர்களின் பெருமைக்கு மனுநீதிச் சோழன் வரலாறு ஒரு எடுத்துக்காட்டு. சேக்கிழார் திருத்தொண்டர் புராணத்தில் இந்த மன்னரின் பெருமையைக் கூறுகிறார். விக்கிரம சோழன் காலத்து ஆரூர் கல்வெட்டு இக்காவியத்தின் பெருமையை வரலாற்றோடு ஒப்பிடுகிறது. இக்கல்வெட்டை இடம் பெறச்செய்தவன், விக்ரமச்சோழன். கல்லில் தேரமைத்து அதன் ஆழியில் கன்று சிக்கியுள்ள காட்சியும் கன்றை இழந்த பசு கொம்பால் மணி அடிக்கும் காட்சியும் சிற்பங்களாக அமைத்தான். கல் தேரின் உட்புறம் சிவன் பார்வதி உள்ளனர். அருகில் ஒரு புறம் உயிர்பெற்ற கன்றும் தாய்ப் பசுவும் நிற்க எதிர்ப்புறம் வணங்கிய நிலையில் மனுவேந்தர் அவன் மைந்தன் வீதிவிடங்கன் அவனது அமைச்சன் உபயகுலாமலன் ஆகியோர் நிற்கும் காட்சி உள்ளது. தேர்த்தூணில்இறைவனைத் தொழும் விக்கிரம சோழன் சிற்பமும் உள்ளது. விட்டவாசல் கோபுரம் முற்காலத்தில் மடாதிபதிகள், அரசர்களுக்குப் புறவழியாகவும் தற்போது உற்சவ மூர்த்திகள் வெளியில் வீதி உலாச் சென்று வருவதற்காகவும் உள்ளது. 2-ஆம் பிரகாரம் கீழ்க் கோபுரம் ஆரியன் கோபுரம் மேல் பிரகாரம் மொட்டைக்கோபுரம் இதை லக்கன தண்ண நாயக்கன் கி.பி. 1440 இல் கட்டினான். கல்வெட்டு 40 (AR 566/1094 - 311)

திருவாரூர் கோயில் கோபுரம் யோக நெறியைக் குறிப்பதாகும். இதன்படி தெற்குக் கோபுரம் மூலாதாரமாகவும் (தெற்கு கோபுரம் மையத்தில் சரிபாதியாக இல்லாமல் கீழ்ப்பகுதியை ஒட்டி உள்ளதால் எமபயம் இல்லை என்பதை உணர்த்துவது) விட்டவாசல் கோபுரம் சுவாதிட்டனமாகவும், கிழக்குக்கோபுரம் மணிப்பூரகமாகவும் வடக்குக் கோபுரம் அனாகதமாகவும் ஆரியன் கோபுரம் மற்றும் அழகியன் கோபுரம் விசுக்தி ஆக்ஞா ஆகியவைகளாகவும் மேற்குக் கோபுரம் சகஸ்ராதாரமாகவும் உள்ளன.

**விமானங்கள் :**

மூலவரான வன்மீகநாதர் கோயில் மண்ணால் கட்டப்பட்டிருந்ததை, ஆதித்த சோழன் கற்கோயிலாக (கி.பி.9-10) எழுப்பியதாகவும், முதலாம் இராஜேந்திர சோழன் தனது காதலி பிரியநங்கை வேண்டு கோளிற்கிணங்கத் தியாகராஜர் கோயிலைக் கற்கோயிலாகக் கட்டியதாகவும், மண் கோயிலாக இருந்த அசலேஸ்வரர் கோயிலைச் செம்பியன் மாதேவி கற்கோயிலாகக் கட்டியதாகவும் தெரிகிறது. தியாகராஜர் மூலக் கருவறை பித்தளை தகடால் பொருத்தப் பட்டுள்ளது. தமிழகத்தை ஆண்ட அனைத்து மன்னர்களும் வழிபட்ட ஒரே தலம்.

திருவாரூர், பஞ்சபூதத் தலங்களுள் பிருதுவி (பூமி) தலமாகத் திகழ்கிறது. சப்தவிடங்கத் தலங்களில் தலையானது. பூ மகளுக்கு இதயக் கமலமாக விளங்குவது. திருமால், இந்திரன் ஆகியோரால் வழிபடப் பெற்றவர் தியாகராஜர். முசுகுந்த சோழனால் விண்ணுலகத்திலிருந்து கொண்டுவரப் பெற்ற சிறப்புடையவர். எல்லாத் தலங்களிலும் உள்ள சிவ கணங்களும் சாயரட்சை எனப்படும் திருவந்திக்காப்பு நேரத்தில் இத்தலத்தில் கூடுவதாகக் கூறப்படுகிறது. சோழ மன்னர்களின் ஐந்து தலைநகரங்களில் திருவாரூர் ஒன்றாகும். கலை அழகு மிளிரும் எண்ணிலாச் சிற்பங்களைச் சுமந்து நிற்கும் ஆரூர் திருக்கோயில் தமிழகத்து சிற்ப வளமைக்குச் சிறந்த எடுத்துக்காட்டான திருக்கோயிலாகும். கல்லில் அழகு மிகு சிற்பங்களைத் தமிழகம் கண்டது பல்லவன் காலமாகும். இதனைப் பல்லவர் கலைநயம் எனக் குறிப்பிடுவர். இத்தகைய கலைநயம் கொண்ட சிற்பங்களாக ஆரூர் திருக்கோயிலில் பல உள்ளன.

**திருமுறைகள் :**

பாடல் பெற்ற தலங்களில் இரண்டாவதாக அதிகமான பாடல்கள் பெற்ற தலம் திருவாரூர். சமயகுரவர்களில் திருஞானசம்பந்தர் 55 பாடல்களும் அப்பர் 208 பாடல்களும், சுந்தரர் 87 பாடல்களும் மாணிக்கவாசகர் 3 பாடல்களும் (34 தேவாரத் திருப்பதிகங்கள்) பாடியுள்ளனர். பூந்துருத்தி நம்பிகாடநம்பி திருவிசைப்பா-3, சேந்தனார் திருப்பல்லாண்டு-3 பாடல்களும், திருப்புகழ் 3 பாடல்களும், திருவருட்பா 10 பாடல்களும் உடையது. சிற்பம், சித்திரம், தெய்வீகம் ஆகிய அனைத்து அழகுகளும் நிரம்பப் பெற்றது.

## திருமுறை ஓதும் முறை :

எல்லாக் கோயில்களிலும் பாடும் முன்பு திருச்சிற்றம்பலம் என்று பாடுவர். ஆனால் ஆரூர் கோயிலில் ஆரூரா! தியாகேசா!! என இருமுறை கூறுவர். (தில்லைக்கு மூத்த பெரியகோயில் இது என்பதால்) திருவாரூர் கோயிலின் திருமுறை ஓதுதலைக் கேட்க நேர்ந்த செம்பியன்மாதேவி தனது பேரன் இராஜராஜசோழனிடம் கூறி, திருமுறைப் பாடலைப் பெறக் கருவூர்த்தேவரிடம் அறிவுரை பெறச் செய்தார். தெய்வப் பாடல்களுக்கு இசை அமைப்பு செய்ய திரு எருக்கத்தம்புலியூர் கோயில் ஈசனை வழிபட்டு ஈசன் ஆணைப்படி இசையும் யாழும் வல்ல பாணர் குடியில் தோன்றிய நங்கை ஒருத்தி மூலம் பண் இயல்புப்படி7 திருமுறைகளாக மூவர் தமிழை வகுத்துப் பண் அமைத்து நாள் முழுவதும் ஓத 48 ஓதுவார்களையும் 2 உடுக்கை மத்தளக் கலைஞர்களையும் நியமித்தான்.

## ஸ்ரீ தியாகராஜர் பெயர் காரணம் & ஸ்ரீ தியாகராஜர் ரகசியம்:

தேவர்களும் அசுரர்களும், பாற்கடலில் கடைந்து அமுதம் எடுக்க முற்பட்ட போது முதலில் தோன்றியது ஆலகால விஷம். ஆலகால விஷத்தை தேவர்கள் அசுரர்கள் வெறுத்து ஓடினார்கள். அப்போது சிவபெருமான் சுந்தரர் மூலம் தான் அந்த விஷத்தை ஏற்று தனது கண்டத்தில் தரித்து "விடமுண்டகண்டன், தியாகி ஆனதால் தியாகராஜர் என அழைக்கப்படுகிறார்" திருவாரூரில் தியாகராஜர் சோமாஸ்கந்த உருவம், கந்தன் என்றால் ஒன்று சேரப்பட்டவன் என்பது. ஆகையால் சோமாஸ்கந்தர் வடிவம், தானும், உடையவளும் (கொண்டி) கந்தரும் கூடிய நிலையைத் தெரிந்தவர்களுக்கு இறைவன் தன்னையே தந்து அருளுவான் என்பதே ஆரூர் தியாகராஜர் தத்துவம். சோமாஸ்கந்தர் சச்சிதானந்த மூர்த்தி என்றும் கூறுவார்கள். சத்-உண்மை, சித்-அறிவு, ஆனந்தம் - மகிழ்ச்சி இதை இறை அறிவால் உண்மையைக் காணும் ஆன்மாக்கள் முடிவில்லா ஆனந்தத்தில் திளைப்பார்கள் என்பது இதன் கருத்து. இதன் வழிபாடு இல்லற நெறியைத் தழுவியது. ஆரூர் தியாகராஜருக்கு இரண்டு இரகசியம் உள்ளன. ஒன்று தியாகராஜர் உடலைப் பார்க்க முடியாதபடி மூடப்பட்டிருக்கும். வாசனையற்ற மலர்கள் சாத்த மாட்டார்கள். பச்சைக் கற்பூரம், குங்குமப்பூ, அரைத்த சாந்து, செங்கழுநீர்ப்பூ தினம் ஒரு காலம் சாத்துப்படியாகும் மற்றொன்று தியாகராஜர் வெளியில் வரும்போது ஆடாமல் (அஜபா நடனம்) வரமாட்டார். ஆடுவதற்கு ஒரு யுக்தி செய்துள்ளனர் அது புள்ளத் தண்டு இரகசியம் என்பர்.

பன்னிரு திருமுறையைச் செப்பேடு செய்த அபய குலசேகரன், அநபாய சோழன், முசுகுந்த சக்கரவர்த்தி, சங்கர சேவகன் வேண்டுதல்படி தியாகராஜர் அரச வடிவம் தாங்கி அரசாண்டார். சிற்றின்பத்தில் பேரின்பத்தை அடையலாம், என்பதைக் காட்டும் விளக்கம் தியாகராஜர் உருவம். பூஜை சடங்குகள் அனைத்தும் சிருங்காரமாக இருக்கும். பெரிய கோயில் உள்ளே பல சுற்றுக் கோயில்கள், திருமூர்த்தங்கள் இருந்தாலும் முக்கியமாக வளர்ச்சியின் அறிகுறியாக 1. புற்று (புற்றிடங்கொண்டார்) 2. அசல் (அசலேஸ்வரர்) 3. ஆடல் (ஆடலேஸ்வரர்) 4. ஆனந்தம் (ஆனந்தீஸ்வரர்) 5. சித்தி (சித்தீஸ்வரர்) ஆகிய கோயில்களிலிருந்து நந்தி பலிபீடத்துடன் அருள்பாலிக்கின்றனர். இவர்கள் பெயரில் முத்துசாமி தீட்சிதர் பாடியுள்ளார். ஈஸ்வரம் என்பது சிவபெருமான் எழுந்தருளியுள்ள கோயில்களில் மேலான தாகும். வழிபடுவோர் முதலில் தேவாசிரிய மண்டபம் தரிசித்த பின்னர் தான் கோயிலுக்கு உள்ளே செல்ல வேண்டும். திருக்கோயில் திறப்பதற்கு முன் தேவாரம் பாடித்தான் கதவு திறக்க வேண்டும் என்று கல்வெட்டுச் செய்தி கூறுகின்றது. இதற்காக சகாஜி மன்னன் நிலங்கள் மான்யமாக அளித்துள்ளார்.

## வரலாறும் - வழிபட்டார் பேறுகளும்:

சுந்தரர் திருத்தொண்டத் தொகை தருதற்கு, அடியார் பெருமையை விளக்கியது இத்தலமே. இத்தலத்துப் பிறந்தார்கள் அனைவரும் சிவகண நாதர்களாகத் திகழ்கின்றனர். திருக்கயிலை வீற்றிருந்த சிவபெருமான் திருக்கணத்தார் பெருகிய சீர்த் திருவாரூர்ப் பிறந்தார்கள் ஆதலினால் எனப் பெரிய புராணம் பேசுகிறது. பூமிதேவிக்கு மூலாதாரத் தானமாய் இருப்பது. நிறை செல்வத் திருவாரூர், தேராருந் திருவாரூர் என்பன திருவாரூரின் பல திறப்பட்ட சிறப்பினையறிவிக்குஞ் சான்றுகள். இத்தலம் திருமகள் தவஞ்செய்தது. கமலை பராசக்தி தவம் புரிவது. பரவை நாச்சியார் அவதாரத்தலம். இசைஞானியார் பிறந்த தலம். முசுகுந்த சோழன் ஆண்டது. அன்பர்கள் தம் மனத்திலே ஆரூரை நினைக்கின்ற காலத்து மனு மன்னன் செங்கோல் ஆட்சி முறைதான் முன்னெழும் எண்ணமாக இருக்கும்.

தேவலோகத்திலுள்ள மூன்றரைக் கோடி தீர்த்தங்களும் பெருஞ் தவஞ்செய்து தியாகேசன் திருவருளால் இத்தலத்தை (திருவாரூர்)யடைந்தன. இத்தலத்தில் சிவபுண்ணியம் செய்தவர்கள், இம்மையில் எல்லாப் போகமும் இனிது துய்த்து, மறுமையில் பெரும்பேறு எய்துவர். இத்தலத்து இருந்து மந்திர தியானம் செய்பவர்களுக்கு ஒன்று பத்தாகப் பலன் ஏறுவதால் அருள் மிகப் பெறுவர். தானம், தருமம் முதலியன செய்வோர்களும் வானுலக இன்பத்தை வெறுத்துச் சிவஞானப்பேறு எய்துவர் என்று புராணம் கூறுகின்றது. எண்ணில்லாத பாவங்களைச் செய்தவர்களும் இத்தலத்தையடைந்தால் முக்தி பெறுவது துணிவு. இழிகுலத்தவர் இத்தலத்துவரின் சிந்தை தூய்மையுற்றுத் தொழுகுலத்தவராவர்.

இத்தலத்தை ஒருமுறை நோக்கினாலும், அடைய எண்ணினாலும், தீண்டினாலும் இடையறாப் பிறவிக்கடல் நீங்கி இன்ப வாழ்வு எய்தும். ஆதலால் இத்தலத்திற்கு ஒத்ததும் உயர்ந்ததும் இல்லை என்றும், இணை இதற்கு இதேயாகும் என்றும் இயம்புகிறது திருவாரூர்ப் புராணம். பிறந்தால் முக்திதரும் தலம் என்பதனால் பல அன்பர்கள் இத்தலத்து இடைவிடாது பத்து மாதம் தங்கி அப்பேற்றினை அடைவர். இது கர்ப்பவாசம் என்று இத்தலத்துச் சிறப்பில் பாராட்டப் பெறுகின்றது. இத்துணைச் சிறப்பினையும் ஒரு சேரத் தெரிவிக்கின்றது. வானவர்கள் துதி செய்ய நோக்கும் திக்கெலாம் நிறைந்த புகழ்த் திருவாரூர் என்பது அருள்வாக்கு.

### கோயில் வேறு பெயர்:

திருமூலட்டானம் (மூலாதாரத்தை குறிக்கும் ஊர் கோயில் ஆனதால் மூலட்டானம்). பூங்கோயில் (பூமி தேவியின் இதயக் கமலமாதலின் பூங்கோயில்).

### மனுநீதி கண்ட சோழன் :

சோழ நாட்டில் சூரிய குலத்தவர்களாகிய சோழ அரசர்கள் தலைநகர் ஐந்தனுள் ஒன்றாகியும் காவல் கடவுளாகிய திருமால் மனைவி இலட்சுமியால் பூசிக்கப்பட்டதாயும், பிரும்மாவின் சரீரத்திற்குப் பிரமாண்டத்திற்கு மூலாதாரத் தலமாகவும் உள்ளது திருவாரூர். அத்திருவாரூரின் கண் அரசாட்சி நடத்திய அரசர்களுள் மனுநீதிகண்ட சோழன் ஒருவர். அவர், உயிர்களுக்கெல்லாம் கண்ணும் உயிரும் போன்றவர். வன்மீகநாதச் சிவபெருமானுக்கு நிபந்தம் அமைத்துச் சிவாகம விதிப்படி பூசை நடத்துவிப்பார்.

அவர் செய்த புண்ணியப் பயனாக ஒரு புத்திரன் அவதரித்தான். அவன் பெயர் வீதிவிடங்கன். அவன் பலகலைகளையும் கசடறக் கற்று வல்லவனாகி அறிவு ஒழுக்கங்களில் சிறந்து விளங்கினான். ஒரு நாள் வீதிவிடங்கன் மாளிகையிலிருந்து புறப்பட்டுத் தேரிலேறி வீதியில் சென்றான். செல்லும் போது வீதியிலே ஒரு பசுங்கன்று துள்ளியோடிப் போய்த் தேர்க்காலினடியில் அகப்பட்டு இறந்தது. (இளங்கன்று பயம் அறியாது என்பதற்கிணங்க) அதைக் கண்ட தாய்ப் பசு அலறிச் சுழன்று ஓடியது. அரசகுமாரன் செய்வதறியாது மனம் தடுமாறினான். நான் பிறந்தது என் தந்தையாருக்கு இப்பழி வந்தெய்துவதற்கோ என்றான். என் தந்தை அறியும் முன் பிராயச் சித்தம் செய்து கொள்ள வேண்டுமென்று குருமார்களிடம் சென்றான். கன்றை இழந்த பசு துயரம் சகிக்கமாட்டாது பெருமூச்செறிந்து கண்ணீருடன் அரண்மனையடைந்து வாயிலில் கட்டிய ஆராய்ச்சி மணியைத் தன் கொம்பினால் அடித்தது. அதுகேட்ட மனுநீதி கண்ட சோழன் வாயிலை அடைந்தான். வாயிற்காவலர் எதிர்வந்து பசு ஆராய்ச்சி மணியை அடித்தது என்றனர். விபரம் அறிய மந்திரிகளைக் கோபித்துப் பார்க்க, அம் மந்திரிகளில் ஒருவர் அரச குமாரன் தேரில் செல்லும்போது, இந்தப் பசுவின் கன்று தேர்க்காலில் அகப்பட்டு இறந்தது என்றனர். இதைக் கேட்ட மனுநீதி கண்ட சோழன் தன் செங்கோல் முறையில் கன்றை இழந்த தாய்ப் பசுவைப் பார்த்துச் சோர்ந்து நிலை குலைந்தார். மந்திரிகள் அரசனை வணங்கி மனம் தளர வேண்டாம். அரசகுமாரன் செய்த கோவதைக்குத் தரும நூல்களில் விதிக்கப்பட்ட பிராயச் சித்தத்தைச் செய்வதே தருமம் என்றார்கள். அதற்கு அரசன் நீங்கள் கூறும் பிராயசித்தம் கன்றை இழந்து துயருறும் இப்பசுவினது நோய்க்கு மருந்தாகுமா. நான் ஏக புத்திரனை இழக்கிறேன் என்று கருதி நீங்கள் எல்லோரும் சொல்லிய இவ்வார்த்தைக்கு நான் இசைந்தேனாயின் நடுவுநிலைமை தவறியதாகதா? உயிர்களுக்குத் தன்னாலும் தன் பரிவாரத்தாலும், பகைவராலும், கள்வராலும், உயிர்களாலும் எய்தற் பாலனவாகிய ஐந்து பயத்தையும் நீக்கி அவைகளைக் காப்பவனன்றோ அரசன் எனப்படுவான். நான் என் புத்திரன் செய்த பாவத்தின் பொருட்டு அவனைக் கொல்லேனாயின் ஆதி காலத்திலிருந்த மனுவினால் செய்யப்பட்ட தரும நூல் விதி இப்பொழுது மனு என்னும் சோழனால் நீக்கப்பட்டது என்னும் பழிமொழி உலகத்தில் நிலை பெறாதா என்றார். அப்போது மந்திரிகள் அரசனிடம் இப்பூமியின் கண் இது போல முன்னும் நடந்திருக்கிறது.

ஆகவே, இக்குற்றத்தின் பொருட்டு உம்முடைய மகனைக் கொல்லுவது முறையன்று. தருமநூலில் விதிக்கப்பட்ட பிராயச்சித்தம் செய்வதே பண்டுதொட்டு ஆன்றோர் வழங்கிய வழக்கு என்றார்கள். அதற்கு மனுநீதி கண்ட சோழன் நீங்கள் தரும நெறியைச் சிறிதும் சிந்திக்காமல் பேசுகின்றீர்கள். எந்த உலகத்தில் எந்தப் பசு, கன்றை இழந்து துன்பத்தினால் ஆராய்ச்சி மணியை அடித்தது? சொல்லுங்கள், அன்றியும் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திருவாரூரிலே பிறந்த உயிரைக் கொன்றானே. ஆதலால் அவனைக் கொல்வதே துணிவுப் பொருள் என்று சிந்தியுங்கள். நான் இப்பசுவினது துயரத்தைத் தீர்க்க வல்லேன் அல்லன். ஆதலால் இப்பசு தன் கன்றை இழந்து துயருறுவது போல நானும் என் புத்திரனை இழந்து துயருறுதலே நீதி என்று சொல்லி எவ்விடத்தும் எக்காலத்தும் எவராலும் செயற்கரிய செய்கையைச் செய்யத் துணிந்தார். உடனே மந்திரிகள் அஞ்சி அவ்விடத்திலிருந்து அகன்றார்கள்.

மனுநீதி கண்ட சோழர் தம்முடைய புத்திரனை அங்கு வரவழைத்து ஒரு (உபயகுலாமலன்) மந்திரியைப் பார்த்து நீ இந்தப் பிள்ளையை வீதியிலே தேர்க்காலில் கீழே கிடத்தித் தேரை நடத்தக்கடவாய் என்று ஆணையிட்டார். அம்மந்திரி போய் அவ்வாறு செய்யாது தன் உயிரை மாய்த்துக் கொண்டார். அதனை உணர்ந்த மனுநீதி கண்ட சோழன் தம்முடைய புத்திரனைத் தாமே வீதியில் கொண்டு சென்று தம்முடைய குலத்திற்கு ஒரே புத்திரன் உளன் என்பதைச் சிந்தியாது, தரும வழியில் நடப்பது ஒன்றையே சிந்தித்து அவனைக் கீழே கிடத்தி அவன் மார்பிலே தேர்ச்சக்கரம் அழுத்தும்படி தேரைச் செலுத்தினார்.

மனுநீதி கண்ட சோழர் செய்த இச்செயற்கரிய செயலைக் கண்டு மனிதர்கள் கண்ணீர்மழை பொழிந்தார்கள். சர்வலோக நாயகராகிய தியாகேசர் இடப வாகனத்தில் அமர்ந்து தேவர்களும் பூதர்களும் புடைசூழ எழுந்தருளி வந்து முன்னின்றார். மனுநீதி கண்ட சோழர் அவரைத் தரிசித்து வணங்கிப் பேரானந்தப் பெருங்கடலில் மூழ்கினார். அப்பொழுதே பசுங்கன்றும், அரசகுமாரனும், மந்திரியும் உயிர் பெற்றெழுதலும் அது கண்ட சோழர் தாம் இத் தன்மையினர் என்று அறியாதவராயினர். அவர் தமது பாதத்தில் வணங்கிய புத்திரனைத் தழுவி மனம் மகிழ்ந்தார். பசு தன்னை அணைந்த தன் கன்று உண்ணும் வரையில் பாலைப் பொழிந்து தனக்குண்டான துன்பம் நீங்கிற்று. தியாகேசர் மனு நீதிகண்ட சோழருக்குத் திருவருள் செய்து மறைந்தருளினார். இதைச் சேக்கிழார் பெருமான்.

"தண் அளிவெண் குடை வேந்தன் செயல்கண்டு அறியாது
மண்ணவர் கண் மழை பொழிந்தார் வானவர்பூ மழை சொரிந்தார்

அண்ணல் அவன் கண் எதிரே அணிவீதி மழ விடைமேல்
விண்ணவர்கள் தொழ நின்றான் வீதிவிடங்கப் பெருமான்"

மனுநீதியின் சிறப்பை வடலூர் வள்ளலார் இராமலிங்க அடிகள் தனது மனுமுறை கண்ட வாசகத்தில்

"எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும்
தம்முயிர் போல் எண்ணி உள்ளே
ஒத்துரிமை உடையவராய் உவக்கின்ற
உயர்நிலை வேண்டும்" என்றார்.

## ஸ்ரீ தியாகராஜர் வரலாறு :

திருமால் தனக்கு ஒரு ஆண் மகன் வேண்டி சிவபெருமானை நோக்கிக் கடுந்தவம் புரிந்தார். இறைவன் திருவருட்சக்தியொடு வெளிப்பட்டதைக் கண்ட திருமால் இறைவனை அழகிய புத்திர பாக்கியம் அருள வேண்டும் என்றார். பெருமான் அன்பு கூர்ந்தார். ஆனால் இடப்புறத்திலுள்ள உமாதேவியை வணங்கவில்லை. உமாதேவியார் சினங்கொண்டு இறைவன் திருவருளால் நீ புத்திரன் எய்தினும் அவன் விதி வழியால் வலிய அழிக என்று சாபம் கொடுத்து மறைந்தனர். திருமால் செய்வது இன்னதென்று அறியாது நிற்கையில் திருவருள் உணர்த்த தன் எண்ணப்படி சிவபெருமானையும், உமாதேவி, குமாரக்கடவுளையும் ஒரே ஆசானத்தில்எழுந்தருளுவித்து ஆகம விதிப்படிப் பூசனை செய்தனர். சிவ பெருமான் உமாதேவி, கந்தனை வணங்கிய பின்னர் இறைவன் காட்சியுளித்தார். உமாதேவி மகிழ்ந்து என் சாபம் தடைபடாது, ஆனால் உன் மகன் நெருப்புக் கண்ணால் வெந்து பின் பிழைப்பான் என்று சாபவிடை தந்தனர். மகிழ்ந்த திருமால் இதே சோமாஸ்கந்த திருக்கோலத்தோடு எப்போதும் எழுந்தருளி இன்னருள் புரிந்து இந்த உலகம் முழுவதும் உய்தல் வேண்டும் என்று வேண்டினான். இறைவன் அருள் பாலித்தார். பின்பு திருமால் தனது நெஞ்சக் கோயிலில் அம்மூர்த்தியை நிறுவி வழிபாடாற்றி வந்தனர். திருமால் நெஞ்சகத்து எழுந்தருளி உச்சுவாச, நிச்சுவாசத்தால் (மூச்சுக் காற்றை உள்ளிழுத்து வெளியிடுதல் ஆகும்) ஆகிய அசைவால் பெருமானும் அசைந்தாடி ஆனந்தங்கொண்டு திருமாலுக்குத் திருவருள் கூட்டுவித்ததால் இந்த நடனம் அஜபா நடனம் எனப்படும்.

அப்போது தேவலோகத்தில் அசுரர்கள் தொல்லையும் கொடுமையும் செய்தனர். இந்தத் துன்பம் தாங்காது இந்திரன் பாற்கடலை அடைந்து திருமாலிடம் நிகழ்ந்தவற்றைக் கூறினான். மனம் இரங்கிய திருமால் என் உயிருக்கு உயிராய் இருக்கின்ற ஒரு பரம்பொருளைத் தருகின்றேன். அதை நீ வைத்து அன்புடன் பூசனை செய்தால் பெருமான் அருளால் வெற்றி கிட்டும் என்று அருளி, சோமாஸ்கந்த மூர்த்தியாகிய இறைவன் தியாகராஜரைத் தந்தனர். பெற்றுக் கொண்ட இந்திரன், வழிபாடு செய்து அசுரர்கள் துன்பத்திலிருந்து அகலப்பெற்றார்.

அப்போது திருவாரூர் செய்த பெருந்தவத்தால் மீண்டும் வலன் என்னும் அசுரன் ஒருவன் வானுலகில் படையெடுத்து இந்திரனோடு போர் செய்து இந்திரனைத் தோற்றோடச் செய்தான்.

இது இவ்வாறு இருக்க. பூமியில் நீர்வளம் செறிந்த சோழ நாட்டின் தலைநகரமான திருவாரூரில் முசுகுந்தன் என்னும் அரசன் ஆண்டு வந்தான். அவன் முற்பிறவியில் ஒரு குரங்காகத் திருக்கைலாயத்தில் உள்ள பூஞ்சோலையில் இறைவனும், இறைவியும் எழுந்தருளியுள்ள போது அவர்கள் மீது விழும் வண்ணம் வில்வத் தளிர்களைச் சிந்தி வந்தான் அருட்கடலாகிய இறைவன் அறியாது செய்த நற்செயலுக்கு மகிழ்ந்து மறு பிறவியில் அரசனாக உலகை ஆளச் செய்தனர். மறுபிறவியில் குரங்கு முகமாக (முசுகுந்தன்) சோழ அரசனாக அவதரித்தான். முசுகுந்தன் இந்திரனுக்கு நட்பினன். இந்திரன் தன்னை எதிர்த்துப் போர் செய்யும வலனை அழிக்க முசுகுந்தன் உதவியை நாடினான். திருவருள் வலியாலும் வெற்றி பெற்றனர். மகிழ்ந்த இந்திரன் முசுகுந்தனைப் பூலோகத்திற்கு அனுப்பும் போது வேண்டிய பரிசுகளை அளித்தான். மேலும், மண்ணுலக மன்னா! இந்திர உலக வாழ்வு உன்னால் எனக்கு நிலைத்தது. உனக்கு நான் செய்யக் கூடிய கைம்மாறாக என்ன செய்ய வேண்டும் என்றார். அப்போது முசுகுந்தன், தியாக வினோதனர், அரவக்கிண் கிணிகால அரசரைக் கண்டு ஆனந்தபரவசனாய் தன்னை மறந்து சிவமாய் நினைத்து நின்றான்.

அன்பு வலைப்பட்ட தியாகேசப் பெருமான் இந்திரன் அறியாதபடி இவன் மட்டும் காணக் காட்சியளித்தனர். முசுகுந்தனுக்கு, முற்பிறவியின் எண்ணங்களும், செயல்களும் முறையே நினைவிற்கு வந்தன. இறைவன், இவன் காதில் மட்டும் கேட்க என்னைத் திருவாரூர் கொண்டு செல், பூசனை செய் என்று ஆணை தந்தனர். இந்திரன் மீண்டும் உனக்கு என்ன வேண்டும்?

கேள். நான் தருகிறேன் என்றான். அப்படியாயின் நீ வழிபடும் தியாகப்பெருமானை அளித்திடுக என்று முசுகுந்தன் வேண்டினான். அதற்கு இந்திரன் இம்மூர்த்தி என்னுடையதன்று, திருமால் வழிபட்டது. அவரது அனுமதி பெற்றுத்தான் தர வேண்டும் என்றனர். முசுகுந்தன் திருமாலைக் கேட்டாவது கொடுக்க வேண்டும். பெற்றால்தான் நான் போவேன் என்று வற்புறுத்தினான். இந்திரன் அவ்வாறே பாற்கடல் சென்று திருமால் அனுமதி பெற்று வந்தவனாய், ஆன்மார்த்த மூர்த்தியை அகல மனமில்லாதவனாய், அது போன்று ஆறு மூர்த்திகளைச் செய்வித்து முசுகுந்தனுக்குக் காட்டினான். திருவருள் துணை செய்ய முசுகுந்தன் உண்மைத் தியாகரைத் தருக எனக் காட்டிக் கேட்டனர். இந்திரன் செய்வதறியாது திகைத்துச் சிவமூர்த்தியாகிய உண்மைத் தியாகரை அளித்தான், முசுகுந்தன் அம்மூர்த்தியைத் திருவாரூருக்கு எழுந்தருள் வித்தனன். வன்மீகருக்குத் (புற்றிடங் கொண்டாருக்கு) தென்பால் அமர்த்தி அருளினான். அங்ஙனம் அவன் எழுந்தருள்வித்த அந்த நட்சத்திரத் (மாசி மாதம் அஸ்தம் நட்சத்திரம்) தன்று கொடியேற்றுவித்து விழாக் கொண்டாடினான்: பங்குனி உத்திரத் திருநாளில் நீர்விழா நிகழ்த்தி வைத்தான். இந்திரன் மற்ற ஆறு மூர்த்திகளையும் மீண்டும் முசுகுந்தனிடம் அளித்தான். அவை முறையே (1) திருக்காரவாயில் ஆதிவிடங்கர் - குக்குட நடனம் (2) திருக்குவளை - அவனி விடங்கர், பிரம்ம நடனம் (3) திருவாய்மூர் - நீலவிடங்கர், கமலநடனம் (4) வேதாரண்யம் (எ) திருமறைக்காடு - புவனிவிடங்கர் , ஹம்ச பாத நடனம் (5) காயாரோகணம் (எ) நாகப்பட்டினம்- சுந்தர விடங்கர், பாரவாரத்தரங்க நடனம் (6) திருநள்ளாறு - நகவிடங்கர் உண்மத்த நடனம், ஆகிய இடங்களில் ஸ்தாபித்தனன். இந்த இடங்கள் சப்தவிடங்கத் தலங்கள் என்று அழைக்கப்படுகின்றன. விடங்கர் என்றால் உளியினால் செதுக்கப்படாதவர் மற்றும் அழகன், தானே சுயம்புவாகத் தோன்றியவர் என்று பொருள். திருமால் மார்பில் அசைந்தாடும் இறைவன் இருந்ததை "பையம் சுடர்விடு நாகப் பள்ளிக் கொள்வான் உள்ளத்தானும்" - என்கிறார் அப்பரடிகள்.

**வழிபாடு :**

காலை 6.00 மணிக்குத் திருப்பள்ளி எழுச்சியாக நீலோத்பலாம்மாள் சந்நிதியிலிருந்து பள்ளியறை புறவீடு கொண்டு சொக்கர், ஜோதியுடன் பக்தர்கள் சூழத் தியாகர் சந்நதிக்குப் பல்லக்கில் வருவார். சோமவாரம் மற்றும் சுக்ரவாரத்தில் 18 1/2 கிலோ எடை உள்ள வெள்ளிப் பல்லக்கில் சேவை சாதிப்பார். வரும் பொழுது கொடிமரம் பக்கம் கோ பூஜை நடைபெறும். தியாகருக்குப் பால் நிவேதனம் மற்றும் வன்மீகருக்குத் தீபாராதனை நடைபெறும். (உஷாகாலம்).

காலை 8.00 மணிக்குக் காலை சந்தி, மரகத விடங்கருக்கு முதற் கால அபிஷேகமும், வன்மீகருக்கு திருமஞ்சனமும், ஆராதனையும் மற்றும் தியாகருக்கு ஆராதனையும் நடைபெறும்.

உச்சிக்காலம் பகல் 12.00 மணிக்கு வன்மீகருக்கு அபிஷேகமும், மரகதவிடங்கருக்கு 2ஆம் கால அபிஷேகமும் வன்மீகர் தியாகருக்கு நெய்வேதிய தீபாராதனையும் நடைபெறும்.

பகல் 12.30 பக்தர்களுக்கு அன்னதானமும், அதன் பின்னர் மாலை 5.00 மணிவரை நடைசாத்தும் இருக்கும்.

மாலை 6.00 மணிக்குத் திருவந்திக் காப்பு எனப்படும் சாயரட்சை நெய்வேதியத்துடன் தியாகருக்கு நடைபெறும். அலங்கார தீபம் முடிந்தவுடன் 5, தனித்தனி தட்டுகளில் மாவு விளக்குகள் எற்றி அவற்றையெல்லாம் ஒரு பெரிய தாம்பாலத்தில் வைத்து பின்னர் ஒவ்வொரு தட்டிலும் மாவு விளக்கில் கற்பூரம் கொளுத்தி இறைவனுக்கு காட்டுவார்கள். இதன் பொருள் (1) நம் மூல ஆதாரத்தில் உள்ளோம் இதை தவிர்த்து, 5 ஆதாரங்களில் ஒளி இருக்கிறது என்ற விளக்கத்துக் காகத்தான் அரிசி மாவில் விளக்கு செய்து ஏற்றி காண்பிக் கிறார்கள். அந்த ஒளியை ஒரு சேர ஒளிபெறச் செய்தால் ஞானமா ஒளிவீசும். மற்றுமொரு காரணம் சிவபெருமானுக்கு ஒளிமயமான ஐந்து முகங்கள் உள்ளன. அவைகளை ஆராதிக்கும் பொருட்டு அதாவது 1. ஈசானம், 2. தத்புருஷம், 3. அகோரம், 4. வாமதேவம் 5, சத்யோஜாதம் என ஐந்து முகங் களுக்கும் பச்சை மாவில் தனித்தனியாக ஐந்து குழிகளாக செய்து நெய் தீபம் ஏற்றி அத்துடன் கற்பூரம் சேர்த்து ஆராதிக்கப்படுகிறது. இந்த ஆலயத்தில் எந்த சந்நிதியிலும் 5 கிளை தீபம் காட்டும் பழக்கம் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. சோடச உபசாரம் முடிந்து சாயரட்சையின் போது 12 திருமுறையிலிருந்தும் பல பதிகங்களை ஓதுவார் மூர்த்தி பாடுவார். பிறகு தமிழ் அர்ச்சனை (திருத்தாண்டகம்) முடிந்து நெய்தீபம் காட்டுவார்கள். சாயரட்சை முடிந்ததும் பிரகாரத்தைச் சுற்றி ஒளிப்பந்தத்துடன் (தீவட்டி) மத்தளத்தை அடித்துக்கொண்டு தாளத்துடன் செல்வார்கள். அதாவது தேவர்கள் சாயரட்சை தரிசனம் செய்த பின்னர் அவர்களை மரியாதை நிமித்தம் வழியனுப்புவதாக மரபு.

II-ம் காலம் இரவு 7.30 மணிக்கு 2-ம் காலம் வன்மீகர், மரகதவிடங்கர் அபிஷேகமும், (தியாகர், வன்மீகர் நெய்வேதிய தீபாராதனையும்) நடைபெறும்.

இரவு 8.30 மணிக்கு நடைபெறும் அர்த்தசாம பூஜையில் வன்மீகர், தியாகருக்குத் தீபாராதனை நடைபெறும். தியாகர் சந்நதியிலிருந்து சொக்கர், பல்லக்கில் ஒளிப்பந்த .வெளிச்சத்துடன் பள்ளியறை (நீலோத்பலாம்மாள் சந்நிதி) செல்வார். அங்கே திருஊசல் நடைபெறும். பூஜை செய்ய உள்ள குருக்களை நயனார் என்பார்கள். அவர் பட்டு வேஷ்டி, பட்டு அங்கி அணிந்து, சுவாமிக்கு (மகாராஜா ஆனதால்) நேர் எதிரில் நின்று பூஜிப்பார். இவருக்கு உதவியாக உள்ள அணுக்கத் தொண்டர்களை பிரம்மராயர் என்பார்கள்.

## திருவாரூரின் வேறு பெயர்கள் :

(1) ஆடகேஸ்வரம் (2) கலிசெலா நகரம் (3) சத்தியபுரம் (4) சமற்காரபுரம் (5) தேவயாகபுரம் (6) தேவாசிரியம் (7) முசுகுந்தபுரம் (8) மூலாதாரபுரம் (9) ஸ்ரீ நகரம் (10) ஸ்கந்தபுரம் (11) கமலை (12) வன்மீகபுரம் (13) கமலாலயம் (14) சக்திபுரம் (15) தேவாசிரியபுரம்.

## திருவாரூர் பெயர்க்காரணம் :

திருமகள் வருணன் மகளாகத் தோன்றி மதுகை டபர்களை வென்று திருமாலை அடைய வேண்டி வன்மீக நாதரை வழிபட்டு, வரம் பெற்றுத் திருமாலை மணந்து கொண்டதுடன் தன் பெயரால் இவ்வூர் வழங்க வேண்டும் எனக் கேட்டதால் கமலாலயம் (அ) திருவாரூர் ஆயிற்று. (திரு-லட்சுமி ஆர். பூமிதேவி பூஜித்தது) மற்றும் ஆடக சேத்திரம். ஆர் என்பதற்கு மிகுந்த என்னும் பொருளும் உண்டு.

## தீர்த்தம் சிறப்பு :

1. கமலாலயம் (தேவ தீர்த்தம்) பக்கம் - 35
2. சங்கு தீர்த்தம் (அமுத தீர்த்தம்) ஆயிரங்கால் மண்டபம் அருகில்உள்ளது. பக்கம் - 53
3. வாணி தீர்த்தம் (சரஸ்வதி தீர்த்தம்) மேற்கு பெரிய பிரகாரத்தில் சித்திர சபை மண்டபத்திற்கு எதிரில் உள்ளது பக்கம் - 48.
4. கயா தீர்த்தம் (ஊருக்கு வடகிழக்கே கேக்கரையில் உள்ளது.)
5. செங்கழிநீர் ஓடை கோயிலுக்கு கிழக்கே 1/2 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது.

   தெற்கே ஓடம்போக்கி ஆறும், வடக்கே சுக்காணாறும் உள்ளது.

**ஸ்தலச் சிறப்பு :**

ஆரூரில் சிவன் ஆட்சி செய்து 364 திருவிளையாடல்கள் புரிந்து உள்ளார் எனக் கூறுவர். ஆரூர் (விராட புருஷன்) மூலாதாரத்தலம். திருமகள் தவஞ்செய்து பேறுபெற்றது (காமன்). பஞ்ச பூதத்தலத்தின் பிருத்வித்தலம் (சிவன் தன்மை) நவக்கிரகத்தலத்தில் சந்திரன் ஸ்தலம். கமலை என்னும் பராசக்தி தவம் செய்யும் இடம். சக்திபீடம் 64க்கும் ஆதாரநிலை. கமலாம்பாள் பெயரோடு கமலாலயபுரம் என்றும். சக்திபீடம் ஆலயம் பெற்றதால் ஸ்ரீபுரம் என்றும், எமபயம் நீங்குவதால் கலிசெலா நகரம் என்றும், 21 வீதிகள் 7 கோபுரம், 5 பிரகாரங்கள் கொண்ட அமைப்புக்குக் காரணமான அரசர் பெயராக சமஸ்தானபுரம் என்றும், மனுநீதி சோழன் தராசில் ஆரூரை நிறுத்தியதால் க்ஷேத்திரவாபுரம் என்றும், திருமகள் வழிபட்டதால் திருஆரூர் என்றும், தேவர்கள், பிரம்மன் தலைமையேற்று யாகம் செய்ததால் தேவயாகபுரம் என்றும், சிவனடியார்கள் குழுமியுள்ளதால் தேவாசிரிய புரம் என்றும், முசுகுந்தன் இந்திரனுக்கு உதவி செய்ததால் முசுகுந்தபுரம் என்றும், மூலாதாரபுரம் என்றும், புற்றிடம் கொண்ட பெருமாள் எழுந்தருளியுள்ளதால் வன்மீகபுரம் என்றும் விளங்குகிறது மற்றும் தண்டியடிகள் பிறந்து வாழ்ந்த ஊர். தண்டி என்றால் தடி (கம்பு) என்று பெயர். தியாகேசர் அஜபா நடனம் புரிய உள்ள வெள்ளியிலான புள்ளத்தண்டு என்றாலும் தடி. ஆகவே ஆரூர் தடித்திருவாரூர் என்றும் சொல்லுகிறார்கள். புறாவிற்காக தன் உடலை தியாகம் செய்த சிபி சக்கரவர்த்தி திருவாரூரை தலைநகரமாக கொண்டு ஆட்சி செய்தார். காஞ்சிபுரம் காமாட்சியம்மன் உற்சவ விக்கரகத்துடன் ஆரூர் ஆலயத்தில் வைத்து வழிபட்டதாகவும், பின்னர் விக்கரகத்தை தஞ்சைக்கு எடுத்து சென்று பங்காரு காமாட்சியம்மன் ஆலயம் அமைத்ததாகவும் வரலாறு உண்டு. 15-க்கு மேற்பட்ட நாயன்மார்கள் வாழ்க்கையில் நடந்த பல அற்புதங்கள் இவ்வாலயத்தோடு பின்னி பிணைந்து கிடக்கின்றது. பரவை நாச்சியார் அவதாரத்தலம். மணிவாசகர்க்கு ஞானம் நல்கியதலம், பெரியபுராண ஆக்கத்திற்கு முதன்மையான அடியார்களின் பெருமை விளக்கும் சுந்தரரின் திருத்தொண்டத் தொகை பாடக் காரணமான ஊர்.

### வீதிகளின் பெருமை :

ஈசன் சுந்தரர்க்காகப் பரவை நாச்சியார் ஊடலைத் தீர்க்க இருமுறை ஆரூர் வீதிகளில் தேவர்கள் பின் தொடர நடந்ததால் வீதிகளுக்கும் பெருமை. 1. அடி முடி நேடிய திருவீதி (2) செந்தாமரை நாறிய வீதி 3. பொன் பரப்பிய திருவீதி. 4. பரமன் பாதம் வீதி என்று பெருமைகள் பலவுண்டு.

### அவதரித்து வாழ்ந்தவர்கள் :

1. தருமை ஆதீனத்தின் குரு முதல்வரான கமலை ஞானப்பிரகாசர் 2.தமிழ்த்தென்றல் திரு.வி.கல்யாண சுந்தரனார், 3. சென்னை உயர்நீதிமன்ற முதல் தலைமை நீதிபதி சர்.டி. முத்துசாமி அய்யர், கர்நாடக சங்கீத மும்மூர்த்திகள் பிறந்து வாழ்ந்தது. 1. தியாகராஜர் (1767-1847) 2. முத்துசுவாமி தீட்சிதர் (1775-1847) 3. சியாமாசாஸ்திரி (1762 - 1827) 18 சித்தர்களில் கமல முனிவர் வாழ்ந்த இடம் இது.

### கமலை ஸ்ரீ ஞானப்பிரகாசர்:

**(கி.பி.1561)-16-ம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்)**

இவர் ஆரூர் செட்டித்தெரு இப்பொழுது (V.S. முதலியார் தெரு) பழுதைக்கட்டி ஞானப்பிரகாசர் திருக்குமாரர். இல்லற நெறியில் வாழ்ந்த கமலை ஞானப்பிரகாசர் இவர் இயற்பெயர் சிதம்பரநாத மாசிலாமணி. அற்புதங்கள் 1. ஒரு சமயம் தியாகேசர் அஜபாநடனம் ஆடிக்கொண்டிருக்கும்போது புள்ளத்தண்டு முறிந்ததாகவும் அக்கால் இவர்

"அண்ட முழதும் ஆழ்ந்து போகாமல் என்றும் போல
பண்டை நிலைநிறுத்தும் பாதனே - துண்டுபட்ட
அசபா நிருத்தம் அசையும் படித்தண்(டு)
இசையும் வகையருள்வாய் இன்று."

-- என்று பாடிய உடன் தண்டு உடனே கூடிற்று.

2. வேதாரண்யத்தில் ஒரு அந்தணர் தொழுநோயை தீர்த்தார். மதுரையில் ஒரு பட்டருக்கு கண் ஒளி பெறச் செய்தார். இவருடைய மாணாக்கர்களில் ஒருவர் நிரம்ப அழகிய தேசிகர் வழியில் துழாவூர் ஆதினம் தோன்றியது. இவர் கைலாயப் பரம்பரை ஸ்ரீ கண்ட பரமசிவம், நந்திதேவருக்கு அருளிய உபதேச மரபில் வந்தவர்.

இவரிடம் ஞான உபதேசம் பெற்று முதல் தருமை ஆதீன ஸ்தாபகர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் ஆவார். இவர் பெரியகோவில் சித்தீஸ்வரம் மேதா தெட்சிணாமூர்த்தி முன் சைவ சித்தாந்த ஞான உபதேசம் செய்து வந்தார். (கமலை என்றால் திருவாரூர்) கமலை ஞானப்பிரகாசர் திருமழவாடிபுராணம், திருவானைக்கா புராணம் தியாகராஜப்பள்ளு போன்ற நூல்கள் இயற்றியுள்ளார். இவரிடம் உபதேசம் பெற்ற தருமை ஆதீன குரு ஞானசம்பந்தர் 1. ஞானப்பிரகாச மாலை 2. சிவபோக சாரம் போன்ற நூல்கள் இயற்றியுள்ளார். இவைகள் பண்டார சாத்திரங்கள் (கருவூலம் ) எனப்படும்.

ஒரு சமயம் கமலை ஞானப்பிரகாசர் கோயிலிலிருந்து இருப்பிடம் செல்லும் போது குருஞான சம்பந்தர் ஒளிபந்தம் (தீவட்டி) எடுத்துச்சென்றார். அப்பொழுது இரவு நேரம் கமலை ஞானப் பிரகாசர் குருஞானசம்பந்தரை பார்த்து நில் என்று சொன்னார். குரு வார்த்தையைத் தட்டாமல் அப்படியே நின்றிருந்தார். அன்று இரவு பூராவும் மழை பெய்தது. ஆனால் குருஞான சம்பந்தர் உடம்பில் ஒரு துளி கூட மழை விழவில்லை. மறுநாள் கமலை ஞானப்பிரகாசர் மனைவி இதைப் பார்த்து குருபக்தியை உணர்ந்து பரவசம் அடைந்தார்.

தற்போது தருமபுர ஆதீனத்திற்குச் சொந்தமான இராஜன்கட்டளையில் 12.11.2003ல் ஸ்ரீ கமலை ஞானப்பிரகாசருக்கு திருவுருவச் சிலை அமைத்து குருவாரம் தோறும் சிறப்பு வழிபாடும், சொற்பொழிவும் நடைபெற்று வருகிறது. குருஞான சம்பந்தர் தன் குருவைக் கீழ்கண்ட பாடலால் போற்றுகிறார்.

கிடந்தாலும் ஞானப்பிரகாசன் என்பேன் கிடந்து எழுந்து
படர்ந்தாலும் ஞானப்பிரகாசன் என்பேன் பசியோடு பிணி
அடர்ந்தாலும் ஞானப்பிரகாசன் என்பேன் அந்த அந்தகனார்
தொடர்ந்தாலும் ஞானப்பிரகாசன் என்பேன் பிணைச்சொல் இல்லையே
(ஞானபிரகாச மாலை)

ஆசையறாய் பாசம் விடாய் ஆனசிவபூசை பண்ணாய்
நேசமுடன் ஐந்தெழுத்தை நீ நினையாய் -சீசீ
சினமே தவிராய் திருமுறைகள் ஓதாய்
மனமே உனக்கென்ன வாய் (சிவபோகசாரம்)

## தமிழ்த்தென்றல் திரு.வி.க :

திருவாரூர் திரு.வி.கல்யாணசுந்தரனார் தமிழ்மொழி வளர்ச்சி மற்றும் சைவத்திற்குத் தொண்டாற்றியவர். அவர் பெரிய புராணத்திற்கு அழகாக எளிமையாக உரை எழுதியுள்ளார். முதன் முதலில் பொங்கலுக்கு வாழ்த்து என்று அனுப்பியவர்.



மனுநீதிச்சோழன் - ஆராய்ச்சி மணி

## திருவாரூர் சர்.டி.முத்துசாமி அய்யர் :

திருவாரூர் சர்.டி. முத்துசாமி அய்யர், இரவில் தெருவிளக்கில் படித்து முன்னுக்கு வந்தவர். சென்னை இராஜதானியின் உயர்நீதிமன்றத்தில் முதல் இந்திய பிரதம நீதிபதியாகப் பணியாற்றியவர். இவர் நீதி வழங்குவதில் சிறப்பாகச் செயல்பட்டார். ஒரு முறை கோடை விடுமுறையில் ஓய்வு எடுப்பதற்காகத் தனது சக நீதிபதிகளுடன் உதகமண்டலம் செல்லத் தீர்மானித்தார். இரயில்வே முன்பதிவு செய்யப்பட்டு இவருக்கு மட்டும் (கூப்பே) ஒதுக்கப்பட்டது. இவருடன் வந்த பிற நீதிபதிகள் முதல் வகுப்பில் பயணம் செய்தனர். அவர்கள் பயணம் செய்த அந்த இரயில் இரவு 12.30 மணிக்கு மேல் மானாமதுரையில் உள்ள ஆங்கிலேயரான

மாவட்ட நீதிபதி, தலைமை நீதிபதியைப் பார்க்க அதே இரயிலில் உதகை செல்கிறார். அப்போது இரயில்வே ஸ்டேஷன் மாஸ்டர் உதவியுடன் தலைமை நீதிபதியாகிய திரு.முத்துசாமி அய்யர் இருக்கையை காலி செய்ய சொல்லி பக்கத்தில் உள்ள முதல் வகுப்பு இருக்கையில் அமரச் சொன்னார்கள். அதற்கு தலைமை நீதிபதி இரவு 12.00 மணிக்கு மேல் ஆகிவிட்டதால் (சட்டப்படி) முன்பதிவினை ரத்து செய்ய முடியாது என்றார். உடனே ஸ்டேஷன் மாஸ்டர் முன்பதிவினை எப்போது வேண்டுமானாலும் ரத்து செய்யலாம் என்றார். உடனே முத்துசாமி அய்யர் தான் தலைமை நீதிபதி என்பதைக் காட்டிக் கொள்ளாமல் ஆங்கிலேய நீதிபதியை பார்த்து இரவு 12.30 மணிக்கு மேல் முன்பதிவினை ரத்து செய்யச் சட்டத்தில் இடம் உண்டா என்று கேட்டதற்கு ஆம் ரத்து செய்யலாம் என்று கூறியதன் பேரில் தலைமை நீதிபதி தனது பெட்டி படுக்கையுடன் பக்கத்தில் உள்ள முதல் வகுப்பிற்கு மாறி உட்கார்ந்தார். வண்டி புறப்பட்டு காலை எட்டு மணிக்கு மேட்டுப்பாளையம் வந்தவுடன் தலைமை நீதிபதி ஒரு ஆங்கில நாளிதழ் வாங்கிப் படித்துக்கொண்டிருந்தார். தலைமை நீதிபதிக்குக் காபி சிற்றுண்டித் தேவையைக் கவனிக்க, மற்ற நீதிபதிகள் தலைமை நீதிபதி ஏறிய இரயில் பெட்டியைப் பார்த்தனர். ஆனால் அங்கு அவருக்கு பதிலாக ஆங்கிலேயரான மாவட்ட நீதிபதி இருந்தார். விபரம் அனைவருக்கும் தெரிந்தவுடன் தலைமை நீதிபதி இருந்த இடத்திற்குச் சென்று நடந்த செயலுக்கு வருத்தமும், மன்னிப்பும் கோரினர். ஆனால் தலைமை நீதிபதி இதனை பெரிது படுத்தாமல் அந்த ஆங்கிலேய மாவட்ட நீதிபதியைப் பார்த்து இரவு 12.30 மணிக்கு எனக்கு ஒரு தீர்ப்பு வழங்கினீர்கள். இது போன்று எந்தத் தருணத்திலும் பொதுமக்கள் எவருக்கும் இது போன்றதொரு தீர்ப்பினை வழங்கிட வேண்டாமெனக் கேட்டுக்கொண்டார்.

II. திரு. முத்துசாமி அய்யர் தினமும் காலையில் சென்னை மயிலாப்பூர் கபாலீஸ்வரர் கோயில் திருக்குளத்தில் நீராடுவது வழக்கம். அவ்வாறு ஒருமுறை குளத்தில் நீராடிக் கொண்டிருக்கும் போது ஒருவர் வந்து தனது தகப்பனாருக்கு திதி சிரார்த்தம் செய்ய வேண்டும் என்றார். முத்துசாமி அய்யருக்கு சமஸ்கிருத மந்திரம் தெரியும். இருந்தாலும் அவர் அந்த நபரிடம் நான்கு கரைகளிலும் வேறு யாராவது புரோகிதர் இருந்தால் அவரை வைத்துச் செய்யவும். ஒருவரும் கிடைக்காவிடில் என்னிடம் வரவும் என்றார். அந்த நபர் வேறு புரோகிதர் கிடைக்காததனால் தலைமை நீதிபதியை வைத்து புரோகிதம் செய்து அதற்கான சிறு காணிக்கையை நீதிபதி பெற்றார். அன்று காலை 10.00 மணிக்கு உயர் நீதிமன்றத்தில் முதல் வழக்கு பிரதம நீதிபதி முன் விசாரணைக்கு வந்தது. ஆனால் குறிப்பிட்ட

அந்த வழக்கில் ஏற்கனவே காலையில் குளக்கரையில் சிரார்த்தம் செய்து கொடுத்த அந்த (திருநெல்வேலி) நபர் முதல் வாதியாக வந்தார். இதனை கண்டு திடுக்கிட்டார் தலைமை நீதிபதி. இதனை வெளியில் காட்டிக்கொள்ள விரும்பாத முத்துசாமி அய்யர், நீதிமன்ற பதிவாளரை அழைத்து, தனக்கு உடல்நிலை சரியில்லை என்றும், எனவே அன்றைய தினத்திற்கு தான் விடுப்பு எடுத்துக்கொள்வதாகவும் தெரிவித்துவிட்டார். மேலும், இந்த குறிப்பிட்ட வழக்கை மட்டும் வேறு ஒரு நீதிபதி மூலம் விசாரித்து தீர்ப்பு வழங்க ஏற்பாடு செய்தார். ஆகவே எந்த ஒரு இக்கட்டான நிலையிலும் தனது நேர்மையை விட்டுக்கொடுக்காமல் திறம்பட நீதியை நிலைநாட்டிய பெருமை இவருக்கு உண்டு. என்னே நீதியின் மாண்பு.

**தியாகய்யர் :**

கர்நாடக சங்கீத மூர்த்தியாகிய தியாகய்யர் திருவாரூரில் பிறந்து 6.1.1847-ல் திருவையாற்றில் சமாதி கூடியவர். ஒரு சமயம் இவரிடம் இசை பயின்ற மாணவர்கள் ஒரு நாள் இரவு நாடகம் (கூத்து) பார்த்துவிட்டு வகுப்பிற்கு வரவில்லை. தியாகய்யருக்கு அளவு கடந்த கோபம் வந்து, இனி பயிற்சிக்கு வர வேண்டாம் என கூறினார்கள். மாணவர்கள் கலக்கம் அடைந்தனர். இதைக் கவனித்த அவர் மனைவி **"சாந்தமும் லேகா சௌக்கியமு லேது"** என்று தெலுங்கில் கூறினார். அதாவது கோபப்படுவதால் சாந்தம் இல்லையே. சௌக்கியம் அமைதி இல்லையென கூறியதன் பேரில் இதையே தியாகய்யர் கீர்த்தனையாக பாடினார். பிறகு சமாதானம் அடைந்து மாணவர்களை அன்புடன் நடத்தினார்.

மற்றொரு சமயம் தியாகய்யர் சென்னையைச் சார்ந்த போரூரிலிருந்து குன்றத்தூர் செல்லும் வழியில் கோவூர் என்ற ஊரில் ஒரு சிவ - ஸ்தலம் உள்ளது. அவ்வூர் கோவில் ஸ்வாமியின் பெயர் சுந்தரேஸ்வரர். கோவூரில் உள்ள சுந்தரேச முதலியார் என்பவர் பணக்காரர். அவரது வீட்டில் தியாகய்யர் தனது சீடர்களுடன் 10 தினங்கள் விருந்தினராக இருந்தனர். 10 தினங்கள் கழித்து முடிந்து தியாகய்யர் தனது சீடர்களுடன் ஊருக்கு செல்லும் சமயம் சுந்தரேச முதலியாரின் பணியாளர்கள் தியாகய்யர் சீடர்களிடம் தனது முதலாளி சுந்தரேச முதலியாரைப் பற்றி புகழ்ந்து ஒரு பாடல் கூட பாடவில்லை என்று வருத்தம் தெரிவித்தனர். ஆனால் தியாகய்யரின் சீடர்கள், தியாகய்யர், இறைவனைப் பற்றி குறிப்பாக இராமனைப் பற்றித்தான் கீர்த்தனை பாடுவார்கள். மனிதரைப் புகழ்ந்து பாடுவதில்லை என்றனர். இதற்குள் இருவர்களிடையே வாக்குவாதம் முற்றியதும், தியாகய்யர் நடந்த நிகழ்ச்சியைப் புரிந்துக் கொண்டு பல்லக்கிலிருந்து இறங்கி 10 பாடல்கள் பாடினார். கீர்த்தனையில் கடைசி வரி சுந்தரேசா என்று முடிகிறது.

இதில் ஒரு சிலர் சுந்தரேச முதலியாரைப் பற்றிப் பாடினது என்றும் மற்றொரு சாரார் சுந்தரேச சுவாமியைப் பற்றிப் பாடினார் என்கின்றனர். இன்று வரை இது விடை தேடும் வினாவாக உள்ளது. இவர் அதிகமாக பாடல்கள் பாடினாலும் இதுவரை 750 பாடல்கள் தான் கிடைத்து உள்ளன.

## முத்துசாமி தீட்சிதர் வரலாறு :

இவர் 1775 ஆம் வருடம் பங்குனி மாதம் ஸ்ரீ தியாகராஜர் வசந்த உற்சவத்தன்று (கார்த்திகை நட்சத்திரம்) ஆரூரில் ராமசாமி தீட்சிதர் மகனாகத் தோன்றினார். இவர் தியாகராஜரிடம் அளவுகடந்த பக்தி பூண்டிருந்தார். திருவாரூர் தியாகேசர் ஆலயத்தில் நாட்டிய சேவை செய்துவந்த கமலம் என்ற தேவதாசிப் பெண்மணி தீட்சிதரின் சிஷ்யை. அவர் நாட்டியம் ஆடுவதற்காக தீட்சிதர் ஸ்ரீ தியாகராஜர் மீது ஒரு வர்ணமும் ஸ்ரீ வன்மீகநாதர் மீது ஒரு தாருவும் இயற்றித் தந்துள்ளார். அவற்றிற்கு கமலம் தியாகராஜர் முன் அபிநயம் பிடித்து நடனமாடியுள்ளார். ஒரு நாள் தீட்சிதர் இல்லத்தில் சமையலுக்கு அரிசியும் இதர மளிகை சாமான்களும் இல்லை. தீட்சிதரின் மனைவி இதைப் பற்றி கமலத்திடம் வருத்தத்துடன் கூறினார். தம் குருநாதருக்குத் தெரியாமல் தனது கை வளையல்களை அடகு வைத்து அரிசி வாங்கிவருவதென கமலம் முடிவு செய்துவிட்டார். எப்படியோ இதை அறிந்துகொண்ட தீட்சிதர் கமலத்தை அழைத்து தம் மனவேதனையை வெளிப்படுத்தி கமலம். உன் வளையல்களை அடகு வைக்காதே. உன் நகைகளை எல்லாம் விற்றாலும் என் வறுமை தீரப்போவதில்லை நீ இப்படி செய்தால் பாட்டு சொல்லிக்கொடுத்துப் பிழைக்கின்றேன் என்ற கெட்டப்பெயர் வரும். எல்லாம் வல்ல பகவான்தான் நமக்கெல்லாம் சோறு போடுகின்றான். நான் தியாகேசன் பக்தன் ஒருநாளும் என்னை கைவிடமாட்டான் என்று கூறிவிட்டு ஆலயத்திற்குள் சென்றார். அங்கு தியாகராஜர் மீது எதுகுல காம்போதியில் தியாகராஜம் பஜரே என்று கிரிதியை உருவாக்கி உணர்ச்சிப்பொங்க பக்தியில் கரைந்து பாடிவிட்டு இல்லத்திற்குத் திரும்பினார். அங்கு அவருக்கு ஒரு நற்செய்தி காத்திருந்தது. அன்று காலை திருவாரூருக்கு ஒரு உயர் அதிகாரி வருவதாக இருந்ததால் உள்ளூர் அதிகாரி அவருக்கு விருந்துப்படைக்க அதிகமான மளிகை மற்றும் அரிசி வரவழைத்திருந்தார். கடைசி நேரத்தில் உயர்அதிகாரி வருகை ரத்தாகிவிட்டது. எனவே, அந்தப்பொருட்களை மகான் முத்துசாமி தீட்சிதர் இல்லத்திற்கு அனுப்பிவைக்குமாறு உத்திரவிட, அனைத்தும் தீட்சிதர் இல்லத்திற்கு வந்து சேர்ந்தன. இதை அறிந்த தீட்சிதர் நன்றி கண்ணீர் பெருக்குடன் தியாகராஜர் என்னை காத்துவிட்டார் என்று ஆனந்தத்துடன் தியாகராஜனே சமரட்சி தோகம் என்ற கீர்த்தனைப் பிறந்தது.

ஆரூர் கோயிலில் சுத்தமத்தளம் வாசித்த தம்பியப்பன் என்பவர் தீட்சிதரின் சீடர்களின் ஒருவர், ஒருசமயம் இவர் வயிற்றுவலியால் அவதிப்பட்டபோது தீட்சிதருக்கு சோதிட சாஸ்திரம் தெரியுமாதலால் தம்பியப்பனுக்கு குரு பார்வை போதாது, என்று பிரகஸ்பதி மீது கீர்த்தனை ஒன்றுபாடி வயிற்று வலியைப் போக்கினார். ஆரூர் கோயிலில் அனேக சந்நிதிகளில் பாடியும் கமலாம்பாள் பெயரில் நவாவர்ண கீர்த்தனையும் இயற்றி உள்ளார்.

குழிக்கரை பாவா வைத்திலிங்க முதலியார் தீட்சிதர் அவர்களுக்கு ஆதரவு அளித்து கனகாபிஷேகம் செய்துவித்துள்ளார். குழிக்கரை கோயில் விஸ்வநாதர் மற்றும் அம்பாளை தீட்சிதர் பாடியுள்ளார். முதலியாரைப் புகழ்ந்து பாட கோரப்பட்டது. அதற்கு தீட்சிதர் மறுத்து தனக்கோ அல்லது முதலியாருக்கோ நல்லதல்ல என்றும் அதற்கு பதில் ஸ்ரீ விஸ்வநாதம் என்ற 14 ராகங்களில் ஒரு ராகமாளிகை கிருதியில் வைத்திலிங்க பூபாலன் காப்பாற்றும்படி விஸ்வநாதரிடம் பிரார்த்தித்து கீர்த்தனை பாடியுள்ளார்.

இவர் ஆரூரில் சிறுவராக இருக்கும் போது அவர் குடும்பம் சென்னை மணலியில் துபாஷ்முத்துகிருஷ்ண முதலியார் மற்றும் அவர் குமாரர் சின்னையா முதலியார் ஆதரவில் இருந்தார்கள். (துபாஷ் என்றால் ஆங்கிலேயரின் மொழிப்பெயர்ப்பாளர்) சின்னையா முதலியார் வசதியான குடும்பம். அவர்கள் பல கலைத்திறனைப் போற்றி வித்வான்களை ஆதரித்துள்ளனர். முத்துசாமி தீட்சிதர் சிறுவனாக இருந்தபோது சின்னையா முதலியாருடன் சென்னை கோட்டைக்கு செல்வது வழக்கம். அவர் அப்போது மிலிட்டரி பாண்டு வாத்திய இசைக் கேட்டு மனதைப் பறிகொடுத்தார். கர்னல் பிரவுன் பிரபுவின் வேண்டுகோளை ஏற்று ஐரோப்பிய இசையை இங்கிலீஷ் நோட்ஸ்களுக்கு சமஸ்கிருத சொற்களை அமைத்து தெய்வ பக்தியாக God save the king என்ற பாடலுக்கு சந்ததம் பாகிமாம் சங்கீத சியாமளே என்ற சுருதி உருவானது. தீட்சிதர் மூலம் ஆங்கிலேயரின் வயலின் இசை முதன்முதலாக கர்நாடக இசைக்கு துணை வாத்தியமாக கிடைத்தது. அன்று முதல் பிரபலமான முத்துசாமி தீட்சிதரின் சிஷ்யரான தஞ்சை வடிவேலு மற்றும் திருக்கோடிக்காவல் கிருஷ்ண அய்யர் விரல்கள் மூலம் வயலின் பரிணமித்து வருகின்றது. கடைசியாக பிறந்த ஊரான திருவாரூர் வந்து சில காலம் தங்கி இறுதியாக எட்டையபுரம் அரசரிடம் சென்று ஆஸ்தான வித்துவானாக பணியாற்றி சமாதியடைந்தார். திருவாரூரில் இவர் வசித்த மேலவடம்போக்கித் தெரு வீட்டை பிட்சாண்டார் கோயில் ஜமீன் ராஜகோபால் பிள்ளை வாங்கி ஆடிட்டோரியம் கட்டித் தந்துள்ளார்.

ஆதாரம் : நீதிபதி டி.எல். வெங்கட்ராமையர் மற்றும் பரணிதரன் நூல்கள்.

**சியாமா சாஸ்திரி :**

இவர் ஆரூரில் கி.பி. 1762 -ல் பிறந்தார். இவர் இயற்பெயர் வெங்கடசுப்பிரமணியம், இவர் முதலில் சமஸ்கிருதம் பிறகு தெலுங்கில் கீர்த்தனை இயற்றியுள்ளார். ஆனந்த பைரவி ராகம் இவருக்கு பிடித்தனமானது. 6.2.1827 இல் காலமானார்.

## வழிபட்டுப் பேறு பெற்றவர்கள் : (தலம்)

இராமன், அரிச்சந்திரன், திருமால், தசரதன், இந்திரன், பிரமன், அகத்தியர், திரிசங்கு, துருவாசர், நளன், மனுநீதிச்சோழன், முசுகுந்தச் சக்கரவர்த்தி, விசுவாமித்திரர், கோகருண முனிவர், கமலமுனி சித்தர், திருமகள், மன்மதன், மேனகை.

## ஆரூரில் பிரதோசம் மற்றும் சாயரட்சை (காப்பு)

மற்ற கோயில்களில் பிரதோஷ காலம் மாலை 4.30 மணி முதல் 6.30 மணி வரை ஆகும். ஆனால் ஆரூரில் 6.00க்கு சாயரக்ஷை முடிந்த பின்னர்தான் பிரதோஷ காலம் நடக்கும். ஆகவே ஆரூரில் நித்ய சாயரக்ஷை பூஜையே நித்ய பிரதோஷ பூஜை ஆகும். இந்திரன் பூஜிப்பதாக ஐதீகம்.

## உச்சிக்காலம் மற்றும் சாயரட்சை இல்லாத நாள் :

1. வைகாசி ஆயில்ய தினத்தன்று உச்சிகால நைவேத்ய பூஜை ஆரூரில் இல்லை. ஸ்ரீ தியாகராஜர், சுந்தரர் வேண்டு கோளை ஏற்று அன்று மதியம் அம்பர் மாகாளத்திற்குச் சோமாசி மாற நாயனாரின் வேள்விக்கு, சோமயாகத்தில் அவிர்பாகம் பெறுவதற்கு வருகிறார். (தற்போது நடைமுறையில் இல்லை) 2. ஆடிப்பூர உஸ்தவத்தில் கமலாம்பாள் தேருக்குச் செல்லுங் கால் சாயரட்சை இல்லை.

## கோயிலில் நாயன்மார் வேலை மற்றும் நாயன்மார் நேரடித் தொடர்பு :

1. சுந்தரர் - தம்பிரான் தோழர்
2. விறன் மிண்டர் - மெய்க்காவலர் வேலை
3. செருத்துணைநாயனார் - திருமாலைதொடுக்கும் வேலை
4. நமிநந்தியடிகள் - கோவிலில் தீபம் போடுபவர் (விவரம் பக்கம் 90)
5. தண்டியடிகள் - கோவில் நிர்வாக அதிகாரி (கோவிலுக்கு பூசைத் திட்டம் வகுத்துக்கொடுப்பது)
6. ஏயர் கோன் கலிக்காமர் / அடியார் உபசரிப்பு? சுந்தரர் நண்பர்
7. சோமாசி மாறர் தினமும் சுந்தரருக்குத் தூதுவளை இலை கொடுப்பவர். (விபரம் பக்கம்-49) திருமாளம் யாகம்

8. சேரமான் பெருமாள் சுந்தரர் நண்பர்.
இருவரும் திருவஞ்சைக் களத்திலிருந்து கைலாயம் சென்றனர்.
9. கழற்சிங்கர் - (பல்லவ மன்னர்) பூவை முகர்ந்த அரசி
கங்காதேவிக்கு தண்டனை தந்தார். (விபரம் : பக்கம் 32)

## சுந்தரர் வரலாறு :

**கயிலையில் சுந்தரர் :**

சுந்தரமூர்த்தி சுவாமிகள், ஆலால சுந்தரர் என்ற திருப்பெயரோடு, திருக்கயிலாயத்திலே சிவபெருமானுக்கு உடனிருந்து பணிவிடை புரிவதாகிய அணுக்கத்தொண்டு ஆற்றிவந்தார். அதுபோல், உமாதேவியாருக்கு அநிந்திதை, கமலினி என்ற இரு சேடியர்களும் அணுக்கத் தொண்டாற்றினர். இவர்கள் நாள்தோறும் மலர் கொய்து இறைவனுக்கும் உமாதேவியாருக்கும் சார்த்தி வந்தனர். ஒருநாள் மலர் கொய்யும் தொண்டாற்றுகையில் ஆலால சுந்தரர் அநிந்திதை, கமலினி என்பார்மீது மனம் போக்கினார். அவர்களும் இவர் மீது இச்சை கொண்டனர். எல்லாம் வல்ல இறைவன் இதனை அறிந்து, ஆலால சுந்தர! நீ பெண்கள் மீது இச்சை கொண்டமையால் பூவுலகத்தில் மனிதனாகப் பிறந்து அப்பெண்களுடன் இன்புறுவாயாக எனக் கட்டளையிட்டார். அது கேட்ட சுந்தரர் வருத்த முற்றவராய், அடியேன் மானுட வாழ்வில் மயங்கத் தலைப்படும் பொழுது தேவரீர் தடுத்து ஆட்கொண்டருள வேண்டும் எனப் பிரார்த்தித்தார். அண்ணலும் அவ்வாறே வரம் தந்து அனுப்பினார்.

**ஓலையைக் கிழித்தல் :**

ஆலால சுந்தரர் நடுநாட்டிலே திருநாவலூரிலே, ஆதி சைவ மரபிலே, சடையனார், இசைஞானி அம்மையார் என்ற அருந்தவத்துப் பெரியவர்கட்கு மகவாய் அவதரித்தார். பெற்றோர்களால் நம்பியாரூரர் என்ற பிள்ளைத் திருநாமம் இடப்பெற்றார். பரமன் அருளால் பல கலைகளையும் பயின்றார். திருக்கோவிலூர் மன்னரான நரசிங்க முனையரையரின் அபிமான புத்திரராய், மன்னவர் திருவும், தங்கள் வைதிகத் திருவும் பொங்க வளர்ந்து வந்தார். மணப்பருவம் உற்றார். புத்தூர் சடங்கவி சிவாசாரியாருடைய திருமகளைப் பெரியோர் மணம் நேர்ந்தனர். புத்தூரில் திருமணவிழாத் தொடங்கியது. கண்ணுதற் பரம்பொருள் திருக்கயிலையில் வரமளித்த படியே சுந்தரரைத் தடுத்தாட்கொள்ள வேண்டி விருத்த வேதியராய்த் திருவாரூர் தியாகராஜர் திருமணப் பந்தலில் எழுந்தருளினார். அங்குக் கூடியிருந்த அந்தணர் அனைவரும் அவரை மகிழ்ச்சியுடன் வரவேற்றனர். வந்தவர் நம்பியாரூரரை நோக்கி, எனக்கும் உனக்கும் இடையே ஒரு வழக்கு உள்ளது. அவ்வழக்கு, நீ எனது அடிமை என்பதேயாகும்.

அதனை முடித்தே மணம் துவங்க வேண்டும் என உரைத்தார். அது கேட்ட அனைவரும் அதிசயித்தனர். நம்பியாரூரர் விருத்த வேதியரை நோக்கி, ஒரு அந்தணர் மற்றொரு அந்தணருக்கு அடிமையாதல் நீர் சொல்லத்தான் கேட்டேன். இவ்வாறு சொல்லும் நீர் பித்தரோ என வெகுண்டு பேசி அவர் கையிலிருந்த ஓலையைப் பற்றிக் கிழித்தெறிந்தார். வேதியர் இது முறையோ எனக் கூக்குரலிட அப்போது ஆரூரர் உமது ஊராகிய திருவெண்ணெய்நல்லூர் மறையவர்களிடத்திலேயே இவ்வழக்கைத் தீர்ப்போம் என்றனர்.

**தடுத்தாட்கொள்ளல் :**

அவ்வண்ணமே, மூல ஓலை காட்டி ஆரூரர் அடிமை என்பதை வேதியர் நிரூபிக்க, சுந்தரர் அடிமையை ஏற்றார். வேதியரின் இருப்பிடம் வினவினார். கிழவேதியர் திருவெண்ணெய் நல்லூர் அருட்டுறை ஆலயத்துட் புகுந்தார். பின் தொடர்ந்த மறையவர்கள் திகைத்தனர். அது கண்ட சுந்தரரும் வியப்புற்றார். திருக்கயிலையில் கூறியபடி உன்னைத் தடுத்தாட் கொண்டோம் என மொழிந்து இறைவன் காட்சி வழங்கினார். உண்மை உணர்ந்த சுந்தரர் அப்போது வழியடிமை யாது செய்யவேண்டுமென வேண்டினார். வன்மைபேசி வன்றொண்டன் எனும் பெயர் பெற்றாய் நமக்குப் பெருகிய அன்பின் மிக்க அருச்சனை (வழிபாடு) பாட்டேயாகும். ஆதலால் நம்மீது சொற்றமிழ் பாடுக என ஆணையிட்டார். அது கேட்ட சுந்தரர் எப்படிப் பாடுவேன் என ஏங்கினார். பக்தர்கள் அறிய என்னைப் பித்தனென்றே பாடுக என அடியெடுத்துக் கொடுத்தார். அவ்வடியை முதலாகக் கொண்டு பித்தா பிறைசூடி என்னும் பதிகம் பாடினார்.

**சித்தவடத்தில் திருவடி தீட்சை :**

பிறகு சுந்தரர் திருநாவலூரைத் தரிசித்துக்கொண்டு திருத்துறையூர் சென்று இறைவனை நோக்கித் தவநெறியருள வேண்டினார். அப்பர் சுவாமிகள் திருத்தொண்டு செய்த இடமாகிய திருவதிகையை மிதித்தற்கு அஞ்சி அதனருகில் சித்தவடம் மடத்தில் இரவுதங்கி நித்திரைசெய்கையில் அதிகைப் பெருமான் கிழவேதியராய் அருகில் படுத்துத் திருவடி தீக்ஷை செய்தனர். பின்னர் சிதம்பரம் அடைந்து கூத்தப் பெருமான் சரணம் கும்பிட்டார். பெருமான் கட்டளைப்படி திருவாரூர் செல்லும் வழியில் சீகாழியைக் குறுகினார். திருஞானசம்பந்தர் அவதாரமான திருத்தல மாதலால் அதனை மிதிக்க அஞ்சினார். ஊர்ப்புற எல்லையை வலம் வந்தார். இறைவன் காதில் வெண் குழையனாய்க் காட்சி நல்கியதைத் தரிசித்தார்.

### தம்பிரான் தோழரானார்:

பின்னர்ப் பல தலங்களைத் தரிசித்துத் திருவாரூர் சேர்ந்து வன்மீகநாதரைத் தரிசித்தார். அப்பெருமான், உனக்கு நம்மைத் தோழனாகத் தந்தனம். நீ கொண்ட மணக்கோலத்துடன் எப்பொழுதும் இருப்பாயாக என அருள்செய்தார். அன்றுமுதல் தம்பிரான் தோழராக, தியாகேசப்பெருமானைத் தரிசித்துவந்தார். அப்போது கயிலையிலிருந்த கமலினி என்பார் அவ்வூர் உருத்திர கணிகையர் குலத்தில் பரவையார் என்ற பெயருடன் தோன்றி நாள்தோறும் தியாகேசப் பெருமானைத் தரிசித்து வந்தார். ஒருநாள் இருவரும் திருக்கோயிலில் சந்தித்து ஒருவரையொருவர் நேசித்தனர். இறைவன் திருவருளால் இருவருக்கும் மணம் நிகழ்ந்தது. பரவையாருடன் வாழ்ந்துவந்த சுந்தரர், தேவாசிரிய மண்டபத்தில் சிவனடியார்கள் இருந்ததைக் கண்டு அவர்களுக்கு அடியனாகும் நாள் எந்நாளோ என எண்ணியவராய், சுவாமி தரிசனம் செய்தனர். இறைவன், நீ நம்முடைய அடியவர்களைப் பாடுக எனப் பணித்துத் தில்லைவாழ் அந்தணர் என அடியெடுத்துக் கொடுத்தனர். அதனையே முதலாகக் கொண்டு திருத்தொண்டத்தொகை பாடினார். பின்னர்க் குண்டையூர்கிழார் என்னும் வேளாளர் நெல் முதலிய பொருள்கொடுத்துத் தொண்டு செய்துவர, அது பஞ்சத்தால் தடைப்பட்டபோது கிழார் இறைவனைப் பிரார்த்தித்தார். குண்டையூர் முழுவதும் நெல் மலையாய் நிறைந்தது. இதனை அறிந்த சுந்தரர் அவற்றைத் திருவாரூர் கொண்டு போக ஆளின்மையால் நீள நினைந்தடியேன் என்ற திருப்பதிகத்தை பாடிப் பூதகணங்களால் நெல்மலை திருவாரூர் வரப்பெற்றார். (மாசி உத்திரம்) எல்லோரும் நெல் பெற்றனர்.

### பொன் பெற்றார்:

பிறகு திருநாட்டியத்தான்குடியில் கோட்புலி நாயனார், தம் புதல்வியர்களான சிங்கடியாரையும், வனப்பகையாரையும் மணம் செய்து கொள்ளுமாறு வேண்ட, அவ்விருவரையும் தம் புதல்வியர்களாக ஏற்றுப் போற்றினார். பிறகு ஆரூர் பங்குனி உத்திரச் செலவுக்குப் பரவையார் பொன் வேண்டியதற்கிணங்கத் திருப்புகலூர் சென்றார். அங்குச் செங்கற்களைத் தலைக்கு வைத்து நித்திரை செய்தார். அவை பொன்னாக மாறின. அது கண்டு, தம்மையே புகழ்ந்து எனும் திருப்பதிகம் பாடித் திருவருளை வியந்தார். பின்பு பல தலங்களையும் தரிசித்துக்கொண்டு, திருப்பாண்டிக் கொடுமுடி சேர்ந்து, மற்றுப் பற்றெனக்கின்றி என்னும் நமச்சிவாயத் திருப்பதிகம் பாடினார். பின்னர்த் திருமுது குன்றத்தில் பழமலைநாதர் அருளிய பன்னீராயிரம் பொன்னை மணிமுத்தா நதியில் இட்டுத் திருவாரூர்க் கமலாலயத்தில் பதிகம் பாடி எடுத்தார்.

**சங்கிலியார் திருமணம்:**

பிறகு திருக்குருகாவூர் வெள்ளடையில், களைப்புற்ற தமக்கு இறைவன் பொதி சோறு கொடுத்து மறைந்த அருட்டிறத்தைப் புகழ்ந்து பாடினார். பிறகு தொண்டை நாட்டுத் தலங்கள் பலவற்றைத் தரிசித்துத் திருவொற்றியூரை அடைந்தார். கயிலையில் இருந்த அநிந்திதை ஒற்றியூரை அடுத்துள்ள ஞாயிறு என்ற ஊரில் ஞாயிறு கிழார் என்னும் வேளாளருக்கு, சங்கிலியார் என்ற பெயரோடு மகவாய்த் தோன்றி வளர்ந்து வந்தார். மணப் பருவம் உற்றும் ஒருவரையும் மணந்து கொள்ளாது இறைவனுக்குத் திருமாலை சாத்தும் தொண்டாற்றி வருகையில், சுந்தரர் அம்மாதினைக் கண்டு இச்சைகொண்டு இறைவனிடம் அவரைத் தமது மனைவியாக்கும்படி வேண்டினார். இறைவனும் இக்கருத்தைச் சங்கிலியாருக்குத் தெரிவித்து, அம்மையாரின் விருப்பத்திற்கிணங்க மகிழ மரத்தடியில், சுந்தரரைக்கெண்டு, உம்மைப்பிரியேன் என்று அவரிடம் சபதம் செய்யச் செய்து தொண்டர்களைக் கொண்டு அவர்கட்குத் திருமணம் நிகழ்த்துவித்தார்.

**கண் பெற்றார்:**

இவ்வண்ணம் சுந்தரர் இங்கு இருக்கும் நாளில், திருவாரூர் வசந்த விழா நினைவிற்கு வர, எத்தனை நாள் பிரிந்திருக்கேன் என் ஆரூர் இறைவனையே என்று பாடியவராய் ஒற்றியூரை விட்டகன்றார். சபதம் தவறினமையால் கண்ணொளி இழந்தார். திருவெண்பாக்கத்தில், திருக்கோயில் உள்ளீரோ, எனப் பாட, இறைவன் உளோம் போகீர் என்று ஊன்றுகோல் கொடுத்து உதவினார். பின்னர்க் காஞ்சிபுரத்தில் கச்சி ஏகம்பனைக் காண இடக்கண் பெற்றார். வழியில் பல தலங்களையும் தரிசித்துக் கொண்டு திருவாரூர் சேர்ந்து மீளா அடிமை என்ற பதிகம் பாடி வலக் கண்ணும் பெற்றார்.

**சேரமான் தோழர்:**

சங்கிலியாரை மணந்ததைக் கேள்வியுற்ற பரவையார் ஊடல் கொள்ள, தியாகேசப் பெருமான் இருமுறை தூது சென்று ஊடலைப் போக்கினார். இந்நிகழ்ச்சியைத் தவறு எனக் கருதிய ஏயர்கோன் கலிக்காம நாயனாருக்கு இறைவன் சூலைநோய் கொடுத்து அதைத் தீர்க்கும் முகத்தால் சுந்தரருடன் நட்புக்கொள்ளச் செய்தார். சேரநாட்டு மன்னரான சேரமான் பெருமாள் நாயனார், சுந்தரருக்கு நட்பினரானதால் சேரமான் தோழரெனவும் சுந்தரர் அழைக்கப் பெற்றார். அதுமுதல் இருவரும் பல தலங்களையும் தரிசித்துக் கொண்டு வெள்ளம் பெருகிய காவிரி வழிவிட, திருவையாற்றுப் பெருமானைத் தரிசித்தனர். பிறகு சேரமான் நாட்டில் சிலகாலம் தங்கினார். திருவஞ்சைக்களத்தப்பனை வழிபட்டார். திருவாரூர்த் தியாகேசப் பெருமானைத் தரிசிக்க விரும்பினார். சேரமான் பெருமாள் கொடுத்தபொருள்களைத் திருவாரூருக்கு எடுத்துச்சென்றார்: செல்லும் வழியில் திருமுருகன் பூண்டியில் பூதகணங்களாகிய வேடர்கள் பொருள்களைக் கவர்ந்தமை கண்டு அவ்வூர்ப் பெருமானை எத்துக்கு இங்கிருந்தீர் எனப் பாடிப் பொருளை மீண்டும் பெற்றுத் திருவாரூர் சேர்ந்தார்.

## கயிலை மேவினார்:

சில நாள் கழித்துச் சேரமான் நாட்டிற்குச் செல்ல விரும்பினார். வழியில் கொங்குநாட்டுத் தலங்கள் சிலவற்றைத் தரிசித்துத் திருப்புக்கொளியூர் அவிநாசியில் முதலையுண்ட பாலனைப் பெற்றோர் மகிழ மீட்டுக் கொடுத்தார். பின்பு சேரநாடு அடைந்து சேரமான் பெருமாளுடன் வதிந்தார். இப்படி இருக்கும் நாளில் ஒரு நாள் திருவஞ்சைக்களம் சென்றார். உலக வாழ்வினின்றும் விடுபட விரும்புவதை இறைவனிடம் விண்ணப்பித்தார். பெருமானும் விருப்பத்தை நிறைவேற்ற வெள்ளை யானையைத் தேவர்களுடன் அனுப்பினார். ஆடிச் சுவாதி நன்னாளில் வெள்ளை யானையின்மீது அமர்ந்து சேரமான் பெருமாளை நினைந்த வண்ணம் சுந்தரர் கயிலை சேர்ந்தார். இதனை யுணர்ந்த சேரமான் பெருமாள் குதிரையின் செவியில் ஐந்தெழுத்தோதிச் சுந்தரரைப் பின்தொடர்ந்து திருக்கயிலை மேவினார். பரவையாரும், சங்கிலியாரும் முன் போலவே கமிலினி, அநிந்திதையாகக் கயிலை சேர்ந்தனர். சுந்தரர் அருளிய திருப்பதிகங்கள் 100. இவை ஏழாந் திருமுறையாக இலங்குகின்றன.

## விறன்மிண்டர்:

இவர் கேரளாவில் (பழைய சேரநாடு) திருச்செங்குன்றூரில் வேளாளர் குடியில் அவதரித்தார். இவர் திருவாரூர் தேவாசிரிய மண்டபத்தில் தங்கிச் சிவத்தொண்டுச் செய்து வந்ததோடு கோயிலில் மெய்க்காவலராகவும் இருந்தார். இவர் தேவாசிரிய அடியார்களை வணங்காத சுந்தரரை திருக்கோயில் உள்ளே செல்லக்கூடாது என தடுத்தார். சுந்தரர் வருந்தி தியாகேசரிடம் பிரார்த்திக்க தியாகேசர் சுந்தரருக்கு வடக்கு பிரகாரம் வடகோபுரம் எதிரில் சுந்தரருக்கு தனியாக காட்சிக்கொடுத்தார் (மார்கழி சதயம் நட்சத்திரம்- விதிய பாத தரிசனம்) இதனால் விறன்மிண்டர் கோபமுற்று, ஆரூர் தேவாசிரிய அடியார்களை வழிபாடு செய்யாத சுந்தரரும் புறகு (விரோதி). அவரது ஆண்டவனும் புறகு என்று கூறியவர். சுந்தரருக்குத் தியாகேசர் தனியாகக் காட்சி கொடுத்ததால் (ஒட்டுத் தியாகர்) இதனால் கோபித்துக் கொண்டு திருவாரூரிலிருந்து வடக்கே 8 கி.மீ. தொலைவிலுள்ள ஆண்டிப்பந்தல் என்ற ஊரில் வசித்து சிவனடியார்களுக்கு விருந்தோம்பல் செய்து வந்தார், திருவாரூருக்கு திரும்ப வரக்கூடாது என்று. ஆனால் திருவாரூரிலிருந்து யார் வந்தாலும் அவர்கள் காலை வெட்டுவதற்குத் திண்ணையில் ஒரு மழு (கோடாரி) வைத்திருந்தார். இந்நிலையில் இவரைச் சோதிக்க தியாகேசர் வயோதிக உருவத்துடன் ஆண்டிப்பந்தலில் விறன் மிண்டர் வீட்டில், அவர் வெளியில் சென்ற நேரம் பார்த்து உணவிற்கு வந்தார்.

அங்கு உள்ளவர்கள் வயோதிகரை எந்த ஊர் என்று கேட்டனர். வயோதிகர் திருவாரூர் என்றார். அதற்கு அவர்கள் தயவு செய்து திருவாரூர் பெயரைச் சொல்ல வேண்டாம். சொன்னால் விறன் மிண்டர் காலை வெட்டி விடுவார் என்றார்கள். ஆனால் எம்பிரான் ஏவலரிடம் அவர் காலை வெட்டவுள்ள மழுவை இடம் மாற்றி வலது திண்ணையில் வைக்கச் சொன்னார். அப்படியே இடம் மாற்றி வைத்தார்கள். விறன் மிண்டர் வந்தவுடன் சிவனடியாரை வழக்கம் போல் எந்த ஊர் என்றார். அதற்குச் சிவனடியார் (தியாகேசர்) திருவாரூர் என்றார். உடன் விறன் மிண்டர் கோபத்துடன் கோடாரி இடம் மாறி இருந்ததை (காலம் தவிர்க்க) எடுத்து அடியாரைக் காலை வெட்ட ஓடினார். இதற்குள் அடியார் ஓட துரத்திக் கொண்டு வண்டாம்பாளை என்ற ஊருக்கு வந்தார். (அப்போது வண்டாம்பாளை திருவாரூர் கோயிலைச் சேர்ந்த வடக்குப் பிரகாரம்) அப்போது சிவனடியாராக உள்ள இறைவர் வந்தேன் இப்பால் எனக் கூற திருவாரூர் எல்லையில் வந்ததால் விறன் மிண்டர் தனது காலை மழுவில் வெட்ட முயலும் போது இறைவன் தடுத்து அருள் பாலித்ததாக வரலாறு. பிறகு ஆரூரில் தொடர்ந்து தொண்டு செய்து வந்தார். வந்தேன் இப்பால் என்பது தான் மருவி வண்டாம்பாளை என்று ஆயிற்று.

### செருத்துணை நாயனார் மற்றும் கழற்சிங்கர் :

இவர் திருவாரூர் அருகில் கீழத் தஞ்சாவூர் என்று அழைக்கப்படும் தஞ்சை நகரம் கிராமத்திலிருந்து வந்து தினமும் ஆரூர் அசலேஸ்வரர் சன்னதியில் பள்ளித்தாம மண்டபத்தில் பூத்தொடுக்கும் பணி செய்து வந்தார். பள்ளித்தாமம் என்பது (நீர் புஷ்பம், கொடி புஷ்பம், செடி புஷ்பம் மரத்திலுள்ள புஷ்பம்). ஒரு சமயம் பல்லவ மன்னர் கழற்சிங்கர் மனைவி கங்காதேவியுடன் தியாகேசர் தரிசனத்திற்கு வந்தார் அரசி கீழே கிடந்த பூவை மோர்ந்ததால் செருத்துணை நாயனார் கோபம் கொண்டு கத்தியால் அவர் மூக்கை அரிந்தார். தவற்றுக்கு அரசனிடம் மன்னிப்பு கோர அரசன், பூவை எடுத்த அரசியின் கையும், தவறு செய்தது என்று கையையும் வெட்டினார். இவர்களுக்கு இறைவன் அருள் புரிந்தார்.

### தண்டியடிகள் :

இவர் பிறவிக் குருடர். கமலாலய குளத்தை தூர் வாரியவர். அப்போது சமணர்கள் ஆதிக்கத்தில் கமலாலய குளத்தில் பாழிகளும், பள்ளிகளும் அமைத்து இருந்தனர். தண்டியடிகள் குளத்தைச் செப்பனிட குளத்தின் இருபுறமும், பிடித்துக் கொண்டு செல்ல தறியை நட்டார். அதற்கு தண்டி (அ) கைத்தடி என்பது பெயர். அதனால் அவர் பெயர் தண்டியடிகள். உள்ளம் ஐந்து எழுத்தை ஓதிய வண்ணம் குள மண்ணைத் தோண்டிக் கரையில் கொட்டினார்.

சமணர்கள் சினம் கொண்டு மண்ணில் உள்ள சிற்றுயிர்கள் மாண்டு போகும் எனக் கூறித் தடுத்தனர். தண்டியடிகள் குளம் சுத்தம் செய்வது எம்பிரான் திருப்பணி என்றார். அதற்குச் சமணர்கள் கண் தான் இல்லை, காதும் செவிடா! என்றனர். அதற்குத் தண்டியடிகள் கண் பார்வை சிவன் அருளால் பெற்றால் என்ன செய்வீர்கள் என்றார். அதற்கு சமணர்கள் நீ கண் பார்வை பெற்றால், நாங்கள் ஊரை விட்டு வெளியேறி விடுவோம் என்று கூறி தண்டியடிகள் கரத்தில் இருந்த மண்வெட்டி கூடையைப் பிடுங்கி எறிந்தார்கள். இந்நிலையில் ஆரூர் இறைவனை நொந்து பிரார்த்தித்தார். இறைவன் தண்டியடிகள் கனவில் தோன்றி நாளை உன் கண்கள் ஒளி பெறும். உன் தொண்டைச் செய். உன்னை இழிவாகப் பேசியவர்கள் கண் பார்வை இழப்பார்கள் என்று கூறி மறைந்தார். மேலும் அன்று இரவு சோழ மன்னன் கனவிலும் தோன்றி தண்டியடிகளுக்கு இடையூறு ஏற்படாமல் செய் என்றார். தண்டியடிகள் சமணர் செய்த இடையூறுகளையும் தான் செய்த சபதத்தையும் அரசனிடம் கூறி உண்மை கண்டுபிடிக்கக் கூறினார். சமணர்களும் வழக்கு விசாரணைக்கு ஒப்புக் கொண்டனர். அரசன் அடிகளாரை கண் ஒளி பெறும் நிகழ்வுகளை செய்து காட்டுங்கள் என்றார். அடிகள் ஐந்து எழுத்தை ஓதிக் குளத்தில் மூழ்கி எழுந்தார். கண் ஒளி பெற்றார். வானோர்கள் பூ மழை பொழிந்தார்கள். சமணர்கள் கண் இழந்தார்கள். மன்னர் ஆணைப்படி சமணர்கள் திருவாரூரை விட்டு நீங்கினார்கள். தண்டியடிகள் திருப்பணியை முழுமையாக நிறைவு செய்து இறைவன் திருவடி நிழலை அடைந்தார்.

### சேரமான் பெருமாள் / கழற்றறிவார் :

இவர் சேர நாட்டு அரசர். இவர் தினமும் மதியம் பூசையின் போது இறைவன் சிலம்பொலியாக அருள் புரிவார். ஒரு நாள் வெகு நேரம் ஆகியும் சிலம்பொலி கேட்கவில்லை. இறைவன் அசரீரியாக திருவாரூரில் சுந்தரர் தேவாரத்தில் மயங்கி விட்டதாக ஒலிக் கேட்டது. உடன் திருவாரூரில் சுந்தரருடன் நண்பராகி தேவாசிரிய மண்டபத்தில் தங்கினார். இருவரும் சேர்ந்து பலத் தலங்களையும் தரிசித்து திருவஞ்சிக்களத்திலிருந்து கயிலை சென்றனர். சேரமான் 11 -ன் திருமுறை "திருவாரூர் மும்மணிக்கோவை" இயற்றியுள்ளார்.

### தியாகேசர் பாதம் தெரியும் நாள் :

மார்கழித் திருவாதிரை - பங்குனி உத்திரம் (பதஞ்சலி வியாக்ரபாதருக்குக் காட்சி).

### தியாகராஜர் மகா அபிடேகம் :

சித்திரை, ஆடி, ஐப்பசி, தை, மாதப் பிறப்பு நாட்களிலும் மார்கழித் திருவாதிரை, பங்குனி உத்திரம், தேர் உலா முடிந்து பிராயத்தி அபிஷேகம் மற்றும் பக்தகாட்சி அபிஷேகம் மற்றும் கிரகண காலங்களில் அபிடேகம் நடைபெறும்.

**வாத்யச் சிறப்பு :**

*தியாகராஜருக்கு 18 வாத்தியங்கள் ஆராதனையின் போது வாசிப்பதாக வரலாறு. தற்போது 1. நாதஸ்வரம்,*
*2. பஞ்சமுக வாத்தியம் (தண்டியடிகள் சுந்தரருக்கு பக்கத்தில் உள்ளது) 3. எக்காளம், 4. சங்கு வாத்தியம் 5. திருச்சின்னம். ஆகிய ஐந்து வாத்தியங்கள் திருவந்திக்காப்பு நேரத்தில் வாசிக்கப்படும். தியாகேசர் அஜபா நடனத்தின் போது இசைக்கப்படும் மத்தளத்தின் பெயர் சுத்த மத்தளம். பஞ்சமுகவாத்யம் (குடமுழவம்)இருக்கும் மற்றும் ஓர் ஊர் திருத்துறைப்பூண்டி.*

**பஞ்சமுக வாத்தியம்:**

*இத்தலத்திற்குச் தனிச் சிறப்புடைய வாத்தியம் பஞ்சமுக வாத்தியம். இதன் சுற்றளவு நான்கு அடி, எட்டு அங்குலமாகும். இதற்கு ஐந்து முகங்கள் உள்ளன. ஒன்று பாம்பு சுற்றினாற்போல் அமைந்துள்ளது. ஒன்று ஸ்வஸ்திகா அடையாளமுடையது. ஒன்று தாமரைப்பூ அடையாள முடையது. ஒன்று ஓர் அடையாளமும் இல்லாதது. சுத்தமாக வுள்ளது. நடுவிலுள்ளது பெரியதாக இருக்கும். மேலே மான்தோலால் கட்டப்பெற்றிருக்கும். இதனை அடிப்பவர்கள் பாரசைவர்கள். இவ் வாத்தியம் ஒவ்வொரு முகத்திலும் தனித் தனியாக அடிக்கப்படும்போது ஏழு முறையும். ஐந்தினையும் சேர்த்து அடிக்கப்படும்போது முகத்திற்கு ஒன்றாக ஐந்து முறையும் அடிக்கப்பெறும். இவ்வாத்தியம் சதா சிவமூர்த்தியின் ஐந்து முகங்களிலிருந்து வந்ததாகவும் சிவனின் நடன காலத்தில் நந்திதேவர் வாசிப்பாரென்றும் பிறகு அவர் ஸ்தானத்தில் பாரசைவர்கள் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள் என்றும் பஞ்சமுக வாத்திய லக்ஷணம் என்னும் நூல் கூறுகின்றது. இதில் பார சைவர்கள் உற்பத்தியும், அவர்களுக்குச் செய்ய வேண்டிய தீக்ஷை முறைகளும் பஞ்சமுக வாத்தியம் அடிக்கப் படுவதால் ஆகும் பயனும் நன்கு அறிவிக்கப்பெற்றுள்ளது.*

**பஞ்சமுக வாத்திய விளக்கம்:**

*இதைச் சொல்வது நந்தீஸ்வரர் ஏற்படுத்திய பாடம் நடனகாலத்தில் விசேஷமான பஞ்சமுக வாத்தியம். இந்தப் பஞ்சமுக வாத்தியமானது சதாசிவ முகத்தில் உண்டான ஒலி. இந்த 5 ஒலியும் 5 நடனத்திற்கும் உள்ளது. ஈசான்ய முகத்திற்கு - சூரியன். சத்யோஜாத முகத்திற்கு நாகவடம். வாமதேவ முகத்திற்கு சுவஸ்திக். அகோரம் - சங்கு. தற்புருடம் சுத்தம். தாம் என்கின்ற சப்தம் ஞானத்தை உண்டாக்கும். தும்காரம்: என்ற ஒலி மன உறுதியைக் கொடுக்கும். தொம்காரம் இந்திரியத்தை உறுதிப்படுத்தும். வைசியம் - ஆசைகள் கொடுக்கும். நம்காரம் - உடல் உறுதியைத் தரும். சுற்றளவு 96 அங்குலம். அளவு அங்குலங்களில்: உயரம்-32, ஈசானம்-6, தற்புருடம்-7, அகோரம் -8, வாமதேவம் -9, மற்றும் சத்யோஜாதம் -20, ஈசானம் - சண்டதாண்டவம், தத்புருஷம் - பிரசண்டம் - அகோரம் - முச்சண்டம், வாமதேவம் - மூரஸ்க, சத்யோஜாதம் - லாஸ்யம்.*

**நாதஸ்வரம்:**

இங்கு வாசிக்கப்பெறும் நாதஸ்வரம் பாரி நாதஸ்வரம் என்றே வழங்கும். விழாக் காலங்களிலும் கூட வீதிகளில் இன்ன இன்ன இடத்து இன்ன இன்ன பண்கள்தாம் வாசிக்க வேண்டும் என்ற மரபுண்டு. அம்முறை அந்த இனத்தார்களுக்குள்ளேயே வழக்கமாகவும், இரகசியமாகவும் வைக்கப்பெற்று வருகிறது.

**கமலாலயம் சிறப்பு:**

கோயில் 5 வேலி, குளம் 5 வேலி, செங்கழுநீர் ஓடை 5 வேலி, (இறைவனுக்குரிய செங்கழுநீர்ப் பூ விளையும் இடம் என இங்கு வழங்கப்படுகிறது. திருக்குளம் கமலாலயம் என அழைக்கப்படுகின்றது. திருக்குளமே ஆலயம் (கமலாலயம்) என்று அழைக்கப்படும். இதில் 64 கட்டம் (86 கோடி தீர்த்தம்) மத்தியில் 19 ஏக்கர் பரப்பில் 16 தீர்த்தக் கட்டம் உள்ள நடுவணாங்கோயில் (எ) நாகநாதசுவாமி கோயில் உள்ளது. குளத்தின் நடுவில் முற்காலத்தில் யாகம் வளர்த்திட்ட அரண் நடுவில் உள்ள சிவனே நாகநாதர் (இறைவி- யோகநாயகி) மற்றும் மேல்கரையில் யக்ஞேஸ்வரர் கட்டம் உள்ளது. சுவாமி உத்ரவேதி சமேத யக்ஞேஸ்வரர். இருகோயில் களிலும் பிரதோஷ வழிபாடு நடைபெறுகிறது.

**மகா தேவ தீர்த்தக் கட்டம்:**

காசிக்கு நிகராக கமலாலயத்தில் 64 தீர்த்தக் கட்டங்கள் உள்ளன. முக்கியமாக மேலைக் கோபுரம் ஒட்டி மாற்றுரைத்த வினாயகர் கோவில் பின்புறம் முதலில் சித்திபுத்தியுடன் கூடிய கணபதி கட்டம் உள்ளது. அதை அடுத்து மகாதேவ தீர்த்தக் கட்டம் உள்ளது. இது பிரசித்தி பெற்றது. மூதாதையர்கள் பிதுர்க்கடன்கள் மற்றும் தோஷப் பரிகாரம் செய்ய மக்கள் நீராடுவார்கள். ஒரு சமயம் திரிசங்கு மன்னன் இந்திரனால் ஏற்பட்ட இடையூறுகள் நீங்க இந்தக் கட்டத்தில் மூழ்கி தேவலோகப் பதவி அடைந்தான். மற்றும் ஒரு சமயம் தியாகேசர் வயோதிக உருவத்தில் வந்து இந்தக் கட்டத்தில் கமலாலயத்தில் மூழ்கினார். தவறிக் குளத்தில் விழுந்து விட்டார். அவர் மனைவி காப்பாற்ற கதறினார். அப்போது அங்கிருந்தவர்கள் வயோதிகரைக் காப்பாற்ற ஓடி வந்தார்கள். ஆனால் வயோதிக உருவத்தில் உள்ள எம்பிரான் என்னைக் காப்பாற்றத் தகுதியுடையவர் பாவம் செய்யாதவராக இருக்க வேண்டும் என நிபந்தனை விதித்தார். ஒருவரும் முன் வரவில்லை. இந்நிலையில் சுந்தரர் கமலாலயத்தில் துணிந்து இறங்கி வயோதிகர் உருவத்தில் வந்த தியாகேசரைக் காப்பாற்றி விட்டார். தியாகேசர் அருள்புரிந்தார். இந்த கட்டத்தின் மேற்கூரையில் இந்த வரலாறு ஓவியமாக, வரையப்பட்டுள்ளது. மேற்படி கட்டத்தில் சந்திரசேகரர், வினாயகர், முருகன் மேற்கு முகமாக உள்ளனர். விசேஷ காலத்தில் சுவாமி தீர்த்தம் கொடுக்கும் போது அஸ்திரதேவர், அபிஷேகம் இவ்விடம் நடைபெற்று, தீர்த்தம் கொடுக்கும் போது பக்தர்கள் நீராடுவார்கள். சுந்தரருக்கு இறைவன் அருள்புரிந்த நிகழ்வாக பக்கத்தில் தனி கோயிலாகக் காட்சி கொடுக்கிறார், அருள்பாலிக்கிறார். (குடமுழுக்கு 8-3-2007)ல் நடைபெற்றது.

### நெய்வேத்தியமும் முசுகுந்த அர்ச்சனையும்:

இத்திருக்கோயிலில் சாயரட்சை மற்றும் II ம் காலத்தில் நெய்யினால் செய்த பிரசாதங்களான 1. தேன்குழல் 2. வடை, 3. அதிரசம், 4. சுழியன், 5. புட்டு என்பவை பிரசித்தம். மற்ற காலங்களில் சம்பா அன்னம் நிவேதனம் செய்யப்படும். முசுகுந்த அர்ச்சனைக்கு (முசுகுந்த மன்னர் பூஜித்தது 1. அரிசி (சர்க்கரைப் பொங்கல்) 8 கிலோ, 2. அரிசி (சம்பா அன்னம்) 1 கிலோ, 3. அரிசி (வெண் பொங்கல்) 8 கிலோ. 4. அரிசி (புளி அன்னம்) 20 கிலோ, 5. அரிசி (தயிர் அன்னம்) 12 கிலோ 6. அரிசி (பாயசம்) 1 லிட்டர். அரிசி (பட்சணம்) 8 கிலோ, 12 தேன்குழல், வடை, அதிரசம், புட்டு, சுழியன், பாயசம், பழங்கள் நிவேதனம் செய்யப்படும். புஷ்பம் இதர செலவு வகையறா ரூபாய் 12,000 ஆகும்.

தொகையினை அலுவலகத்தில் செலுத்தினால் நிர்வாகம் மூலம் முசுகுந்த அர்ச்சனை செய்து சிறப்பிக்கப்படும். மற்றும் முகுந்தா அர்ச்சனை மகா விஷ்ணு பூஜித்தது இதன் செலவு முசுகுந்த அர்ச்சனையைப் போல் இரண்டு மடங்கு ஆகும்.

### பாகற்காய் மண்டபம் :

தியாகேசருக்குத் தினம் நெய்வேத்தியமாகப் பாகற்காய்கறி மற்றும் தூதுவளைக் கீரை சமைத்து வைப்பார்கள். இதற்காகப் புலிவலம் - வேலங்குடி பாதையில் பாகற்காய் மண்டபம் உள்ளது. இதிலிருந்து பாகற்காய் பறித்து வரப்படும். பங்குனி உற்சவ காலத்தில் ஒரு நாள் திரிபுர சங்காரமூர்த்தி சுவாமி எழுந்தருளி மேற்படி மண்டபத்திற்குச் சென்று காட்சி கொடுப்பார். இம்மரபு தற்போது நடைமுறையில் இல்லை.

### திருச்சாந்து :

தியாராஜருக்குத் தினமும் சாயரட்சையில் காது தோட்டில் திருச்சாந்து அணிவிக்கப்படும். தியாராஜருக்குச் செங்கழுநீர் புஷ்பம், திருச்சாந்து, சுத்தமத்தளம் மிக முக்கியம் என வரலாறு கூறுகிறது.

திருச்சாந்து என்பது சந்தனக்கட்டை. தேவதாருகட்டை, அகில், குகில், சாம்பிராணி அவைகளை இரண்டு தினங்கள் தண்ணீரில் ஊரவைத்து, பிறகு கொதிக்கவைத்து வாளையாக வடித்துச் சாந்தாகச் தயாரிக்கப்படுகிறது.

இது தினமும் தியாசேகப்பெருமானுக்கு 3 கிராம் வீதம் நிர்வாகம் வழங்கும். காதுதோட்டில் சாத்துவதுடன் மற்றும் திருநீற்றில் கலந்து கோயில் குருக்கள் தனது அங்கவஸ்திரத்தின் நுனியில் முடிச்சாக வைத்துப் பக்தர்களுக்கு வழங்குவார். ஆனால் தற்போது வெள்ளிக்கிண்ணத்தில் வைத்து வழங்குகிறார்கள். இதற்கெனத் திருச்சாந்து கட்டளை உள்ளது. இதனைத் தற்போது சங்கமங்கலத்தில் தயாரிக்கிறார்கள்.

## குளித்தளிகை :

தினமும் தியாகராஜருக்கு மதியம் நெய்வேத்தியம் பாகற்காய், கத்தரி, வாழைக்காய், தூதுவளைக் கீரையுடன் அன்னம் சேர்த்து மோர் கூட்டு செய்து மற்றும் தோசை பயற்றம் பருப்புப் பாயசத்துடன் நிவேதனம் நடைபெறும். இதற்கு குளித்தளிகை என்று பெயர். இது தற்போது நடைமுறையில் இல்லை. தற்போது பங்குனி உத்திரத் திருவிழாக் காலத்தில் ஒரு நாள் சில பக்தர்கள் குளித்தளியல் நெய்வேத்தியம் செய்து பக்தர்களுக்கு வழங்குகிறார்கள்.

## கொடிமரம் துவஜஸ்தம்பம்:

சுந்தரர் ஆரூர்த் தியாகராஜருக்குத் தம்பிரான் தோழர் ஆவார். ஆரூர்க் கோயிலில் உள்ள எல்லாக் கொடி மரத்திலும் சுந்தரர் சுவாமியை நோக்கிப் பார்த்த வண்ணம் இருப்பார்.

## வருட விழாக்கள் கோயில் திருவிழா ஆரம்பம்:

*மாசி மாத அஸ்தத்தில் கொடி ஏற்றம். திரு ஆதிரை, மார்கழி விழா, மாசி உத்திரம் நாள் சுந்தரருக்குப் பூதகணம் நெல் அட்டிச் செல்லும் விழா, பங்குனி உத்திரம் விழா, தேரோட்ட விழா, ஆடிப்பூர விழா, தெப்பத் திருவிழா, இறைபணி (நிறைபணி) விழா.*

## திருவாதிரை விழா:

*மார்கழி மாதம் திருவாதிரை விழா. இந்த விழா அப்பர் நடத்துவதாக வரலாறு. திருப்புகலூரில் திருஞானசம்பந்தர் இருந்த பொழுது திருஞானசம்பந்தருக்கு அப்பர் ஆரூர் ஆதிரை விழாவைப் பற்றிச் சொல்லுகையில்*

*முத்துவிதானம் மணிப்பொற்கவரி முறையாலே*
*பக்தர்களோடு பாவையர்சூழப் பலிப்பின்னே*
*வித்தகக் கோல வெண்டலைமாலை விரதிகள்*
*அத்தனாறு ராதிரை நாளா லதுவண்ணம்*

*என்பது போன்ற 10 பாடல்கள் திருவாதிரைப் பதிகமாகப் பாடி உள்ளார். மார்கழி மாதம் சதய நட்சத்திரத்தில் மாணிக்கவாசகர் உத்ஸவம் 7 நாட்கள் புறப்பாட்டுடன் நடைபெறும். மாணிக்கவாசகர் திருவெண்பாவை அறநெறிக் கோவிலில் மூன்று நாட்கள் வன்மீகநாதர், நீலோத்பலம்பாள், ராஜநாராயண மண்டபத்தில் தியாகராஜரிடம் தலா ஒருநாள் திருவெண்பாவை சமர்ப்பிப்பார். திருவாதிரை அன்று முதல் நாள் தியாகராஜர் இராஜ நாராயணன் (எண்ணக்காப்பு) மண்டபத்தில் எழுந்தருளியிருப்பார். மறுநாள் இரவு மகா அபிஷேகம் முடிந்ததும் மற்றும் விடியற்காலை நடராஜருக்கு அபிஷேகம் முடிந்து ஆதிரையன்று விடியற் காலை 6-மணிக்கு பதஞ்சலி, வியாக்கிரபாதர் முனிவருக்கு தியாகராஜர் பாத தரிசனம் தருவார். பாத தரிசனம் காலை 6 மணி முதல் மாலை 3 வரை நடைபெறும்.*

பக்தர்கள் தரிசிக்கலாம். மாலை 3 மணிக்குப் பாததரிசனம் முடியும் போது (கலைக்கும் போது) புதிய சிகப்பு திரை தியாகராஜருக்கு சாத்துவார்கள். திரைக்கு பின்னால் மாணிக்கவாசகரை நிறுத்தி திரைக்கு உள்ளே ஓதுவார். திருவெண்பாவை 20 பாடல்கள் பாடுவார். ஒவ்வொரு பாடல் முடிவுற்றபின் நெய்தீபம் தியாகராஜருக்கு காண்பித்து வாத்தியங்கள் முழங்கப்படும். ஆகவே 20 தடவைகள் இந்நிகழ்ச்சி நடைபெறும். சிகப்பு திரை மறுவருடம் ஆதிரை வரை தியாகராஜருக்கு பயன்படுத்துவார்கள். திருவாதிரைக்கு முன் 7 தினங்கள், கல்யாணசுந்தரர் பார்வதியுடன் மற்றும் சங்கரநாராயணியுடன் மாலையில் வெளியில் உள்ள ஊஞ்சல் மண்டபத்தில் ஊஞ்சலாட்டு, உற்சவம் நடைபெறும்.

**மாட்டுப்பொங்கல் :**

கோசாலை மாடுகள் ஆராதனை முடிந்து மாலை கல்யாணசுந்தரருடன் வீதிவுலா வரும்.

**பூதகணங்கள் நெல் அட்டிச் செல்லும் விழா மற்றும் கொடியேற்றம் மற்றும் பங்குனி உத்திரப் பெருவிழா :**

திருக்கோயில்களில் பெரும்பாலும் பிரம்மாவே உற்சவம் நடத்துவதால் பிரமோற்சவம் என்று அழைக்கிறார்கள். ஆனால் ஆரூரில் திருவாதிரை விழா அப்பர் பெருமான் நடத்தி ஞானசம்பந்தருக்கு முத்து விதானம் போன்ற பதிகமாகத் தெரிவித்த பின்னர் சம்பந்தர் பங்குனி உத்திர பெருவிழா முன்னின்று நடத்துவதாக வரலாறு. ஆகவே இது ***பங்குனி உத்திர பெருவிழா*** என அழைக்கப்படும்.

அதன் முன்னோடியாக தைப் பூசத்தன்று பந்தக்கால் முகூர்த்தம் முறையே 1. சண்டிகேசுவரர் அருகில் 2. தேவாசிரிய மண்டபம் அருகில் மற்றும் 3. தேரடி விநாயகர் அருகில் திருஞான சம்பந்தர் முன்னிலையில் நடைபெறும். தொடர்ந்து மாசி மாதம் உத்திர நட்சத்திரம் அன்று பங்குனி உத்திர பெருவிழாவின் அறிவிப்பாகக் காலையில் அப்பர் பெருமான் வீதி உலா சென்று வருவார். அன்று மதியம் 2.00 மணிக்குச் சண்டிகேஸ்வரர் மற்றும் அஸ்திர தேவர், ஆரூர் கிழக்கே 3 கி.மீ. தொலைவில் உள்ள மருதம் பட்டினம் சென்று அங்கு உள்ள திருக்கோயிலிருந்து புற்று மண் எடுத்து ஆரூர் பெரிய கோயிலுக்கு வரப்படும். புற்றுமண்ணை கோயிலில் வைத்து அதில் பாலி (நவதானியங்கள்) தெளிப்பார்கள் உடன் கோயிலில் மிருத்சங்கிரஹனம் அங்குரார்ப்பணம் நடைபெற்று தியாகேசருக்குச் சாயரட்சை பூஜை முடிவுறும். இது நிற்க. திருக்குவளை அருகில் குண்டையூரில் கிழார் என்பவர் சுந்தருக்கு நண்பர். அவர் வருடா வருடம் சுந்தரருக்கு நெல் மணிகள் கொடுப்பார். ஒரு வருடம் வான் பொய்த்து நெல் விளைச்சல் இல்லை.

இந்நிலையில் குண்டையூர் கிழார் இறைவனை வேண்டி நான் எப்படி சுந்தரருக்கு நெல் அளப்பது என வேண்டிக் கவலைப்படுகிறார். இந்நிலையில் இறைவன் அருளால் குண்டையூர் பூராவும் நெல் மலையாக குவிந்தது. குண்டையூர் கிழார் மகிழ்ச்சி அடைந்து சுந்தரரிடம் நீங்கள் நெல் ஆரூருக்கு (பரவைநாச்சியார் வீட்டிற்கு) எடுத்துச் செல்லலாம் என வேண்டுகிறார். சுந்தரர் நெல் மணிகள் ஆரூருக்கு எடுத்து செல்ல (அட்டித் தர) சப்தவிடங்கத் தலங்களில் ஒன்றாய் தருமை ஆதீனத்திற்குச் சொந்தமான திருக்குவளைக் கோயிலில் எழுந்தருளி உள்ள சிவபெருமானை வேண்டி "நீள நினைந்து அடியேன்" என்று தொடங்கும் பதிகங்களைப் பாடி வேண்டுகிறார். திருக்குவளை சிவபெருமான் அருளால் குண்டையூர் நெல் மணி மலைகள் பூதகணங்கள் ஆரூர் பரவை நாச்சியார் கோயிலுக்குக் கொண்டு வந்து சேர்ப்பிக்கின்றன. நெல் மணிகளைச் சுந்தரர் ஆரூரில் உள்ள அனைத்து மக்களுக்கும் வழங்குவதாக வரலாறு.

இதன் நிகழ்வாக திருக்குவளை குண்டையூரிலிருந்து பஞ்சபூதங்கள் வேடம் அணிந்து நெல்கோட்டைகள் வரும். மேற்கண்ட தியாகராஜர் சாயரட்சை முடிந்து பின்னர் இரவு 7.30 மணிக்குத் தற்பொழுது திருமஞ்சன வீதி என்று அழைக்கப்படும் பரமன் பாதம் விதியில் உள்ள பரவை நாச்சியார் கோயிலில், பரவை மற்றும் சுந்தரருக்கு அபிஷேக ஆராதனை முடிந்து எல்லாப் பக்தர்களுக்கும் தலா கைப்பிடி அளவு நெல் மணிகள் நிர்வாகத்தினர் வழங்குவார்கள். இந்த நிகழ்ச்சி சிறப்பாகக் காண்பதற்கு இனிமையாக நடைபெற்று வருகிறது. மாசி உத்திரம் அன்று இரவு 7.30 மணிக்கு பரவையார் கோவிலில் பக்தர்கள் கூட்டம் நிறைந்து இருக்கும்.

தொடர்ந்து மறுநாள் மாசி மாதம் அஸ்தம் நட்சத்திரத்துடன் அன்று காலையில் வினாயகர், சுப்பிரமணியர், சந்திரசேகரர், சண்டிகேஸ்வரர் உடன், பல்லக்கில் கொடித் துணியுடன் வீதி உலா வந்தபின்னர் குறிப்பிட்ட லக்னத்தில் ஆரூர் தியாகராஜர் கொடியேற்றம் (மகா துவாஜா ரோகணம்) நடைபெறும். கொடியேற்றம் முடிந்த பின்னர் தியாகராஜார் சன்னதியில் முறை குருக்களுக்கு வயதான குருக்கள் வெள்ளிக் காப்பு (சம்பந்தர் கட்டிய கங்னனம்) வலது கையில் கட்டிய பின்னர் ஸ்ரீமுகம் வாசிக்கப்படும். அதாவது தியாகேசர் தனக்கும் ஆலால சுந்தரருக்கும் பங்குனி உத்திரப் பெருவிழா சிறப்பாக நடைபெற, விழா அறிவித்து அனைவரும் வருகை தர தமிழ் ஓதுவார். மூலம் ஸ்ரீமுகம் எழுதி வாசிக்கப்படும்.

இதன் தொடர்ச்சியாக சண்டிகேஸ்வரர் முன்னிலையிலும் ஸ்ரீ முகம் வாசிக்கப்படும். அன்று நிர்வாக அதிகாரி முன்னிலையில் ராஜநாராயண மண்டபத்தில் பக்தர்களை உட்கார வைத்து சந்தனம் கொடுத்து மண்மடக்கில் கிழிவு துணிமேல் உற்சவ பத்திரிகை வைத்து கொடுப்பார்கள். காரணம் அக்காலத்தில் அப்பர் சம்பந்தர் கோயில் உற்சவம் நடத்தியதை நினைவூட்டும் முகத்தான் கிழிவு துணி அணிந்துக்கொண்டு மடக்கில் பிரசாதம் பெற்று பக்தர்கள் ஒத்துழைக்க கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். சிப்பந்திகளுக்கு பரிவட்டம் வழங்குவார்கள்.

தொடர்ந்து அன்று இரவு 7.00 மணிக்கு மேல், கீழ சந்நிதி தெருவில் இந்திர மண்டபத்தில் யானை ஏறுவார்க்கு சண்டிகேஸ்வரர் முன்னிலையில் வெண்குடை பிடித்து திருக்கல்யாணம் நடைபெறும். ஆதி சண்டிகேஸ்வரர் திருவாணையை தலை மேல் தாங்கி விழா அறிவிக்கும் நபருக்கு யானை ஏறுவார் என்று பெயர். (இத்தொண்டை இந்திரனே மேற்கொண்டிருப்பதாக வரலாறு)

பிறகு தொடர்ந்து தினமும் விநாயகர், சுப்பிரமணியர், சண்டிகேசுவரர் சுவாமிகள் திருவீதியுலா நடைபெறும். பிறகு சந்திரசேகரர் பட்டம் முடிந்து மேற்கண்ட திருமூர்த்திகளுடன் சந்திரசேகரரும் திருவீதியுலா வருவர். கடைசியாக வெள்ளி யானை வாகனம், வெள்ளிரிஷப வாகனம் (வெள்ளி 13.9.1921ல் 8691 ரூபாய் எடையில் செய்யப்பட்டது.) முடிவில் கைலாச வாகன உற்சவம் நடைபெறும்.

## மகா சிவராத்திரி :

மாசிமாதம் சிவராத்திரியில் வன்மீகர், விடங்கர், கமலாம்பாள், அசலேஸ்வரக்கு நான்குகால அபிஷேக ஆராதனையும், தியாகராஜருக்கு நான்கு கால ஆராதணையும் நடைபெறும். தொடர்ந்து 5 தினங்கள் இரண்டாம் பிரகாரத்தில் நாட்டியாஞ்சலி கலை நிகழ்ச்சி நடைபெறும். அன்று எல்லா சுற்றுக்கோயில் மூர்த்திகளுக்கும் அபிஷேகம் செய்து புது வஸ்திரம் சாற்றப்படும். பிரகாரத்தில் அகல் விளக்கு ஏற்றுவார்கள்.

## பங்குனி உத்திரம் மற்றும் தேர்த்திருவிழா :

கோயில் திருவிழாக்காலத்தில் உற்சவர்கள் திருவீதிஉலா நடைபெறும். கடைசியாக, கைலாச வாகனம் முடிந்து இரவு தியாகேசப் பெருமான் அஜபா நடனத்துடன் யதா ஸ்தானத்திலிருந்து இரவு தேவாசிரிய மண்டபத்திற்குச் (ஆயிரங்கால் மண்டபம்) செல்வார். தேருக்குச் செல்லும் வரை தேவாசிரிய மண்டபத்தில் இருப்பார். பங்குனி உத்திரம் அன்று முதல் நாள் இரவு தேவாசிரிய மண்டபத்திலுள்ள தியாகேசருக்கு மகா அபிஷேகம் முடிந்து உத்திர நட்சத்திரத்தில் அதிகாலை 6-க்கு பதஞ்சலி வியாக்ரபாதருக்குத் தியாகேசர் பாத தரிசனம் தருவார். பக்தர்கள் காலை 6 முதல் 3 வரை தரிசிக்கலாம். பாதம் தங்கத்திலான ஐந்து தலை நாகத்தின் மேல் இருக்கும். அன்று நகை மற்றும் புஷ்பக அலங்காரத்துடன் தரிசிக்க, சிந்திக்க மன நிறைவு ஏற்படும்.

தேர் ஓட்டம் குறிப்பிடும் நாளில் சில தினங்களுக்கு முன்னதாக 1. வினாயகர் 2. சுப்ரமணியர் 3. தியாகராஜர், 4. நீலோற்பலாம்பாள் 5. சண்டிகேஸ்வரர் (பஞ்சமூர்த்திகள்) எனத் தனியாகத் தேவாசிரிய மண்டபத்திலிருந்து தேருக்குச் செல்வார்கள்.

**தேர் விழா :**

தேர் இழுப்பது ஒரு செயற்கரிய செயலாகக் கருதப்பட்டது. கோயிலில் கொடி ஏறிவிட்டால் மக்களிடையே இனப்பாகுபாடு, சாதி அழுக்குகளும், வழக்குகளும் இருக்கக்கூடாது என்ற கருத்தில் ஊர் மக்கள் ஒன்று கூடித் தேர் இழுக்கும் பணியில் ஈடுபடுவார்கள். தேர் நிலைக்கு வந்து விட்டது என்ற வாசகமே ஒரு செயற்கரிய செயல் செய்து முடிக்கப்பட்டதைக் குறிக்கும் ஒரு முதுமொழியாகவே வழங்குகிறது. தேர் இலுப்பை மரத்தால் ஆனது. திருவாரூர்க் கோயிலுக்கு 5 தேர்கள் உள்ளன. பெரிய தேரை இழுக்க அப்போது 12000 பேர்கள் தேவைப்பட்டனர். காலமாற்றத்தால் தேரிழுக்க வருகை தரும் பக்தர்கள் குறையவே தற்போது மரச்சக்கரங்களுக்குப் பதிலாக இரும்புச் சக்கரம் பொருத்தி, இயந்திரப் பலனைப் பயன்படுத்தித் தேர் இழுக்கக் கோயில் நிர்வாகம் ஏற்பாடு செய்கிறது. தற்போது 2000 பேரைக் கொண்டு தேர் இழுக்கப்படுகிறது. மக்களிடையே ஒற்றுமையினை வளர்க்கவும், வேறுபட்ட கருத்தால் மாறிப்போகாமல் இறை உணர்வோடு இணையவுமே தான் தேர்த் திருவிழாக்கள் நடத்தப் பெறுகின்றன.

இந்தியாவிலேயே பெரியதேர் ஆரூர் ஆழித்தேர். இறைவன் கோயிலைப் போன்றே அமைக்கப்பட்டது. தேரின் அடிப்பாகத்தில் பூலோக வாழ்வு, ஆகாய வாழ்வு, சொர்க்க வாழ்வு ஆகியவற்றைச் சித்தரிக்கும் அழகிய பல உருவங்களைக் காணலாம்.

ஆரூர்த்தேர் 300 டன் எடை உள்ளதும் 96 அடி உயரம் உள்ளதும் ஆகும். குதிரை வடிவிலான பொம்மைகளின் நீளம் 27 அடி ஆகும். ஆழித்தேர் வித்தகனை "நான் கண்டது ஆரூரே என்கிறார் அப்பர்" இதுவரை அம்பாளுக்கு சப்பர தேராக இருந்தது 30 லட்சம் ரூபாய். செலவில் 18 அடி உயரத்தில் புதிய தேர் செய்யப்பட்டு 25.4.2008 வெள்ளோட்டம் விடப்பட்டது. தேர் ஓட்டம் முடிந்து நிலைக்கு வந்தவுடன் அன்று இரவு தியாகேசர் ராஜ நாராயண மண்டபம் (எண்ணைக்காப்பு மண்டபம்) பிரவேசம். அவ்விடம் பிராயசித்த அபிஷேகம் நடைபெறும். மறுநாள் இரவு பக்தர்கள் உபயமாக முசுகுந்த அர்ச்சனை நடைபெறும்.

**பக்தர்களுக்குக் காட்சிதரல் : (பக்த காட்சி)**

திருவிழாவின் நிறைவாகத் தியாகேசர் பக்தர்களுக்குக் காட்சி கொடுக்க, முதல் நாள் இரவு ராஜ நாராயண மண்டபத்திலிருந்து புறப்பட்டுத் தட்டச்சுற்று மண்டபம் வந்து சர்க்கரைப் பொங்கல், பாவாடையுடன் கிருஷ்ணகந்த சாயரட்சை முடித்துக் கொண்டு மீண்டும் தியாகேசர் தேவாசிரிய மண்டபம் செல்வார். மறுநாள் மதியம் பக்தகாட்சி மகா அபிஷேகமும் இரவு 7-க்கு முசுகுந்த அர்ச்சனையும் நடைபெறும். பிறகு தியாகேசர் வாணவேடிக்கையுடன் தேவாசிரிய மண்டபத்திற்கு எதிரில் உள்ள பக்த காட்சி மண்டபத்தைச் சுற்றி 3 தடவைகள் அஜபா நடனத்துடன் ஆடிப் பக்தர்களுக்குக் காட்சி தருவார்.

அன்று தியாகேசருக்குத் தங்க ஆபரணங்கள், வைர விபூதி பட்டை, தலைமாலை மகரகண்டி போன்ற ஆபரணங்கள் மற்றும் மலர்களால் திருவாசியை மறைத்து அலங்கரிக்கப்பட்டு ஆடிக் கொண்டு வருவது காண்பதற்குப் பேரின்பமாக இருக்கும். மூன்றாவது சுற்று முடிந்து பக்தகாட்சி மண்டபத்திற்கு எதிரில் பானகம், நெய்வேத்தியத்துடன் கூடிய அலங்கார தீபத்துடன் தியாகேசர் பக்தர்களுக்குக் காட்சி கொடுத்த பின்னர் யதாஸ்தானம் செல்வார். இந்த விழா ஆரூர் வர்த்தகர்கள் உபயமாக நடைபெறுகிறது. அன்று திருவிழாவில் ஈடுபட்ட பக்தர்கள் மற்றும் திருக்கோயில் ஊழியர்களுக்கு பாராட்டு நடைபெறும்.

## தெப்பத் திருவிழா:

பக்த காட்சி முடிந்து தியாகேசர் யதாஸ்தானம் சென்ற பின்னர் குறிப்பிட்ட 3 நாட்களில் கமலாலயத்தில் தெப்பத் திருவிழா நடைபெறும். தமிழ்நாட்டில் பெரிய தெப்பம் உயரம் 30 அடி. நீளம், அகலம் தலா 50 அடி. 800 பேர்கள் உட்காரக் கூடிய வசதி உள்ளது. மரச்சிற்பங்கள், அலங்கார ஒளி விளக்குகள் மற்றும் அசையும் பொம்மைகள் காண்பதற்கு அழகாக இருக்கும். தெப்பம் தொடர்ந்து 3 நாட்கள் நடைபெறும். நாள் 1-க்கு 3 சுற்று வீதம் நடைபெறும். பிரபல இன்னிசை நிகழ்ச்சிகள் நடைபெறும். தெப்பத்தில் அம்பாளுடன் கல்யாணசுந்தரர் பவனி வருவார். பெருவிழா முடிந்த பின்னர் கொடி இறங்கியவுடன் சம்மந்தப்பட்ட சிவாச்சாரியாரின் காப்பு அவிழ்க்கப்படும். அன்று இரவு மேற்படி சிவாச்சாரியார் / நாயனார் மேள தாளத்துடன், பக்தர்கள் சூழ குடையில் அழைத்து அவர் வீட்டிற்குச் சென்று கௌரவிப்பார்கள்.

## ஆடிப்பூரம் :

கமலாம்பாளுக்கு ஆடிப்பூரத்தில் 10 நாள் கொடி ஏற்றத்துடன் உற்சவர் புறப்பாடு விநாயகர், சுப்பிரமணியர், மனோன்மணி, சண்டிகேஸ்வரி புறப்பாடு நடைபெறும். வாகனங்களும் உண்டு. (வெள்ளி யாணை வாகனம், வெள்ளி ரிஷபம்) தேர்விழா முடிந்து பூரத்தன்று கமலாம்பாளுக்கு வெள்ளை சாத்தி வெள்ளை பூச்சூடி முளைப்பயறு மடியில் கட்டி கமலாலயத்தில் தீர்த்தம் வழங்கிப் பூரம் கழிப்பார்கள்.

## ஆடி சுவாதி :

ஆடி சுவாதி நட்சத்திரத்தில் சுந்தரர் கைலாயம் சென்றார். சுந்தரர் திருநாவலூரில் அவதரித்தாலும் திருவாரூர் பிறந்த வீடாகக் கருதி தியாகேசருக்கு தம்பிரான் தோழராகி பலகாலம் தங்கி இருந்தவர். ஆரூரில் தான் "திருத்தொண்டத்தொகை" அரங்கேறியது. ஆடி சுவாதி முதல் நாள் சுந்தரர் புதுத்தெரு நாலுக்கால் மண்டபத்தில் எழுந்தருளியிருப்பார். சுவாதி அன்று காலை சுந்தரர் நாலுக்கால் மண்டபத்திலிருந்து பக்தர்கள் சூழ மேல தாளத்துடன் பெரியகோயிலுக்கு ஊர்வலமாக அழைத்துவரப்படுவார். ஆராதனை நடைபெறும். இரவு 63 நாயன்மார்கள் மற்றும் தோகை அடியார்களுடன் வீதிஉலா வருவார். (தற்போது இல்லை)

### நவராத்திரி :

நவராத்திரியில் 9 தினங்கள் ராஜநாராயண மண்டபத்தில் பொம்மை கொலு உற்சவம் நடைபெறும். ஒவ்வொரு நாளும் நீலோற்பலாம்பாள் தனி அலங்காரத்துடன் காட்சி அருளுவார். சிறப்பு சொற்பொழிவு - கலைநிகழ்ச்சி நடைபெறும்.

### நிறைபணி (இறைபணி) விழா :

புரட்டாசி மாதம் பூரட்டாதி நட்சத்திரத்தில் இந்திரன் பூசை செய்யும் போது தியாகேசரை மறந்து வேறு சிந்தனையில் இருந்து விட்டார். கீழசன்னதி இந்திர மண்டபத்தில் இந்திரன் நீசனாக தியாகேசரைத் தரிசிக்க வந்தார். வன்மீகர் திரை மறைவாக இருந்தார். திருக்கோயில் தேவலோகம் போலக் காட்சி அளிக்கும். அன்று இரவு கோயில் பிரகாரம் 4 சுற்றிலும் மேல்புறம் அழகான புடவை வேஷ்டிகள் வஸ்திரங்கள் மாவிலை வாழை கனி, இளநீர் மற்றும் காய்கறிகளுடன் புஷ்பத்துடன் கோயில் அழகுப்படுத்தப் பட்டுப் பார்ப்பதற்குத் தேவலோகம் போலக் காட்சியளிக்கும். இந்திரன் நீசனாக வந்ததும் சன்னதி எதிர் நிலைக் கண்ணாடியில் தேவலோக ரம்பா, ஊர்வசி, மேனகை தெரிவர். வன்மீகர் திரை மறைவிலும், தியாகேசரைத் தரிசிக்கக் கிடைக்கமாட்டார். மற்றும் வருட பணி முடிந்து நிறைவாக இருப்பதால் இதனை நிறைபணி என்பார்கள். அன்று கோயில் ஊழியர்களுக்கு ஆடைகள் வழங்குவதாக மரபு.

### தியாகராஜர் கோயில் சிறப்புச் சந்நிதிகள் ஆரூர் அமர்ந்த அரசே போற்றி (முதல் சுற்று – முதலில் தரிசிப்பது)

கீழைச்சந்நிதியில் இந்திரனுக்குள்ள மரியாதை மண்டபம் (இந்த மண்டபத்தில் மாசி மாதம் அஸ்த நட்சத்திரத்தில் கொடியேற்றம் அன்று இரவு யானை ஏறுவார்க்கு சண்டிகேஸ்வரர் முன்னிலையில் வெண் குடை பிடித்துத் திருக்கல்யாணம் நடைபெறும்.) உற்சவ மூர்த்திகள் மற்றும் தியாகராஜர் வீதிஉலாச் செல்லும் போது முன்னால் வெண்குடையுடன் யானை ஏறுவார் செல்வார். கிழக்குக் கோபுர வாயிலின் இடப்பக்கம் கோயில் கொண்டுள்ள விநாயகரையும் வலப்பக்கம் அமர்ந்துள்ள முருகனையும் வழிபட்டு ஆலயத்தின் உள் நுழைய வேண்டும்.

### வீதிவிடங்க விநாயகர்:

வீதி விடங்கர் திருநாமத்தையும் தன்னோடு சேர்த்துக் கொண்ட விநாயகர், பக்தர்களுக்கு வேண்டுவனவற்றை யெல்லாம் வாரி வழங்குபவர்.

### பிரம்மநந்தி :

பிரம்மநந்தி வீதிவிடங்க விநாயகருக்குப் பின் உள்ளார். இவர் கண்கண்ட தெய்வம். மழை வேண்டி இவர் மீது நீர் நிரப்பினால் மழை கொட்டும். பசுக்கள் கறவாது இருந்தால் இவருக்கு அருகு சாற்றி அதனைப் பசுவுக்குக் கொடுத்தால் நன்றாகப் பால் கறக்கும்.

## தேவாசிரிய மண்டபம் (திருக்காவணம்)

இங்கிருந்து வடபுறம் தேவாசிரிய மண்டபம் நமக்குக் காட்சியளிக்கிறது. திருவார் பெருமை திகழ்கின்ற தேவாசிரியம் தேவர்களும் அடியார்களும் இங்குச் சித்தம் தெளிந்து, சிவானந்தப் பெருங்கடலில் திளைத்திருப்பர். விண்ணவர் ஒழிய மண்மேல் மிக்க சீரடியார் கூடி எண்ணிலார் இருந்தனர் எனப் பெரியபுராணம் பேசுகிறது. தேவாசிரியனை வணங்க அடியார்களை மதிக்கும் மனநிலை வளர்பிறை என மிகுகிறது. செல்வத் தியாகேசர் ஆழித்தேர் விழா நிறைவுறும் போது அங்கு எழுந்தருளி பெருநீராட்டு கொண்டு சிவச்செங்கோல் செலுத்துவார். மண்டபத்தின் மேல் கூரையில் கணிகையர்களில் நடனக் கற்சிற்பங்களும் சப்த விடங்க தியாகராஜர், முசுகுந்த மன்னர் இந்திரன் சார்பாகப் போர் செய்வது, ஆரூர் கொடியேற்றம் போன்ற சிங்காதன ஓவியங்களும் வரையப் பட்டுள்ளன. எனவே இம்மண்டபம் இராஜதானி மண்டபம் அல்லது ஆயிரங்கால் மண்டபம் என்பர். சுந்தரர் திருத்தொண்டத் தொகை, பாடக்காரணமான இடம். சுமார் 200 கல்தூண்கள் வெளியில் உள்ளன. தேவாசிரிய மண்டபம் தரிசித்த பின்னர் தான் கோயிலுக்கு உள்ளே செல்ல வேண்டும் என்பது மரபு. கல்தூண்களை ஒட்டி 38 1/2 லட்ச ரூபாய் செலவில் தெற்கு கோபுரம் to தேவாசிரிய மண்டபம் கிழக்கு கோபுரம் to ஆரியன் கோபுரம் வரை மண்டபம் கட்டப்படுகிறது.

**தேவாசிரிய மண்டபச் சிறப்புகள்:** (ஆயிரங்கால் மண்டபம்)

தியாகேசரைச் சேவிக்கும் பொருட்டு இத்துணைத் தென்று அளவிடப்படாத பேராசையோடு வந்து கூடும் திருமால், பிரும்மா, இந்திரன் முதலிய தேவர்கள் எல்லோரும் அம்மண்டபத்தில் நிறைந்து இருப்பார்கள். விபூதி உத்திராட்சம் என்கிற சிவச்சின்னங்களைத் தரித்தவர்களும் திருவைந்தெழுத்தை உச்சரிப்பவர்களும், ஓடும், பொன்னும், ஒப்பநோக்குபவர்களும், நல்வினையால் வரும் இன்பத்திலும், தீவினையால் வரும் துன்பத்திலும், சமபுத்தி பண்ணுபவர் களும் பசுபதியாகிய சிவ பெருமானுடைய திருவடிக் கண்ணதாகிய மெய் அன்பு ஒன்றையே உயர் ஒப்பில்லாத பெரும் செல்வம் எனக் கொண்டு இடையறாது தொழுபவர்களும், சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் வீட்டு நெறி நான்கின் வழியே நிற்பவர்களுமாகிய திருத்தொண்டர்களுடைய திருக்கூட்டம் அத்தேவாசிரிய மண்டபம் எங்கும் நிறைந்திருக்கும். (திருவாரூர் சிறப்பு - ஆறுமுக நாவலர்) திருக்கோயில் கற்றளியாக மாறுவதற்கு முன்பு பூங்கோயிலாக விளங்கியது. அக்காலத்தில் தேவாசிரியன் காவணம் என்று அழைக்கப் பட்டதைப் பெரியபுராணத்தால் அறியலாம். திருவாரூர் புராணத்தை எழுதிய சிதம்பரம் கண்கட்டி மறைஞானசம்பந்தர் தேவாசிரிய மண்டபச் சிறப்பைப் புலப்படுத்துகிறார். ஆசிரியர், குரவர் என்ற சொற்கள் சைவத்தின் வழித்தம்பால் குற்றம் ஏதுமின்றிப் பிறர்க் குற்றத்தைப் போக்கவல்ல ஞானிகளையே குறிப்பதாகும். அதன் உயர்வு விளங்குமாறு இங்கே அவர் கூடும் இடம் தேவாசிரியம் என உரைக்கப்பட்டது.

அறன் அறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை, திறனறிந்த சான்றோர்கள் தேர்ந்து வாழும் இடமே தேவாசிரியம். தெளிவாக விளங்க உரைக்க வேண்டும் என்றால் இறைவனை ஒத்த அடியாரையே தேவாசிரியர் எனக் கொள்ள வேண்டும். ஒருமையுடன் அவன் தன் திருமலரடி நினைக்கின்றார். உறைகின்ற இடமே தேவாசிரியம் ஆகும். தேவர்களே, இவர்களது சாபத்திற்கு அஞ்சும் தன்மையினர். தேவர்கள் தேவாசிரியத்திற்கு வந்து அங்குக் குழுமியுள்ள அடியார்களை வணங்கிய பின்னரே பூங்கோயிலுக்குள் சென்று புற்றிடங்கொண்ட பெருமானை வணங்கி மகிழ்வர் என்றால் அதன் பெருமையை அளவிட்டு அறிய முடியுமா? தேவார மூவரும், பிற நாயன்மார்களும் தேவாசிரிய மண்டபத்தடியார்களை வணங்கிய பின்னரே பூங்கோயிலுக்கு வழிபடச் செல்வது மரபு என்று பேசுகிறது பெரிய புராணம். இத்தேவாசிரியத்தில் குழுமியுள்ள அடியார்களும் பூங்கோயில் வாழும் சிவலிங்கமும் ஒன்றே என்பது சைவம் காத்த சான்றோர்கள் எண்ணமாகும்.

**மாலற நேயம் மலிந்தவர் வேடமும்**
**ஆலயம் தானும் அரன் எனத் தொழுமே**
**(சிவஞானபோதம்)**

என்ற அடிகள் இந்த ஒற்றுமையை விளக்குகிறது.

பூங்கோயிலைப் போலவே தேவாசிரிய மண்டபத்தையும் சிறப்பிக்கின்றார் தெய்வச் சேக்கிழார். பல இடங்களில் அதன் சிறப்பு விளங்க எடுத்துரைக்கின்றார். இத்தேவாசிரியர் மண்டபம் தான் சைவத்தைக் காத்த இடம். சுந்தரர் அவதார நோக்கம் நிறைவேறிய இடம். பெரிய புராணத்திற்கு வித்திட்ட இடம். ஆண்டவன் சிறப்பும், அடியார் சிறப்பும் ஒன்று என உறுதி செய்யப்பட்ட இடம். பரவையிடம் தூது நடந்த தியாகராஜ பெருமானைத் தேவர்களும், பூதகணங்களும் பின் தொடர்ந்தனராம். பின்தொடர்வதற்கு முன்பாக, தேவாசிரியம் வந்து அடியார்களை வணங்கிய பின்னரே பின் தொடர்ந்தனராம். என்னே அதன் சிறப்பு.

அப்படிப்பட்ட பெருமை மிகுந்த அடியார்களுக்குள் ஒரு அடியாரே விறன்மிண்டர். குரு, லிங்க சங்கமம், வழிபாடு சைவர்கள் வழிபாடு. அம்முறையில் விளங்கும் திருச் செங்குன்றூரின் வேளாளர் மரபினர் விறன்மிண்டர். அடியார்களையும் லிங்கத்தையும் சிவன் என வழிபட்டவர். இவர் தங்கிய இடம் தேவாசிரியம். தேவாசிரிய மண்டபத்தில் தியாகேசர் தில்லை வாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன் என்று தொடக்கம் கொடுத்துத் தொடுக்கச் சொல்ல, சுந்தரர்பெருமான் 63 தனி அடியார்களையும் 9 தொகை அடியார்களையும், திருத் தொண்டத் தொகை மூலம் வணங்கிப் பாடி முடித்தார்.

திருவாரூர் மும்மணிக்கோவை பாடிய பெருமைக்குரிய சேரமான் பெருமான் நாயனார் ஆட்சி செய்த சேர நாட்டிலிருந்து பல தலங்களை வழிபட்டு நிலையாகத் தங்க வேண்டிய இடம் திருவாரூர் தேவாசிரியமே என முடிவெடுத்துத் தங்கியவர். அடியார்களின் மனம், வாக்கு, காயம் மூன்றும் எப்போதும் திருவருளிலேயே தோய்ந்திருப்பதால் அவர்களை வழிபடும் உயிர்கள் திருவருட் சார்பு பெற்றுச் சிவமாந்தன்மை அடையும் எனலாம். எனவே அடியார் வழிபாடு அவசியம்.

"பெருமையால் தம்மை ஒப்பார் பேணலால் எம்மைப் பெற்றார்
ஒருமையால் உலகைவெல்வார் ஊனம் மேல் ஒன்றும் இல்லார்
அருமையாம் நிலையில் நின்றார் அன்பினால் இன்பம் ஆர்வார
இருமையும் கடந்து நின்றார் இவரை நீ அடைவாய்"

**(திருத்தொண்டர் புராணம் 342)**

என்று திருவாரூர்க் கோயிலின் தேவாசிரிய மண்டபத்திலுள்ள அடியார்களின் பெருமையைச் சுந்தரருக்கு இறைவனே கூறினார் என்றால் அடியார் பெருமையை உணர்த்த வேறு சான்று வேண்டுமோ?

சிறந்த அடியார்கள் குழுமி வாழும் தேவாசிரியத்தைப் பெற்ற பெருமையினால் திருவாரூரும் தேவாசிரியபுரம் என்ற சிறப்புப் பெயரை உடையதாயிற்று.

### பக்தகாட்சி மண்டபம்:

தொடர்ந்து இடதுபுறம் பக்த காட்சி மண்டபத்தில் பங்குனி உத்திரப்பெருவிழா நிறைவுற்று ஆழித் தேர் விழா முடிவில் அருள் நடனமாடி தியாகராஜப்பெருமான் பக்தர்களுக்குக் காட்சியளிப்பார். 3 சுற்று அஜபா நடனம் காண இனிமையாக இருக்கும்.

### ஊஞ்சல் மண்டபம்:

பக்த காட்சி மண்டபத்தின் எதிரே உள்ள ஊஞ்சல் மண்டபத்தில் திருவாதிரைத் திருவிழாவின் போது அருள்மிகு கல்யாணசுந்தரர் பார்வதி, மற்றும் சங்கநாராயணியுடன் ஊஞ்சலாட்டு உற்சவம் கொள்வார். பல வருடங்களாக நின்றிருந்த இந்த உற்சவம் மீண்டும் 2007 முதல் ஆரம்பித்து நடத்தப்படுகிறது.

### ஆகாச விநாயகர்:

நமது பிரகார வலத்தைத் தொடர்ந்தால் தெற்குப்பிரகாரத்தின் நடுவில் இருப்பவர் ஆகாச விநாயகர் இவர் சுந்தரர் கயிலைக்குச் சென்றபின் பரவையாரைக் கயிலைக்கு எடுத்துச் சென்றதாக ஒரு செய்தி நிலவுகிறது விநாயகரைத் தினமும் சுந்தரர் வணங்குவார். தொடர்ந்து மேற்கு நோக்கிச் சென்றால் துலாபார மண்டபம் உள்ளது.

### துலாபார மண்டபம் :

இந்திரனிடம் தான் பெற்றவர்களில் உண்மையான தியாகராசரை எங்கு ஸ்தாபிக்கலாம் என்பதை அறிய விரும்பிய முசுகுந்தன் திருவாரூரை ஒரு தட்டிலும், ஏனைய தலங்களை ஒரு தட்டிலும் வைக்கத் திருவாரூர் இருந்த தட்டு தாழ்ந்திருந்தது. எனவே உண்மைத் தியாகராசரைத் திருவாரூரில் தாபித்தார். (துலாபாரம்) இத்தகைய சிறப்புக்குக் காரணமாக இருந்தது. இத்துலாபார மண்டபமே.

### சிலை - பாதுகாப்பு மையம் (மேற்குச் சுற்று):

தமிழ் நாட்டில் பாதுகாப்பு இல்லாத கோயில்களில் உள்ள ஐம்பொன் சிலைகள், பொன் சிலைகள் இங்கு வைத்துப் பாதுகாக்கப் படுகின்றன. பார்வையாளர்கள் அனுமதி இல்லை. வெளியூரிலிருந்து வந்துள்ள திரு மூர்த்திகளுக்கு அபிஷேக ஆராதனை செய்ய வேண்டும் என்றால் முன் அனுமதி பெற வேண்டும். உற்சவக் காலத்தில் அந்தந்தவூர் புறப்பாட்டிற்கு முன்னனுமதி பெற்று எடுத்துச் செல்லலாம்.

### சரஸ்வதி தீர்த்தம்:

இத்தீர்த்தத்தில் நீராடியவர்கள் அறிவில் ஆதிசேஷன் போல விளங்குவர். நாவன்மை படைத்தவர்கள் ஆவார்கள். இத்தீர்த்தம் பிரமன் வேண்டுகோளின்படி பாதாளத்திலிருந்து ஆரூர் வந்தடைந்தது.

### ஆஞ்சநேயர்:

சரஸ்வதி தீர்த்தத்திலிருந்து சில அடிகள் வடக்கு நோக்கி நடந்து மேற்கே நோக்கினால் பல மூர்த்திகள் நிறைந்த மேலைக் கோபுரம் காட்சியளிக்கும். மேலைக் கோபுரத்தின் கீழ் தெற்குச் சுவரில் சுமார் 15 அடி உயரத்தில் ஆஞ்சநேயர் இருக்கிறார். பக்தர்கள் ஆஞ்சநேயருக்கு வெண்ணெய் சாற்றியும், வடைமாலை சாற்றியும் வணங்குகின்றனர். காரியசித்தி கூட்டுவிக்கிறார் ஆஞ்சநேயர்.

### சபாபதி மண்டபம் & அலுவலகம்:

இந்த மண்டபத்தின் உள்ளே சுந்தரர் வரலாறு ஓவியமாக எழுதப்பட்டுள்ளது. இங்கு மார்கழி மாதத் திருவாதிரையின் பொழுது நடராசர் தரிசனம் தருவார். தற்போது நிர்வாக அதிகாரி அலுவலகம் உள்ளது. இதில் சிதம்பரம் நடராஜர் 24.12.1648 முதல் 14.11.1686 வரை தில்லை (சிதம்பரம்)யில் இல்லாமல் மதுரை, குடுமியான்மலை போன்ற இடங்களில் இருந்து பிறகு திருவாரூரில் 30 வருடம் பாதுகாப்பாக இருந்துள்ளார். திருவாரூர் கோயிலில் இருந்து வருடா வருடம் சிதம்பரம் கோயிலுக்கு 7 கலம் நெல் கொடுக்கிறார்கள். பக்கத்தில் அருங்காட்சியகம் உள்ளது. வெளியில் நிர்வாக அதிகாரி நேரடிப் பராமரிப்பில் அழகிய பூந்தோட்டம் ஒன்றும் உள்ளது.

## தல விருட்சங்களின் தலம்:

பாடல் பெற்ற 275 தலங்களில் உள்ள 68 வகையான தல விருட்சங்களும் இத்திருக்கோயில் நந்தவனத்தில் வைத்து வளர்க்கப்பட்டு வருகிறது. இந்தத் தல விருட்சங்களை வழிபட்டாலே எல்லாக் கோயில்களுக்கும் சென்ற பலன் உண்டு. சில விருட்சங்கள் பட்டுப் போனதால் புதிதாக நடவு செய்ய ஏற்பாடு செய்யப்படுகிறது.

## புராண மண்டபம் (தியானம்) (ஆனந்தேஸ்வரம்)

கோயிலை ஒட்டி வடக்குப் பக்கம் சென்றால் புராண மண்டபம் உள்ளது. மனோமய கோசத்திலிருப்பதால் ஆய்ந்து அடங்கியிருக்கும் நிலை.

## கமலாம்பாள் கோயில் :

வடக்கு நோக்கிச் சென்றால் ஆலயத்தின் வடகிழக்கே ஈசான்ய திசையை நோக்கி உள்ளது, கமலாம்பாள் சந்நிதி. கோபுர மேல் தளத்தில் தெற்குப் பார்க்க சட்டைநாதர் எழுந்தருளியுள்ளார். வாயிலின் முன்னே தேவியுடன் கூடிய உச்சிஷ்ட கணபதி உள்ளார். இங்கு வந்தால் யோக சித்தி கைகூடும். விமானத்தில் ராசி கட்டங்கள் உள்ள கமலாம்பாள் கோயில் வடபுறச் சுவரில் சோமாசிமாற நாயனார் ஓவியம் வரையப்பட்டுள்ளது. தியாகேசர், சுந்தரர் வேண்டுகோளை ஏற்று அம்பர் திருமாகாளத்தில் சோமாசிமாறர் செய்யும் யாகத்தில் பங்கு கொள்ளச் செல்கிறார். எப்படி என்றால் தீண்டத்தகாதவராக அக்காலத்தில் கருதப்பட்ட பறையர் கோலத்தில் சிவபெருமான் நேரில் சென்று அவிர்பாகம் பெற்றார். தியாகேசர் 4 வேதங்களை 4 நாய்களாகக் கொண்டு செல்கிறார். பெருமான், மத்தளம் வாசித்து அவரது வலது தோளில் ஒரு கம்பில் ஒரு பசுங்கன்று இறந்து போனதை, 4 கால்களை கட்டி தொங்கவிடப் பட்டுள்ளது. கூடவே 4 நாய்கள் உள்ளன. அம்மையார் தலையில் (கள்), கஞ்சிக் குடத்துடன் உள்ளார். முண்டாசுடன் பெருமான் உள்ளார். எப்படி ஒரு யாகக் கூடத்திற்கு வரக்கூடாதோ அப்படி வந்து நிற்கும் திருவிளையாடலைச் செய்கிறார்.

யாகத்தில் உள்ள அந்தணர்கள் இது அநுசிதமாயிற்று என்ற கலக்கம் அடைகின்றனர். யாகத்தில் நெய் வார்ப்பவர் (சோமாசி) தன் கடமையைச் செய்கிறார். இதைப் பொருட்படுத்தாமல் அவிர்ப்பாகம் வழங்குகிறார். சிவபெருமான் அவிர்பாகம் முதலில் வாங்கவில்லை. சிவகணங்களுக்கும் பறையர்களாக வந்த கொம்பூதிகளுக்கும் தப்பு அடிப்பவர்களுக்கும் முதல் மரியாதை பெற வைத்து இறைவன் தனியே நிற்கிறார். தியாகராஜப் பெருமானுக்கு ஜாதியால் உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற பேதமும் ஏழை,

பணக்காரன் என்ற வித்தியாசமும் கிடையாது என்பதை உணர்த்தவே இந்தத் திருவிளையாடல். இதன் மறு ஓவியம் நீலோத்பலாம்பாள் சந்நிதியில் தென்புறத்தில் உள்ளது. வடபுறத்தில், சலவைக்கல்லில் முத்துசாமி தீட்சிதர் கமலாம்பாள் பெயரில் இயற்றிய நவாபரண கீர்த்தனை எழுதப்பட்டுள்ளது. யாக சாலை, பாகசாலை கடந்து உள்ளே தென்புறம் விநாயகரையும், சாஸ்தாவையும் தரிசிக்கிறோம். நுழைவு வாயிலில் கமலினி, அநிந்தையைத் தரிசித்தவுடன் கமலாம்பாள் சந்நிதியின் தெற்குப் பிரகாரத்தில் ஒரு பிறைக்கோயில் உள்ளது.

**சங்கரநாராயணி:**

நாராயணனின் தங்கையாய் எந்தை பிரானின் தாரமாகி நமக்குத் தாயாய் உள்ளவர். பால் நினைந்தூட்டும் தாய்.

**இராஜ ராஜேஸ்வரி:**

அடுத்த பிறைக்கோயிலில் குடி கொண்டுள்ள இவளே திருவித்யா. இவள் மந்திரப் பொருள் கொண்ட மாதா.

**ஜமதக்னி இலிங்கம்:**

இந்த இலிங்கம் முனிவர் ஜமதக்னியால் தாபிக்கப்பட்டது. மனைவியைத் தனது மகனைக் கொண்டே கொலை செய்யச் செய்தார். எனவே, ஆவுடையார் அமைக்க விட்டு விட்டார் போலும். ஜமதக்னி மனைவி நீராடச் சென்ற போது கந்தர்வ முனிவர் நிழலைப் பார்த்து அழகாக இருப்பதாக சொன்னதின் பேரில் தன் மகன் பரசுராமனால் மனைவியைக்கொலை செய்யச் செய்தார். பிறகு தன் மகன் பரசுராமனிடம் உனக்கு என்ன வரம் வேண்டும் என்று கேட்டார். உடன் மகன் தன் தாயார் மீண்டும் உயிர் பெற்று வரவேண்டும் என்றார். இவர் தான் ரேணுகாதேவி என்ற எல்லையம்மன்.

**நடுக்கம் தீர்த்த விநாயகர்:**

இவ்விநாயகர் பக்தர்களின் உடல் நடுக்கத்தையும் உள்ள நடுக்கத்தையும் நாசம் செய்பவர். நாம் அமைதியாக வாழ வழி வகுப்பவர். கமலாம்பாள் சந்நிதியின் மேற்குப் பிரகாரத்தில் ஒரு பிறைக்கோயில்.

**காசியப லிங்கம்:**

காசியபர் அசுரர்களைப் பெற்றுத் தள்ளியவர். இத்தகைய காசியபர் பூசித்த லிங்கம் இதுவாகும். நம்மிடம் அசுரக்குழந்தைகள் பிறக்காமலிருக்க நாம் இந்த இலிங்கத்தை வழிபடவேண்டும்.

**அட்சர பீடம்:**

திருவாசியும் பீடமும் அகத்தியரால் தாபிக்கப் பட்டவை. 51 அட்சரங்களுக்குள் ஒலி உலகமே அடக்கம். ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே என்பார் அப்பர். ஆறு ஆதாரங்களையும் 51 அட்சரங் களாகவே அடக்குவார். அதில் வெற்றி பெற்றால் யோக சித்தி கிட்டும். கமலாம்பிகையை உள்ளக்கிழியில் இருத்தி வழிபடுவது மரபு.

**சண்முகர் :**

கமலாம்பிகையின் கருவறையின் மேற்குச் சுற்றில் திருமால் நின்ற கோலம். ஆறுமுகப் பெருமான் தேவியரோடு சண்முகர் என்ற நாமம் பெற மாமனைப் பார்த்த வண்ணம் இருக்கிறார். இவரை வழிபடப் பகை நீங்கும். மாதாந்திர கார்த்திகை நட்சத்திரத்தில் சிறப்பு அபிஷேக ஆராதனை நடைபெறும்.

**பாலசுப்பிரமணியர் :**

வாலிபக்கோலத்தில் தேவியரோடு வீற்றிருக்கிறார்.

**சரஸ்வதி:**

வெண்ணிற ஆடை அணிந்தவள். நான்கு வேதமும் நான்கு கரங்கள். பிரம்ம வித்தை முகம். கைகளில் ஜபமாலை,புத்தகம், எழுத்தாணி தரித்து எழுந்தருளியிருப்பவள், எண்ணும், எழுத்தும் கண்கள். எண்ணிலா ஆற்றலை வழங்குபவள் இவள்.

**பிரம்ம லிங்கம்:**

இந்த லிங்கத்தை வணங்க எண்ணற்ற பாவங்கள் சூரியன் முன் இருள்போல நீங்கும்.

**வசிட்ட லிங்கம்:**

ரிக்கு வேதத்தில் 7-வது காண்ட கீதங்களுக்கு ஆசிரியர் வசிட்டர். இந்த இலிங்கத்தை வழிபட வேத அறிவு சித்திக்கும். கௌதமேஸ்வரர், விஸ்வாமித்திரரை வணங்கிய பின்னர்.

**அத்திரி லிங்கம்:**

புண்ணிய திசையாகிய வடக்குப் பக்கம் நோக்கிய ஆவுடையார் முகம். புண்ணியம் கூடும்.

**பரத்வாஜ இலிங்கம்:**

பரத்வாஜ முனிவர் ரிக்கு வேதத்தின் 6-வது காண்ட கீதங்களைச் செய்தார். இந்த இலிங்கத்தை வழிபட வேத அறிவு சித்திக்கும். வடபுறம் 79 நாககன்னிகள்: தென்புறம் விஷ்ணு துர்க்கை, சண்டிகேஸ்வரி, கோஷ்ட தேவதை தரிசித்த பின்னர்.

**மனோன்மணி:**

யோக நெறியில் புருவமத்தியாகிய ஆக்ஞா சக்கரத்தில் சதாசிவ மூர்த்தி லிங்கமாயிருக்க மனோன்மணி தொழுவதாகக் கூறுவர். மனத்தின் கிரியையாகிய யோகத்தைக் கூட்டி வைக்கும் பிராட்டி இவள். கமலாம்பாளின் உற்சவர் மனோன்மணி. அருகில் உற்சவ விநாயகர், சுப்பிரமணியர், வள்ளி தெய்வானை, சண்டிகேஸ்வரி உள்ளனர்.

**கமலாம்பாள் (ஞானசக்தி):**

சக்தி பீடங்கள் 64 லில் தலையாயது 5. அதில் ஆரூர் சிறப்பு மிக்கது. (1. காசி விசாலாட்சி, 2. காஞ்சி காமாட்சி, 3. மதுரை மீனாட்சி, 4. நாகை நீலாயதாட்சி, 5. ஆரூர் கமலாயதாட்சி) கமலாம்பாள் பண்டாசுரனை அழித்த யாகத்தில் தோன்றிய லலிதாம்பாள் ஒரு கையில் பாசம், மற்றொரு கையில் ருத்திராட்ச மாலை மற்றும் தாமரை பிடித்தமைந்த கையால் அறிவானந்தப் பேரின்பத்தை வழங்குகிறாள். பாசம் ஐந்தொழில் இயற்றும் அறிவிப்பு. உருத்திராட்ச மாலை தவக்கோல தரிசனம். தாமரை பிடித்த கையால் இறைவனுக்கு மனைவியான பெண்மைக் கோலம் இக்கோலத்தில் தவம் செய்கிறாள். இடது கால் மாற்றி யமைத்த காட்சி யோகிகள் இடகலையால் உள் இழுத்த மூச்சை குண்டலினி எழுப்பும் வகையில் கும்பித்துப் பிங்கலையால் வெளியிடும் பிராணாயாம விளக்கம் தெரிவிக்கும் வகையில் அமர்ந்த கோலம் (ஞானசக்தி). உலகில் வேறு எங்கும் பார்க்க இயலாத அரிய கோலத்தில் ஒரு கால் மீது ஒருகால் போட்டு யோக நடையில் உயிர்கள் நலம் பெற இங்கே பார்வதிதேவி கமலாம்பாளாக அருள் பாலிக்கிறார்.

அறந்தழைய கலைத்தெரிவை வனப்பெய்த சசி என்னும் பேரறிவை வாழ
நிறங்கெழு பூமடந்தையோடு நிலமங்கை மங்களத்தின் நிறைந்து மல்கப்
பிறங்கும் உயிர் தொகை அனைத்தும் களிகூறத் தவம்புரியும் பீடு சான்ற
சிறந்த கமலாலயநாயகி
செம்பொற் சேவடிகள் சென்னி சேர்ப்போம்.

அம்பாளை வணங்கினால் ஞானம் கிட்டும். புரட்டாசி மகர நவமியில் பால் அன்னம் நிவேதிப்பவர்கள் முக்தியடைவர். அர்த்த மண்டபத்தில் குமிழ் அம்மன் உள்ளார். கமலைநாதர் வடபுறம் அருள் பாலிக்கிறார். முத்துசாமி தீட்சதர் கமலாம்பாள் பெயரில் நவாபரண கீர்த்தனை பாடியுள்ளார். ஆடிப்பூரத்தன்று அம்மன் தீர்த்தம் வழங்கி வெள்ளை சாத்தி, வெண்சாந்து அணிந்து, வெள்ளைப் பூச்சூடி எழுந்தருளி பார்ப்பதீஸ்வரக் கோயிலில் இறைவனுடன் ஒன்றுபடுவதாக ஐதீகம். கமலாம்பாள் பலிபீடம் தேவாசிரிய மண்டபத்தின் பின்புறம் உள்ளது.

மூன்று பலிபீடம் உள்ள அம்மன். சக்தி பீடங்களில் ஒருபுறம் அட்சரபீடம் மறுபுறம் சரஸ்வதியும் கொண்டு ஞானசக்தியாய் விளங்குகிறாள். அம்பாள் இங்கே வீற்றிருப்பதால், குழந்தைகள், கல்வியறிவு, இசைக்கலை சிறந்து விளங்க தீபம் ஏற்றி வழிபடலாம்.

## முக்தீக் கிணறு (மூக்குத்தி கிணறு):

கமலாம்பாள் சந்நிதிக்கும் பார்ப்பதீசன் கோயிலுக்கும் இடையேயுள்ளது. சிவசக்தி ஐக்கியமாகி யோகிகளுக்கு முக்தி தருவதையே உணர்த்துகிறது. தெற்கு மதில் சுவரில் நெல்லிக்காய் வினாயகர் உள்ளார். (மூக்குத்தி கிணறு என்பது தவறு)

## ஒட்டுத் தியாகர் :

முக்திக் கிணற்றின் தென்பக்கத்தில் வடக்குக் கோபுரத்தின் எதிரில் வடக்கு மதிற்சுவரை ஒட்டி ஒரு சிவன் சந்நிதி உள்ளது. இங்குள்ள மூர்த்தியே ஒட்டுத்தியாகர், மாணிக்க விநாயகர், விறன்மிண்டர் உள்ளனர். விறன்மிண்ட நாயனார், சுந்தரமூர்த்தி சுவாமிகளை ஆலயத்திற்குள் போகாமல் தடுக்க, சுந்தரர் மனம் வருந்தினார். இவரது வருத்தத்தைப் போக்க தியாகராஜப் பெருமான் சுந்தரருக்கு இங்குக் காட்சியளித்தார். இதனை ஒட்டியாட்கொண்டு போய் ஒளித்திட்ட என்னும் சுந்தரர் தேவாரத்தால் அறியலாம் (மார்கழி சதயம் ஆராதனை)

## பார்ப்பதீஸ்வரர் கோயில்:

இக்கோயில் கமலாம்பாள் சந்நிதியை நோக்கியுள்ளது. இக்கோயில் பார்ப்பதி ஈஸ்வரர் என்ற திருநாமம். கமலாம்பாள் இப்பெருமானைக் கூடும் சிவசக்தி. நந்தி பலிபீடம் உள்ள தனிக்கோயில். கமலாம்பாள் கொடிமரம் இதற்கும் உள்ளது.

### சங்கு தீர்த்தம்:

தேவாசிரிய மண்டபத்திற்கு மேற்கே அமைந்துள்ளது சங்குத் தீர்த்தம். இத்தீர்த்தத்தில் மூழ்கி சங்க முனிவர் தனது வெட்டுண்ட கை வளரப் பெற்றார். மற்றொருவர் இத்தீர்த்தத்தில் மூழ்கி வெண்குட்டம் நீங்கப் பெற்றார். இத்தீர்த்தத்தில் மூழ்கினால் சகல நோய்களும் நீங்கும். நமிநந்தியடிகள் கோயிலில் விளக்கேற்ற வேண்டி வீடுதோறும் எண்ணைகேட்கும் போது சமணர்கள் சிவத்தை பழிக்க அடிகளார் சங்கு தீர்த்தத்தில் நீரை எடுத்து சென்று அசலேஸ்வரர் சந்நிதியில் விளக்கேற்றி சிவமே யாகுக எனக் கூற தண்ணீரில் தீபம் எரிந்தது.

### (2வது சுற்று) ஆரியன் கோபுரம்:

தெற்கே விநாயகர், வடபுறம் வள்ளி, தெய்வானை முருகனை வழிபட்டு மனோமயகோசச் சுற்றினை முடித்து விஞ்ஞானமய கோசத்துள் செல்ல ஆரியன் கோபுரத்துள் நுழைகிறோம். நுழைந்தவுடன் சிறு மாடம். அதில் விறன்மிண்டர் உள்ளார்.

### விறன்மிண்டர்:

அடியார் வழிபாடு செய்யாத சுந்தரரை வெகுண்டவர். விறன்மிண்டர், சுந்தரனும் புறகு, அவரது ஆண்டவனும் புறகு எனக் கூறியவர். அவரை வணங்கி அடியார்களை வணங்கும் ஆசிபெறுகிறோம். சில அடிகள் வைத்தவுடன் இந்திர கொடிமரம், நந்தி, இராஜநாராயண மண்டபம். எல்லாக் கொடிமரத்திலும் சுந்தரர் இறைவனைப் பார்த்த வண்ணம் உள்ளார். இதன் தென்புறம் விநாயகர், வடபுறம் துர்க்கையை வணங்குகிறோம். இராஜநாராயண மண்டபம் அல்லது எண்ணக்காப்பு மண்டபம் (இராஜநாராயண சோழன் கட்டிய மண்டபம்).

குவிந்த கரம் விரித்தல் செலாக் கோயில்களும் பலவுளவால்.... என்ற மகா வித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை வாக்கின்படி, மனிதர்கள், அசுரர்கள், தேவர்கள் பூசித்த லிங்கங்கள் பல உள.

### சுரதேவர்:

இராஜநாராயண மண்டபத்தின் தென்கிழக்கு மூலையில் சுரதேவர் கோயில் கொண்டுள்ளார். வாதம், பித்தம், கபம் ஆகிய மூன்றும் நம்மைத் துன்பப்படுத்துவன. மரு+உந்து எனப் பிரிக்கலாம். மரு=தீமை, உந்து=தீமை நீக்கிச் செயல்படுகிறது. சுரதேவரை வணங்க எல்லா நோய்க்கும் ஆதியாகிய சுரத்தை நீக்கி நல்லாயுளுடன் நீடிக்கும் வரத்தை அருளுவார். மிளகு ரசம் படைப்பது சிறப்பு.

### ஏகாதச ருத்திரர்கள்:

பதினோரு ருத்திரர்கள் வழிபட்ட இலிங்கங்கள் அடியார்களுக்குத் தீமை செய்பவர்களைத் தண்டித்து அடியார்களுக்கு நன்மை செய்யும் மூர்த்தங்கள். ஏகம்+தசம் 1+10=11.

1. மகாதேவ லிங்கம் 2. சிவலிங்கம் 3. ருத்ரலிங்கம்
4. சங்கரலிங்கம் 5. நீலலோகிதலிங்கம் 6. ஈசான்யலிங்கம்
7. விஜயலிங்கம் 8. பீமலிங்கம் 9. தேவதேவலிங்கம்
10. பவோதபவலிங்கம் 11. ஆதித்யாதமகாருத்ரலிங்கம்.

### ஏகாதச ருத்ரர்கள்: விளக்கம்

(ஏகம் என்றால் ஒன்று + தசம் என்றால் பத்து=11) ஏகதசருத்ரர்கள், ஒரு சமயம் ஸ்ரீபராசக்தியைத் தொழுது இரவில் செய்யும் எல்லாப் பூசைகளும் பராசக்தியைச் சேருவதால் ஓர் இரவுப் பூசையாவது சிவபெருமானைச் சேரச் செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொண்டனர். இதைத் தேவியார் அங்கீகரித்தால் ஒன்றுக்கு ஒன்பதாக, ஒன்பது இரவு உமாதேவியரைப் பூசிப்பதாகப் பிரார்த்தித்தார்கள். அவ்வாறே அம்மை அருளினார். அதைக் கடைப்பிடித்து அவர்கள் இரவு முழுவதும் பூசை செய்தார்கள். அப்போது அம்மையும் சிவபூஜை செய்தனர். இது சிவராத்திரி எனவும் மேற்சொன்ன ஒன்பது நாளும் நவராத்திரி எனவும் பெயர் பெறும். அடுத்து அன்னதானக் கூடம் மடப்பள்ளி, ராஜன் உடையவர் மண்டபம் அறை கடந்து.

### முசுகுந்தேஸ்வரர் (உடையார் தேவர்):

முசுகுந்தேஸ்வரர் பூசித்தது. இந்த இலிங்கத்தை வணங்கினால் ஆலயம் கட்டுதல் போன்ற ஆலயத்திருப்பணி செய்யும் பேறு கிட்டும். உடையார் தேவரை அடுத்து, துளசிராஜா பூஜித்த லிங்கம் & தேவேந்திரன் பூஜித்தலிங்கம், இவர்களைத் தரிசிக்க மன அமைதியும் சிவபதமும் அடையலாம்.

### மனுச்சக்கரேஸ்வரர்:

மனுச்சக்கரவர்த்தி பூசித்த இலிங்கம். இவரை வழிபட்டால் நீதியோடு வாழ வகை செய்வார். மணிமண்டபம் அடுத்து பாண்டியநாதர் மற்றும் கஜேஸ்வரரைத் தரிசிக்கிறோம். மணிமண்டபம் சமீபம் 7 கோபுரம் தரிசிக்கலாம்.

**பகீரதேஸ்வரர்:**

கங்கையைப் பூமிக்குக் கொண்டு வந்த பகீரதன் பூசித்த இலிங்கம். இந்த இலிங்கத்தை வழிபட்டால் குளங்கள் வெட்டுதல், தண்ணீர்ப் பந்தல் வைத்தல் ஆகிய தர்ம காரியங்கள் செய்யும் வாய்ப்புகள் உண்டாகும்.

**தட்சேசுவரர்:**

தக்கன் செய்த வேள்விக்குச் சிவபிரானை அழைக்காத பாவம் நீங்க பூசித்த இலிங்க மூர்த்தி. இம் மூர்த்தியை வழிபட்டால் சிவபாதகம் ஏற்படாது.

**சப்தரிஷீஸ்வரர்:**

அத்ரி, வசிட்டர், காசியபர், கௌதமர், பரத்வாசர், விசுவாமித்திரர், ஜமதக்னி ஆகிய எழுவரால் பூசிக்கப்பட்ட இலிங்கம், விண்மீன்கள் ஆகும் பேறு கூடக் கிட்டலாம். சினம் தவிர்த்து வாழலாம் இவர்களை வணங்கினால் மோட்சமும் கிடைக்கும். **அத்ரிமகரிஷி பூஜித்த லிங்கம் மற்றும் புரூவசகரேஸ்வரர்** இவர்களை வணங்கினால் மன அமைதியுறும், பாவங்கள் நீங்கும்.

**மாவலீஸ்வரர் (சேர நாதர்):**

இவரைப் பூஜித்தால் செல்வம் பெருகும். வளமான வாழ்வு கிடைக்கும்.

**விஸ்வாமித்திரர் :**

இவர் ஷத்திரிய வம்ச மகாராஜா. இவர் உலகிற்கு வேதங்களின் தாயான காயத்ரி மந்திரத்தை வழங்கினார். பிராமணன் என்றால் தூய்மையானவன் எனப் பொருள். எவன் ஒருவன் தூய்மையானவனோ அவன் காயத்ரி மந்திரத்தை ஜபித்தால் தீமைகளிலிருந்து பாதுகாக்கப்படு வான்.

**ஸ்ரீ காயத்ரி மந்திரம்:**

ஓம்[1] பூ[4]ர்பு வஸஸ¬வ-1

தத் ஸவிதுர் வரேணியம் -1

ப[4]ர்கோ[3]தே[3]வஸ்யதீ[4] மஹி-1

தி[4]யோயோந ப்ரசோத[3] யாத்-2

இதன் பொருள்-நம்முடைய புத்தி சத்தியைத் தூண்டும் ஒளி மிகுந்த சூரியனை விட மிகவும் உயர்ந்ததான தேஜஸ்ஸை த்யானம் செய்கிறோம்.

**அசலேச்சரம் (அரநெறி தனிக்கோயில்):**

மணிமண்டபத்தின் வடக்கே அமைந்துள்ளது அசலேச்சரம். இது தனித்தலம். அப்பர் பெருமானால் பாடப்பட்டது. சமற்கார மன்னனின் 400 ஆண்டு தவத்திற்கு இரங்கியே சிவபெருமான் காட்சியளித்தார். மன்னன் தான் தாபிக்கும் இலிங்கத்தில் எழுந்தருளுமாறு பெருமானை வேண்டினான். அப்படியே தோன்றிய தளர்வின்மையால், அசைவின்மையால் அசலேசம் எனப் பெயர் பெற்றது.சலம் என்றால் அசைவுடையது. அசலம் நிலைபேறுடையது. இந்த ஈசனை வணங்கினால் மனம் கண்டபடி அலையாது அமைதி பெறும்.

**(நமிநந்தியடிகள் நீரால் விளக்கெரித்த கோயில். மேலும் தொடர்ந்து)** பள்ளித்தாமத்திற்குரிய பூவினை முகர்ந்து பார்த்த மன்னர் கழற்சிங்கரின் மனைவி சங்காதேவியின் மூக்கினை செருத்துணை நாயனார் அரிந்த இடம். கழற்சிங்கர், மூக்கிற்கு முன்பே கை தவறு செய்ததென தன் மனைவி கங்காதேவியின் கையினை அரிந்த இடம்.

பஞ்ச இந்திரியங்கள் ஒடுக்கிய தவத்திறத்தினை விளக்குவது போல் பஞ்ச லிங்கங்கள் உள்ளன. மற்றும் நமிநந்தி அடிகள் செருத்துணை நாயனார், கழற்சிங்கர், அவர் மனைவி கங்காதேவி சிலைகள் உள்ளன.

மனம் குரங்கினைப் போன்று கண்டபடி பல இடங்களுக்குப் பாயாமல் மனத்தை ஒருநிலைப்படுத்தி, தியானமாகிய சக்தியைப் பெற்று, இறைநிலையை அடைய இம்மூர்த்தம் அருள் செய்யும். அம்மை வண்டார் குழலி. (தற்போது கோயில் பாதுகாப்பில் உள்ளது.) முன் மண்டபத்தில் பழங்கால ஓவியங்கள் வரையப்பட்டுள்ளன.

பஞ்சமா பாதகங்கள் அழியும், மணி, மந்திர, மருந்தினால் குணமாகாத வியாதிகள் நெருப்பிட்ட பஞ்சுபோல் அழியும். அசலேஸ்வரார் கோயிலின் மறுபதிப்பு தஞ்சை பிரகதீஸ்வரார் கோயில். இந்தக் கோபுர நிழல் கிழக்குத் திசையில் விழும். மற்ற திசையில் விழாது. பிரதோஷ தினத்தில் மாலை நந்திக்குச் சிறப்பு அபிஷேக ஆராதனை நடைபெறும்.

அரனெறியும் - அரநெறியும் பிரித்துக் காட்டுகிறார்

அப்பர் பெருமான் (மூலட்டானர் மற்றும் அசலேசம்)

அர என்ற சொல்லுக்கு போக்குகிற என்பது பொருள். அரனெறி அரனை அடையும் மார்க்கம் என்ற பொருள் தந்து மூலட்டானமாகிற வன்மீகநாதர் கோயிலைக் குறிக்கும் ஆன்மாக்கள் பாவத்தைப் போக்குகிற வன்மீகநாதர் கோயில் என்ற பொருள் உள்ளது. இதை அப்பர்

"எந்த மாதவஞ் செய்தனை நெஞ்சமே

பந்தம் விடவையாயபராபரன்

அந்த மில்புகழ் ஆரூர் அரனெறி

சிந்தை யுள்ளும் சிரத்துளும் தங்கவே" என்கிறார்.

அர-நெறி என்று பெயரச்சத்தொடராக்கி அரநெறி பாவத்தைப் போக்கும் நெறி என்று கொண்டு, அசலேச்சரம் அரநெறி என்று அழைக்கப்படுகிறது. அதை அப்பர் அடிகள்,

"எத்தீ புகினும் எமக்கொரு தீதிலை

தெத்தே எனமுரன் றெம்மு ளுழிதர்வர்

முத்தீ அனையதொர் மூவிலை வேல்பிடித்

தத்தீ நிறத்தார் அரநெறி யாரே"

என்று இசைக்கிறார்.

"அருந்தவனை அரநெறியில் அப்பன் தன்னை

அடைந்தடியேன் அருவினை நோய் அறுத்த வாறே"

என்று பாடுங்கால் அரநெறியைத் தெளிவாக வேறுபடுத்திக் காட்டுகிறார்.

"இருங்கனக மதிலாரூர் மூலாட்டானத்

தெழுந்தருளி யிருந்தானை"

என்று மூலட்டானனைக் கூறுகிறார். இதனால் அரனெறி என்பது வன்மீகர் கோயிலையும், அரநெறி என்பது அசலேசரத்தையும் குறிக்கும் என்பது உணரப்படுகிறது. அரனெறி என்றும் அரநெறி என்றும் ஒரே ஒலி உள்ள இரு சொற்களை எடுத்தாண்டு இருவேறு இடங்களைக் குறித்துக்காட்டுவது திருநாவுக்கரசரின் தமிழ் ஆற்றலை நமக்குப் புலப்படுத்துகிறது.

அம் தமிழாளியார் - என்பது சேக்கிழார் அப்பருக்கு இட்ட சிறப்புப் பெயர். அடுத்து தரிசிக்க இருப்பது

**கைலாச தியாகர்:**

கைலாயத்தில் தியாகேசனைக் கண்ட முனிவர் இங்கும் கைலாயத் தியாகரைத் தாபித்துள்ளார். கைலாயத்தியாகரை வணங்கும் பேறு பெறுவோம்.

**சப்தமாதர்கள்:**

பிராமி, மகேஸ்வரி, கௌமாரி, வைஷ்ணவி, வராகி, இந்திராணி, சாமுண்டி ஆகிய சப்த மாதர்கள், இவர்களைப் பூசித்தால் தோஷங்கள் நீங்கும். நவராத்திரியில் சிறப்பு வழிபாடு நடைபெறும். கி.பி. 8-ம் நூற்றாண்டில் பல்லவ மன்னனால் நிர்மாணிக்கப்பெற்று இச்சிற்பங்கள் அனைத்தும் 234 செ.மீ. நீளமும் 78 செ.மீ உயரமும் கொண்ட ஒரே கற்பலகையில் செதுக்கப்பட்டுள்ளன.

**1. பிராமி:** இடது காலைக் குத்திட்டு, வலது காலை தொங்கவிட்டு நான்கு கைகளுடன் அமர்ந்த கோலம் பின்புறம் ஒன்று கெண்டியை ஏந்தியுள்ளது. தலையில் ஜடா மகுடம் மூன்று முகங்கள் உள்ளன.

**2. மகேஸ்வரி:** இது வலது காலைக் குத்திட்டு, இடது காலைத் தொங்கவிட்டு நான்கு கைகளுடன் அமர்ந்த கோலம். மேல் வலக்கையில் பாயும் மான், இடக்கை கடக முத்திரை உள்ளது. இடக்கை நீண்டு திரிசூலத்தைப் பிடித்த நிலையில் உள்ளது. தலையில் ஜடா மகுடம், காதில் குண்டலம் உள்ளது.

**3. கௌமாரி:** இடது காலைக் குத்திட்டு, வலது காலைத் தொங்கவிட்டு பக்கவாட்டில் அமர்ந்துள்ளது. நான்கு கைகளில் மேல் வலக்கையில் சக்தி படையைப் போன்ற ஆயுதம் தெரிகிறது. மேல் இடக்கையில் கடக முத்திரை தெரிகிறது. தலையில் சிறிய கரண்ட மகுடமும் காதுகளில் குழையும் கழுத்தில் அணியும் உள்ளன.

**4. வைஷ்ணவி :** இடது காலை மடித்து, வலது காலைத் தொங்கவிட்டு நான்கு கைகளுடன் நேராக அமர்ந்த நிலையில் உள்ளது. மேல் வலக்கையில் மீது சக்கரம் குறுக்காகக் காட்டப்பட்டுள்ளது. இடக்கையில் சங்கு காணப்படுகிறது. தலையில் கிரீடம், கழுத்தில் அணியும் உள்ளன.

**5. வராகி:** வலது காலைக் குத்திட்டு, இடது காலைத் தொங்கவிட்டு வைஷ்ணவியை நோக்கியவாறு நான்கு கரங்களுடன் உள்ளன. மேற்கையில் சக்கரமும் சங்கும் உள்ளன. கீழ் இடக்கை நீண்ட தண்டை பிடித்துள்ளது. வலக்கை மார்புக்கு முன்பு அபயக்கரம் காட்டுகிறது. கீரிட மகுடமும் நீண்ட வராகி முகமும் மானிட உடலும் பெற்றுள்ளது.

**6. இந்திராணி:** இது இடது காலைக் குத்திட்டு, வலது காலை தொங்கவிட்டு நான்கு கைகளுடன் நேராக பார்த்தநிலையில் உள்ளது. மேல் வலக்கை மீது வஜ்ரபடை உள்ளது. இடக்கை கடகமுத்திரையும் கிரிட மகுடமும் தாழ்குழையும் கண்ட சரமும் உள்ளது.

**7. சாமுண்டா:** வலது காலைக் குத்திட்டு, இடது காலை மடித்து தலையைச் சாய்த்த படி நான்கு கைகளுடன் உள்ளது. மேல் வலக்கையில் கபாலத் தட்டைத் தாங்கி உள்ளது. இடக்கை மேல் ஆடும் அரவும் உள்ளது. மற்றொருகை அசுரன் ஒருவனைப் பிடித்துள்ளது. உயரம் 84 செ.மீ. அகலம் 52 செ.மீ. மேல்புறம் விநாயகர், கீழ் புறம் சிவன் உள்ளனர்.

## எரிசினக் கொற்றவை (ரௌத்ர துர்க்கை)

நாற்படைகளுமின்றி அரசாள வழி கேட்ட திலீபன் என்ற அரசனின் மகனை நோக்கி வசிட்ட முனி, திருவாரூரில் புற்றிடங்கொண்டாரை வணங்கி, துர்க்கையைத் தாபித்துத் தவம் செய்ய வழிகாட்டினார். அவரது யோசனைப்படி தாபிக்கப்பட்ட மூர்த்தமே எரிசினக்கொற்றவை மூர்த்த மாகும். வரசித்திபெற்ற எரிசினக் கொற்றவை திருமணத்தடை விலக,பதவி உயர்வில் ஏற்படும் தடை நீங்க, பொருள் இழப்பு இல்லாதிருக்க, தேவையற்ற இடமாற்றங்கள் ஏற்படாதிருக்க தனது எட்டுக் கைகளையும் எட்டுத் திக்கில் பரப்பிய அன்னையாகக் காட்சியளிக்கிறாள்.

ஞாயிறு, செவ்வாய், வெள்ளி ஆகிய தினங்களில் இராகு காலத்தில் பூசிக்க, தீங்குகள் அனைத்தும் நீங்கி இன்பமாய் வாழ்வார்கள். வருடா வருடம் ஆடி மாதக் கடை வெள்ளி லட்சார்ச்சனை சிறப்பாக நடைபெறுகிறது.

கோமகன் அசன் ஆரூரில் கொற்றவை தனை தாபித்து
நமநீர் உலகமெல்லாம் நண்ணளார் வணங்கி ஓம்பி
ஏமுறுங்காதை இதை இசைப்பவர், இனிது கேட்போர்
தாமும் மற்றவர் போல் வையந்தனில் அரசாள்வார் மாதோ

பாடல் 10 ஸ்ரீ ஞானசம்பந்த முனிவர்.

## வருணேஸ்வரர் :

மழை பெய்யாவிடில் கருவறையில் தண்ணீர் நிரப்பி வழிபட்டால் மழை பொழியும்.

## ஆடகேசுரம் (தனிக்கோயில்) II

அருவமாக உள்ள மூலாதார பதம். உள்ளே யந்திரம் மட்டும் உள்ளது. தியானம் செய்யலாம். இங்கு நாகபிலம் ஒன்றுண்டு. அநாதி காலம் தொட்டுச் சிவபெருமான் ஞானசுந்தரி அம்மையாரோடு எழுந்தருளியிருக்கிறார். இவரை ஒருமுறை வழிபடுபவர் இந்திரப் பதவியை அடைவர். இந்திரன் பொறாமை கொண்டு இப்பிலத்தை மலைப்பாறை கொண்டு மறைத்து விட்டான். தாருகாவதத்தின் போது முருகன் கிரௌஞ்சமலை மேல் வேலாயுதத்தை எய்த போது எல்லா மலைகளும் ஆடின. இந்தப் பாறையும் ஆடியது. முனிவர் மக்கள் வேண்டுகோளின்படி முருகன் பாறையின் மீது வேலை ஊன்றி நான்கு சக்திகளை நிலைக்கச் செய்து காப்பாற்றினார்.

இங்குள்ள சிவத்திருமேனி வனப்புடையது. பராசக்தி (கமலாம்பாள்) தவக்கோலம் பூண்டு இவ்வூருக்கு எழுந்தருளிய பின்னர் எழுந்தது ஆடகேசுரத்து சிவமூர்த்தம். இலிங்கோத்பவர் நுழைவாயில் வடபுறம் உள்ளார். ஆடக மூர்த்தி என்று ஒருதரம் சொன்னால் கொடிய பாவங்கள் தொலையும். செல்வமும் கல்வியும் எளிதில் வந்தடையும். இந்திரப் பதவியும் கிடைக்கும். இம்மூர்த்தியை வணங்கி அழியாத வரங்கள் அட்டமாசித்தி வரங்கள் பெற்று முக்தியடைந்தவர் பலராவர்.

சித்திரை மாதத் தேய்பிறை சதுர்த்தசியில் வணங்குபவர்கள் வேதச்சிலம்பு ஒலிக்கும் இறைவன் திருவடிகளைச் சேர்ந்து தூயபேரின்ப அமுதினை அருந்தி அங்கேயே இருப்பர்.

**அண்ணாமலையார் :**

திருவண்ணாமலை போன்று உயர்ந்து மாடக் கோயிலாயுள்ளது. அண்ணாமலையே சிவலிங்கம். அண்ணாமலை கை தொழ நல்லவை நம்மை அடையும். நற்றவத் தோடு ஞானம் பெற்று வாழலாம். வினை கெட்டுப்போகும். கேடில்லை. அண்ணாமலை கைதொழ நாம் செய்த பாவங்கள் அழியும்.

## தலவிருட்சம் (பாதிரி மரம்)

இத்தலத்தின் தெற்கே தல விருட்சம் சிகப்பு பாதிரி உள்ளது. இங்கிருந்து மேற்கே சென்றால் தனிக்கோயில்களான தட்சனேஸ்வரர். கைகொடுக்கும் விநாயகர், வைத்தீஸ்வரர் தொழுது, ஆனந்தேசனீச்சரத்தை அடையலாம் (மொட்டை கோபுரம் சமீபம்) லெக்ஷ்மீஸ்வரர். அக்னீஸ்வரர், கமலமுனிவர் அடக்கம் இவர்களைத் தரிசிக்கிறோம்.

**கமல முனிசித்தர் :**

கமல முனிசித்தர் ஆனந்தேஸ்வரம் தென்புறம் அடக்கமாகி உள்ளார். 18 சித்தர்களில் ஒருவர். பக்தர்கள் தியானம் செய்கின்றனர். ஏக சரீரமாய் வியாபித்துள்ளார்.

## ஆனந்தேசனீச்சரம் (தனிக்கோயில்) III

மங்கள முனிவரால் தாபிக்கப்பட்டது. முறையாக வழிப்பட்ட காரணத்தால் சித்திகள் கைவரப் பெற்றார். கயிலையம் பெருமான் முனிவர் முன் தோன்றி, ஆனந்தேசன் என்ற பெயருடன் இருப்பதாக அருள் பாலித்தார். பட்டினசாமி என்ற வணிகன் வறுமையால் வாடிக் காட்டுக்குள் திரிந்து, சருகுகள் உண்டு காலங்கழித்தான். திருவருளால் திருவாரூரில் தாமரைப்பூ வியாபாரம் செய்து வாழ்ந்தான். சில நாள் பூ விலை போகாது நல்லருள் கூட்ட வைகாசி விசாகத்தன்று ஆனந்தீஸ்வரன் சந்நிதி அடைந்தான். தனது பூ முழுவதையும் கொடுத்து ஊன் உறக்கம் ஒழித்து தாமரை மலர்களால் அர்ச்சித்தான். பசிவிடம் தலைக்கேற காலையில் கணவனும் மனைவியும் சிவலோகம் எய்தினர்.

தாமரை மலர் அர்ச்சித்ததன் பயனாய்க் காஞ்சியில் மன்னனாய்ப் பிறந்தான். மனைவியும் அரசியானாள். முற்பிறவி வாசனை ஏற்பட ஆண்டுதோறும் திருவாரூர் வந்து விசாகத்தன்று பூசித்தான். இந்த ஈசனை வணங்குவோர் எல்லா வளங்களும் பெற்று வாழ்வதோடு உயர் பதவியும் பெறுவர். நுழைவாயில் வினாயகர், ஜேஷ்டாதேவி, ராஜேந்திரன், பரவையார் உள்ளனர். பரவை தன் இறுதி காலம் வரை தன்னை ஆரூர் கோயிலுக்கு அர்ப்பணித்தார். ஆரூர் வீதிவிடங்கப் பெருமான் கோயிலை கற்றளியாக்க விரும்பிய நங்கை பரவையின் வேண்டுகோள் மன்னனால் செயலாற்றப்பட்டது. பரவையார் தியாகேசனுக்குப் பச்சப்பாவை, உமைநங்க பாவை, (சரியா நங்கை,) என்ற பெயர்களில் இரண்டு குத்துவிளக்கும் எண்ணிலா அணிகலன்கள் நிபந்தங்களையும் தியாகராஜருக்கு அளித்தார். (இவர்கள் குமாரர், நினைவாக பரவை ராஜேந்திரனுக்கு சிலை அமைத்துள்ளனர்.) மற்றும் நுழைவாயிலில் ஜேஷ்டாதேவி, வராகி, கௌமாரி, வனதுர்க்கை புடைசூழ வீற்றிருக்கிறார்.

இவரை வழிபட பெண்கள் மாதவிலக்கு, உடல் உபாதை நீங்கும். உளுத்தங்களி படைப்பது சிறப்பு. மயிலை குருஜி சுந்தர்ராம் ஸ்வாமிகள் ஆனந்தேஸ்வரரை பௌர்ணமி, விசாகத்தில் வணங்கினால் நினைத்தது கைகூடும் என்றார். அமாவாசையில் மற்றும் பௌர்ணமியில் சிறப்பு வழிபாடு நடைபெறுகிறது. வெளிவாயிலில் ஆனந்த நடன விநாயகரை தரிசித்த பின்.

**சேஷ்டலிங்கம் (வடக்கு சுற்று):**

இவரை வழிபட்டால் நோயற்ற வாழ்வு கிடைக்கும்.

**பரசுராமேசர் – பிராணேஷ்வரர்:**

தகப்பன் ஆணைப்படி தாயைக் கொன்ற பாவம் தீர பூசித்த இலிங்கம். இந்த லிங்கத்தைப் பூசித்தால் தாயிடம் அளவு கடந்த அன்பு செலுத்தி வாழலாம்.

**விஸ்வ கர்மேசம் : (கருங்கல் கோயில்)**

இரண்டாம் சுற்றின் வடக்குப் பகுதியில் விஸ்வ கர்மேசம் அமைந்துள்ளது. மேற்கு பார்த்த சந்நிதி. விஸ்கர்மா அமைத்தது போலவே சிற்ப நேர்த்திகள் மிக்க கருங்கல் கோயில். இறைவன் பெயர் விஸ்வகர்மேசர்.

நுழைவு வாயிலில் ஜெயகணபதி (நர்த்தன விநாயகர்) உள்ளார். வடக்குச் சுற்றில் விஷ்ணுதுர்க்கை, பிரம்மா பின்புறம் இலிங்கோத்பவர் தென்திசையில் ஆலமர் கடவுள். விமானத்தில் மனுநீதி சோழன் தேர், மாடு கன்று மற்றும் முன்மண்டபத்தில், பைரவர் பிர்மா உள்ளனர். (கருங்கல் கோயில்) புதிதாக வீடு கட்ட விரும்புகிறவர்கள் செங்கல்லை சுவாமி முன் வைத்து அர்ச்சனை செய்து கட்டிடம் ஆரம்பித்தால் விரைவில் குறைவு ஏற்படாமல் வீடு கட்டலாம். அமாவாசை தோறும் சிறப்பு வழிபாடு விஸ்வகர்மாவினர்களால் நடைபெறுகிறது. வடக்குச் சுற்றில் விஷ்ணுதுர்க்கை பக்கம் பசு தேர் ஓட்டுவது அரசகுமாரன் தேர்க் காலில் அடிப்பட்ட சிற்பம் உள்ளது. (ஈசன் ஒரு பசுவாகி எமன் ஒரு கன்றாகி வீசுபுகழ் அம்மானே என்று பாடுவார்கள்)

கலைத்திறன் பெற விஸ்வகர்மேஸ்வரை வணங்கலாம். ஜீவேஷ்வரர், கர்பேஸ்வரர், வருணேஸ்வரர் இவர்களை வழிபட, காலத்தில் மழைபெறுவதுடன் வளம் பெறலாம்.

**விபீஷணேஷ்வர்:**

விபீஷணர் பூசித்த லிங்கம். இவரை பூசித்தால் மனக்குழப்பம் நீங்கி அமைதியாக வாழலாம்.

**தட்சேஸ்வரர் - தர்பேஸ்வரர்:**

தர்ப்பை, உடல் உயிர் ஆகிய இரண்டிலும் உள்ள மாசகற்றும் ஒரு பெரிய மூலிகை. தர்ப்பாரணியம் என்பது திருநள்ளாற்றைக் குறிக்கும். தர்ப்பேஸ்வரர் என்பது திருநள்ளாற்று லிங்கத் திருமேனியைக் குறிக்கும். இவரை வணங்க நோய் நொடிகள் நீங்கி மன அமைதி கிடைக்கும்.

**கௌதமலிங்கம்:**

இவரை வழிபட ஒழுக்கமும் நலனும் பெறலாம்.

**வசிட்டேசர்:**

இவர் இராமருக்கு உபதேசம் செய்ய பிரம்ம ஞானமாகிய வாசிஸ்ட நூலை அருளிய மகரிஷி. இக்குவாகு மன்னர்களுக்கு வழிகாட்டிய அரசகுரு.

**பிருகேஸ்வரர்:**

பிருகு முனி பூசித்த லிங்கம். இந்த லிங்கத்தைப் பூசித்தால் சிவபாரதம் நிகழாது.

**சபாபதீஸ்வரர்:**

இவரை வழிபட்டால் சர்வசக்திகளும் பெருகும்.

**அகத்தீஸ்வரர்:**

தமிழாலும், வடமொழியாலும், சித்தர்கள், மகரிஷிகளாலும் பாராட்டப் பெற்ற அகத்தியர் வழிபட்ட இலிங்கம். இவரை வழிபட, தமிழ் வடமொழி மற்றுமுள்ள கலை நுட்பங்கள் எல்லாம் சித்திக்கும்.

**ஹயக்கிரீஸ்வரர்:**

குதிரை முகத்தினையுடைய ஹயக்ரீவர் விஷ்ணு ரூபங்கொண்ட கல்விதேவதை. இவர் வணங்கிய இலிங்கத்தை வணங்க எல்லா வித்தைகளும் தந்து நல்லருள் செய்வார்.

**கௌதமேஸ்வரர் :**

தன் மனைவி அகலிகையிடத்து ஒழுக்கம் தவறிய தேவேந்திரனை ஆயிரங்கண்ணாகுமாறு சபித்தவர். இவர் தாபித்த லிங்கத்தை வழிபட, சர்வ சக்திகளும் பெருகும்.

**சித்தீசம் : IV**

(தனிக்கோயில்) யோக சித்திகள் நிறைவேற்றும் சித்தீசம் அம்சன் என்ற அரசன் சிவாயநம என்ற பஞ்சாட்சரம் ஓதி சித்தி பெற்ற தலம். இங்கேயே புத்திரப் பேறும் பெற்றான். முனிவர் ஒருவர் மேல் தண்ணீர்ப் பாம்பை எறிந்த குற்றத்திற்காகப் பாம்பாகும்படி சாபம் பெற்ற சிறுவன் தான் செய்த பிழைக்கு நொந்து சடாட்சர மந்திரம். ஓம் சிவாய நம... ஓதி சாப விமோசனம் பெற்றான். சித்தீஸ்வரர், கருவறையில் உள்ள விநாயகர், காலபைரவர், விறன்மிண்டரை வணங்கினால் மோட்சம் அடையலாம்.

**மேதா தெட்சிணாமூர்த்தி :**

மேதா தெட்சிணாமூர்த்திக்கு திருமுன் ஆகும். தெற்கு பார்த்தவாயில். திருமேனிகள் மூன்று வகை வடிவம் உள்ளன. 1. போகம் 2. வேகம் 3. யோகம். 1) போகம் என்பதற்கு உதாரணம் சோமாஸ்கந்தர், சந்திரசேகர் .2) வேகம் என்பதற்கு பைரவர், வீரபத்தரர் 3) யோகம் என்பதற்கு ஞானம் வழங்கும் தெட்சிணாமூர்த்தி.

மேதா தெட்சிணாமூர்த்திக்கு வலது கை காட்டும் சின் முத்திரையுடன் இடது கை நீண்டும் உள்ளன. சின் - என்பது அறிவு. முத்திரை என்பது அடையாளம். கட்டை விரல் பதியாகிய கடவுளைக் குறிக்கும். கட்டை விரல் இல்லாமல் மற்ற விரல்கள் செயல்பட முடியாது. சுட்டு விரல் (ஆள் காட்டி விரல்) பசுவாகிய உயிரை உணர்த்துவது. நடுவிரல் ஆணவமலம் என்ற பாசத்தைக் குறிக்கும். மோதிர விரல் கர்மமலத்தைக் குறிக்கும் சுண்டுவிரல் மாயாமலத்தைக் குறிக்கும். 3- மலங்களை நீக்கினால் வீடுபேறு அடையலாம். என்பதைச் சின் முத்திரையாகக் காட்டி தென்முகக் கடவுள் அருள்பாலிக்கிறார். இங்குப் பஞ்சாட்சரம் ஒத வேண்டும். குருஞானசம்பந்தர் இவ்விடத்தில்தான் கமலை ஞானப்பிரகாசரிடம் உபதேசம் பெற்றுத் தருமையாதீன முதல்வர் ஆனார். கி.பி.1561 - 1600. கருவறையில் கமலை ஞானப்பிரகாசர், குருஞானசம்பந்தர் திருமேனிகள் உள்ளன.

**வசந்தமண்டபம் :**

சந்திரசேகரப் பட்டம் முடிந்த 6 ஆம் நாள் வசந்தன் (கார்த்திகை நட்சத்திரம்). தியாகேசர் இரண்டு அம்மனுடன் அன்று இரவு மேற்படி மண்டபத்திற்கு எழுந்தருள்வார். அன்று சிறப்பு ஆராதனை நடைபெறும். மறுநாள் காலை திருச்சாந்து அணிந்து கிருஷ்ணகந்த சாயரட்சை நடைபெறும்.

இதில் பதஞ்சலி வியாக்ரபாதர் மற்றும் சுந்தரருக்குக் காட்சி அருள்வார். பிறகு அஜபா நடனத்துடன் யதாஸ்தானம் அடைவார். (கிருஷ்ணகந்தம் என்றால், திருச்சாந்து + குங்குமப்பூ + பச்சக்கற்பூரம் + சந்தனம் + பன்னீர் கலந்து இவைகளை யாகசாலையில் பூஜித்து தியாகராஜருக்கு சாத்துவார்கள்)

**வியாசேஸ்வரர் :**

பதினெட்டுப் புராணங்களையும் அருளி நால் வேதங்களைத் தொகுத்து வியாசர் வழிபட்ட இலிங்கமாகையால் இம்மூர்த்தியை வழிபட, வேத வித்தைகள் முயற்சிக்க அருள் தந்து நிறைவேற்றுவார். அடுத்து நால் வேதங்கள் பூசித்த லிங்கங்கள். வேதங்கள் ஐயா என ஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியன். சிவபெருமான் வேதமும் முடிவு காணா விழுப்பொருளாக இங்கே நிலைத்திருப்பான் என எண்ணி ரிக், யஜுர், சாம, அதர்வண, வேதங்கள் பூஜிக்கின்றன. இவைகளைப் பூஜித்து வேத விற்பன்னர் ஆகலாம். யோக கோயிலாக உள்ள ஆரூரில் வேதங்களுக்குத் தனியாக, யோக நூல்களுக்குத்தனியாகக் கோயில்கள் உள்ளன. ஆகவே ஆரூர் சிவயோக தலமாகும்.

**வில்வாதேஸ்வரர் :**

இவரை வழிபட்டால் மன அமைதியும், நீண்ட ஆயுளும் பெறலாம்.

**பக்தேசுரர் :**

பக்தர் வணங்கும் இலிங்க மூர்த்தி உற்சவத்தின் போது பக்த உற்சவம் என்று ஒரு நாள் நடைபெறும். அன்று இம்மூர்த்தி பூசிக்கப்படுவார். தற்போது நடைமுறையில் இல்லை.

**மாணிக்கவாசகர் :**

அறைவாசலில் வடகீழ்ப்புறம் அப்பர், சம்பந்தர், மாணிக்கவாசகர் உள்ளனர். இராவணன் முன்னோர் புலயாதிஸ்வரர். புலத்தியபிர்மேஸ்வரர் மற்றும் கொடிமர துர்க்கையைத் தரிசித்து இராஜ நாராயண மண்டபத்தை வலமாக வந்தால் தட்ட சுற்றி மண்டபத்தை அடையலாம்.

(செட்டியார் கட்டளை, அர்த்தசாமக் கட்டளை கடந்து)

**தட்டசுற்று மண்டபம் :**

உற்சவர்கள் வீதியுலா வந்த பின்னர் தியாகராஜருக்கு அக்காலத்தில் பொட்டுக் கட்டிய தேவதாசிகள் பந்ததி பாடுவார்கள். உற்சவ மூர்த்திகளைச் சுற்றி (அதாவது தியாகராஜர் துவாஜாரோகனம் முதல் திருவிழா முடிய உற்சவ மூர்த்திகளை சுற்றி பாடல்களை தொகுத்து பாடுவது.)

பல கணிகையர்கள் விளக்கு (ஒளியுடன்) ஆராத்தியுடன் மூர்த்திகளைச் சுற்றி வந்து பந்ததி பாடல்பாடி, திருஷ்டி கழிப்பார்கள். பிறகு உற்சவர்கள் யதாஸ்தானம் செல்வார்கள். தற்போது நடைமுறையில் இல்லை. உற்சவ மூர்த்திகளை தட்டில் விளக்கு வைத்து சுற்றி வருவதால் தட்டச்சுத்து மண்டபம் என ஆயிற்று. (மங்கல ஆர்த்தி) இப்போதும் தியாகராஜப் பெருமான் பக்தகாட்சிக்கு செல்லும் முதல் நாள் இரவு ராஜநாராயண மண்டபத்தில் இருந்து இந்தத் தட்ட சுத்தி மண்டபத்திற்கு வந்து கிருஷ்ணகந்த சாயரட்சை பூஜையை முடித்துக்கொண்டு இங்குப் படைக்கப்படும் சர்க்கரை, பாவாடை (கொள்ளை பாவாடை) பிரசாதத்தை ஏற்றுக்கொண்டு பின்னர் பக்தகாட்சி வழங்கத் தேவாசிரிய மண்டபத்திற்கு எழுந்தருளுகின்றார்.

## வல்லபை விநாயகர் (தட்ட சுத்து மண்டபம்):

வல்லமை தருபவள் சக்தி. சக்தியோடு கூடிய விநாயகமூர்த்தி இங்குக் கோயில் கொண்டுள்ளார். கூனிக்குறுகித் தள்ளாடி வழி நடக்கும் நம்மை நேராக நிமிர்த்து துன்பங்களை, தீமைகளை எதிர்க்கும் ஆற்றலை விநாயகப் பெருமான் நமக்கு அருள்வார். வடபுறம் பொற்கம்ப விநாயகர். கொடி மரம் தரிசிக்கிறோம்.

## சிங்காரவேலர்:

(அழகன் கோபுரம் கடந்து வடப்புறம்) நீலோத்பலாம்பாள் சந்நிதியின் நுழைவாயிலில் சிங்காரவேலர் வில், அம்புடன் சிங்காரமாக வீற்றிருக்கிறார்.

## நீலோற்பலாம்பாள் (கிரியா சக்தி):

அருட்சக்தியாகிய அம்மை நின்ற கோலத்தில் காட்சி அளிக்கின்றாள். அம்மையின் திருநாமம் அல்லியங்கோதை. வடமொழியில் நீலோத்பலாம்பிகை. அம்மை மகுடம் சூடிக் கருங்குவளைக் கண்ணாளாய் வலக்கையில் நீலோற்பவ மலர் ஏந்தி வலக்கால் உந்தி, இடைநெளிய ஒதுங்கி, இடது கால் நடைபெயர, பாதம் வளைத்துத் தோழியின் இடத்தோளில் அமர்ந்துள்ள முருகப் பெருமானாகிய சேயை உச்சி நீவும் இடக்கரத்தோடு தழைய, புடவை உடுத்தி அருள் பொழியும் திருவிழியும், ஆண்டவனைக் கவரும் புன்னகையுடன் காதணி, மூக்கணி, மார்பு வடம், இடை மேகலை, சூடகம், வளையல் இவை பூண்டு அருளில் குழைந்த அழகுருவாய் அண்டம் அளந்த பெருந்தகையாய் மெல்ல ஒடியும் பூங்கொடியாய்க் காட்சி தருகின்றாள்.

அம்மையை வணங்கத் திருமணம் எளிதில் கைவரப் பெற்று முருகனை ஒத்த ஆண் மகன் பிறப்பான். அர்த்த நிவேதனப்பால் அருந்துதல் நன்று. வெள்ளி ஊஞ்சலில் சொக்கருக்கான பள்ளியறை அம்மை உள்ளார். அர்த்தசாம பூஜையில் பள்ளியறை சேவை முடிந்து பால் அருந்தும் கணவர் மனைவியர் உறவு மேம்படும். பிரிந்தவர் ஒன்று சேர்வர். நன்மக்களை பெறுவர். வெளியில் வெள்ளி ஊஞ்சலில் (1) நீலோற்பலம் உற்சவர் - (2) சுக்ரவார அம்மன்-(3), சங்கரநாராயணி உள்ளனர். முன் மண்டபத்தில் தஞ்சையை ஆண்ட மராட்டிய மன்னர் ஓவியங்கள் புராண காவியங்கள் சோமாசி நாயனார் யாகம் மற்றும் மாணிக்க நாச்சியார் வரலாறு வரையப்பட்டுள்ளன. வெளியில் மேல்புறம் தெட்சணா மூர்த்தி, பாதாளநந்தி அருள்பாலிக்கின்றனர். தரை கீழ் தளம் கிரேனைட் கல்லால் வேயப்பட்டுள்ளது. திங்கள், வெள்ளியில் வெள்ளிப்பல்லக்கில் சொக்கர் சேவை நடைபெறும். மற்ற நாட்களில் மரப்பல்லக்கில் சேவை நடைபெறும்.

## அழகியான் கோபுரம் மற்றும் அதிகார நந்தி :

உள்சுற்று அழகியான் கோபுர வாயிலைக் கடந்து அதிகார நந்தியின் அனுமதி பெற்று ஐங்கலக் காசு விநாயகரைத் தொழுகிறோம்.

## ஐங்கலக்காசு விநாயகர் (3 - வது சுற்று அழகன் கோபுரம்):

அழகிய சோழன் ஐந்து கலம் பொற்காசுகள் கொண்டு செய்த விநாயகர். விழாக்காலங்களில் உற்சவ மூர்த்தி. கம்பீரமான தோற்றம்.

## வன்மீகநாதர் (திருமூலட்டானம்) புற்றிடங்கொண்டார் :

பஞ்சபூதங்களில், உயிர்கள் வாழ அடித்தளமாவது பூமி. அதாவது மண் தலம் (பிருதிவி). மேலேக் காணப்படுவது ஆகாயம் (விண்). ஐம்பூதங்களில் மற்றவையான. நீர், காற்று, நெருப்பு ஆகிய மூன்றும் இடைப்பட்டவை. ஆதலின் அடிப்படையாக திகழ்கின்ற மண்ணையும் (ஆரூர்) மற்றும் விண்ணையும், (சிதம்பரம்) குறிக்கும். இருதலங்களும் மூல ஸ்தானங்களாக திகழ்வதால், திருவாரூர் ஆரூர் மூலட்டானேஸ்வரர் சந்நிதியும் (வன்மீகர்) தில்லையில் திருமூலட்டானேஸ்வரர் சந்நிதி அமைந்துள்ளன. வேறு எந்த தலத்திலும் திருமூலட்டானங்கள் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

அசையும் பொருள் அசையாப் பொருள்கள் அனைத்தும் உய்ய, கருநிறம் கொண்ட கழுத்தையுடைய கருணை வடிவமான வன்மீகநாதர் புற்றிடத்தே தோன்றினார்.

மது கைடபரைப் போரில் வென்ற திருமாலை மணக்க மகாலெட்சுமி தவம் இருந்தாள். அவள் தவத்திற்கிரங்கிய புற்றிடங்கொண்டார். மணம் செய்து கொள்ள அருள் பாலித்தார். குருஷேத்திர யாகத்தில் மூவிலைத்தனுசு பெற்ற செருக்கில் தேவர்களைச் சம்காரம் செய்ய முற்பட்ட திருமால் திருவாரூரில் வந்து தேவர்கள் உய்ய பராசக்தியின் மாயையால் தன் வலுவிழந்து மயக்கமுற்றுத் தனுசின் மீது சாய்ந்து உறங்கிவிட்டார். வியாழ குருவின் யோசனைப்படி தேவர்கள் கரையானாக மாறி வில்லின் நாணை அறுத்தனர். வில் நிமிர்ந்த வேகத்தால் திருமாலின் தலையைக் கொய்துவிட்டது. தலை குருக்ஷேத்திரத்தில் விழுந்தது. மகாலெட்சுமி மீண்டும் தவம் செய்ய வன்மீகர் அருளால் திருமால் உயிர் பெற்று, மகாலெட்சுமி தாலி பாக்கியம் பெற்றாள். இந்திரன் வழிகாட்டலின்படி தசரதன் வன்மீகரை வணங்கிப் புத்திரகாமேஷ்டி யாகம் செய்து, 4 குமாரர்களைப் பெற்றார். உலகம் உய்ய வன்மீகநாதர் அருள்பாலித்து வருகிறார்.

வன்மீகநாதரை எண்ணினாலே எண்ணற்ற வரங்கள் பெற்று வாழலாம். பெரும் செல்வம் கிடைக்கும்.

திருமால் முதலியோர் என்றும் வழிபடும் மாணிக்கத்தை, ஆதிமுதல்வனை, ஞானத்தலைவனை நினைத்தாலே கோடி பாவங்கள் நெருப்பிடைப் பஞ்சு போல அழியும்.

புற்றில் உறையும் பெருமானுக்கு மலர் ஆபரணம் தூப தீபம் ஆகியவற்றைக் கொடுத்தவர் நல்ல தவத்தில் மிக்கவர் களாய்ப் பல்லூழிக் காலம் சிவபதத்தில் இருப்பார்கள். சந்நிதி நந்தி மேல்பரப்பில் பாவுக்கல்லில் இராசி நட்சத்திரமும் சக்கரமும் அமைந்துள்ளன. உள் வாயில் நிலை மேற்பரப்பில் மீனாட்சிக் கல்யாணம் சிற்பம் வடிக்கப்பட்டுள்ளது. மூன்று நந்தி பலிபீடத்துடன் அருள் பாலிக்கிறார். உள்மண்டபத்தில் நந்திக்கு முன்னும் பின்னும் பலிபீடம் உள்ளது. இது காலை சந்தி உச்சி காலத்தில் பலி வைக்க உள்ள தனித்தனி பலிபீடம். அர்த்த மண்டபத்தில் சோம குலாம்பிகை அமர்ந்த வடிவில் அருள்பாலிக்கிறார். ருத்ராபிஷேகம் ஹோமங்கள் யாகங்கள் செய்து வன்மீகர் வழிபட எண்ணிய காரியங்கள் நடைபெறும். அதிகார பலத்தை பெறுவார். அமாவசை, திருவாதிரை, சோமவாரங்களில் இவரை பூஜை செய்து நினைத்ததை அடையலாம். மேற்கண்ட ருத்ராபிஷேகம் முறைப்படி செய்யப்படுகிறது. கட்டணம் செலுத்தினால் வன்மீகருக்குத் தங்கக் கவசம் சார்த்தித் தரிசிக்கலாம்.

**சூரியன்:**

அடுத்து வணங்கி வலம் வரும்பொழுது ஆதித்தனை வணங்குகிறோம். ஆதித்தனை வணங்க அறிவு வளரும்.

## சுந்தரர்:

அடுத்து தியாகராஜருக்கு எதிரில் சுந்தரர், பரவை நாச்சியார் சேரமான் பெருமான் எப்போதும் தியாகராஜரைத் தரிசித்துக் கொண்டிருக்கிறார்கள்.

## மூலாதார கணபதி மற்றும் தண்டியடிகள்:

ஸ்ரீ மூலாதார சக்ர வினாயக கிருதிக்கு உரிய கணபதி மூலாதார சக்கரத்தில் குண்டலினி சக்தியை குறிக்கும் ஐந்து தலை பாம்பின் மீது நர்த்தனம் ஆடிக்கொண்டிருக்கிறார். இடது கரத்தில் உள்ள பாசம் கீழே தொங்கிக்கொண்டிருக்கின்றது. மற்றொரு கையில் அங்குசம் உள்ளது. இரு புறம் நிற்பவர்களில் ஒருவர் தாளம் போடுகின்றார். மற்றொருவர் மத்தளம் வாசிக்கின்றார். மூலாதார கணபதி யோகம் சித்திக்க அருள்வார்.

தண்டியடிகள் நாயனார் பிறவிக்குருடர். கமலாலய குளத்தில் தூர்வாரும் பொழுது சமணர்களின் துன்பத்திற்கு ஆளாகி சிவபெருமானால் கண்பார்வை பெற்றார். இவர்களை வணங்கி விட்டுத் தெற்குச் சுற்றைத் தொடங்குகிறோம். தென்புறம் உற்சவ பிட்சாடனார், உற்சவ அப்பர், சம்பந்தர், மாணிக்கவாசகர் தரிசிக்கிறோம். (பஞ்சமுக வாத்தியம் அருகில் உள்ளது)

## அறுபத்து மூவர்:

உற்சவர், அறுபத்துமூவர், மூலவர் அறுபத்து மூவரை மற்றும் 9 தோகை அடியார்களையும் வணங்குகிறோம். அறுபத்து மூவரை வணங்குவதால் சிவபக்தி, குருபக்தி, அடியார் பக்தி நாளுக்கு நாள் மிகுந்து வருவதை நாம் காணலாம். பன்னிரு திருமுறை மன்றத்தால் ஒவ்வொரு நாயனார் குருபூஜையும் சிறப்பாக நடத்தப் பெறுகிறது. அன்று குறிப்பிட்ட நாயனார் வரலாறும் தெரிவிக்கப்படும். அறுபத்து மூவரை வணங்கித் தென்னன் திருவாயிலைஅடையுமுன்.

## சேக்கிழார்:

உற்சவர் அறுபத்து மூவர் மற்றும் மூலவர் அறுபத்து மூவர், இடையில் நாம் வணங்குவது சேக்கிழார். இவர் பனிரெண்டாம் நூற்றாண்டில் பழைய தொண்டை நாடு என வழங்கும் சென்னையைச் சார்ந்த போரூரிலிருந்து 8 கி.மீ. தொலைவில் உள்ள குன்றத்தூரில் வேளாளர் குடியில் அவதரித்தார். அவர் இயற்பெயர் அருள்மொழித்தேவர். சேக்கிழார் என்பது குடியின் பெயர். இவர் அநபாய சோழனிடம் முதலமைச்சர் ஆகப் பணியாற்றியவர். இவர் அறிவாற்றலைக் கண்ட அரசன் "உத்தம சோழ பல்லவர்" என்ற பட்டம் கொடுத்தான். அநபாய சோழன் (குலோத்துங்கன்-2) ஜைனத் துறவி திருத்தக்க தேவர் இயற்றிய சீவக சிந்தாமணி என்ற இன்பத்துறையே நிறைந்த காமச் சுவை நூலைப் படித்து அதில் ஈடுபாடு கொண்டிருந்ததைக் கண்டு சேக்கிழார் வருந்தி அநபாய சோழனிடம் இது அவக்கதை. சைவ சமயத்தில் இம்மை, மறுமை, வீடு என மூன்றிற்கும் நன்மை பயக்கும் சிவ கதையை கேட்டு உயிருக்கு உறுதி

தேடுங்கள் என்றார். அதற்கு மன்னன் இசைந்து அவக் கதையாயின் சிவக் கதையாது என வினவ சேக்கிழார், திருவாரூரில் சிவபெருமான் அடி யெடுத்துக் கொடுக்க சுந்தரமூர்த்தி நாயனார் திருத் தொண்டத் தொகைபாடி அருளினார். அதை நம்பி ஆண்டார் நம்பி அந்தாதி ஆகப் பாடி வழி நூலாக செய்துள்ளார் என்றார். அநபாய சோழன் கேட்டுக் கொண்டதற்கு இணங்க திருத்தொண்டர் திருவந்தாதியை சேக்கிழார் விரித்து உலகமெல்லாம் உணர்ந்து தெளிந்துய்ய இப்பெரும் காவியமாக 63 தனி அடியார்களையும் 9 தொகையடியார் களையும் மொத்தம் 4286 பாடல்கள் பாடி அருளினார். இது திருத்தொண்டர் புராணம் (பெரிய புராணம்) என்பது. இது பன்னிரெண்டாம் திருமுறை, சைவ சமயத்திற்குக் கிடைத்த கருவூலம். எல்லா புராணங்களும் அதாவது இராமாயணம், பாரதம், கந்தபுராணம், வடமொழியிலிருந்து தமிழுக்கு வந்த நூல்கள். ஆனால் முதலில் தமிழ் மொழியிலிருந்து வடமொழிக்குச் சென்ற ஒரே நூல் திருத்தொண்டர் புராணம் (அதன் பெயர் உபமன்யு, பக்த விலாசம் என்பது) எல்லாப் புராணங்களும் இதிகாசங்களும் ஆண்டவனைக் காவியத் தலைவனாக புகழ்பாடுவன. ஆனால் திருத்தொண்டர் புராணம் (பெரிய புராணம்) ஆண்டவனின் அடியாரைக் காவியத் தலைவனாகச் சித்தரிக்கிறது.

அண்ட வாணர் தொழுதில்லை அம்பலவர்
அடி எடுத்து உலகெலாம் எனத்
தொண்டர் சீர் பரவு சேக்கிழான் வரிசை
துன்று குன்றை நகராதிபன்
தண்டகாதிபதி திருநெறித் தலைமை
தங்கு செங்கை முகில் பைங்கழல்
புண்டரீக மலர் தெண்டனிட்டு வினை
போக்குவார் பிறவி நீக்குவார்.

**உமாபதி சிவம்- சேக்கிழார் புராணம் 103.**

**தியாகராஜப் பெருமான் :**

விமானத்தின் கீழ் மூலஸ்தானம் இருக்க வேண்டும். தியாகேசர் உற்சவரானதால் சற்றுத் தள்ளி உள்மண்டபத்தில் உள்ளார். அதாவது அயிராவணமேறாது ஆனேறேறி, அமரர் நாடாளாது ஆரூராள வந்து, தியாகேசப் பெருமான் பூங்கோயிலில் முத்துவிதானத்தின் கீழ் இரத்தினச் சிம்மாசனத்தின் மேல் கம்பீரமாக வீற்றிருக்கக் காண்கிறோம். பீடம் சந்தன மரத்தால் ஆனது. பிறை, கங்கை ஆகியவற்றைச் தலையில் இருபுறங்களிலும் சூடியிருக்கிறார். திருமுடியை அலங்கரிக்கிறது தலைச்சீரா. தியாகராஜரின் திருமேனி தியாகவண்ணம் என்ற துணி கொண்டு அலங்கரிக்கப்படுகிறது. நீல நிறப்பட்டுத் துணியில் சரிகையில் லிங்க வடிவம் பொறிக்கப்பட்டு வலது பக்கம் அணிவிக்கப்படுகிறது.

தியாகராஜர் சோமாஸ்கந்தர் மூர்த்தம் (ஸக.. உமா.. ஸகந்தர்) என்ற மூன்று உருவமும் ஓர் உருவமாகத் தியானிக்கும் முறை. இதன் வழிபாடு இல்லற முறையைத் தழுவியது. தியாகேசப் பெருமானின் இடப்பக்கம் கொண்டியம்மை (இச்சா சக்தி) வீற்றிருக்கிறார். பெருமானுக்கும் அம்மைக்கும் இடையே முருகப் பெருமான் வீற்றிருக்கிறார். அனைவராலும் சோமாஸ்கந்த மூர்த்தம் என்று அழைக்கப் பட்டாலும் அப்பர் பெருமான் கூறியபடி அஞ்சஞ்சின் அப்புறத்தான் என்று அழைப்பதே சாலச்சிறந்தது. அஞ்சஞ்சின் அப்புறத்தான் என்பதற்கு இருபத்தைந்து மூர்த்தங்களுக்கும் அப்பாற்பட்டது என்று பொருள். சந்நதியில் நெய் தீபம் தான் ஏற்ற வேண்டும். அதற்கு வெள்ளியிலான விளக்குகள் மற்றும் தேர் விளக்கு உள்ளன.

மூர்த்தியின் முன் வீர கண்டயம், (தஞ்சை மன்னன் சகஜியால் அளிக்கப்பட்டது.) ஞான கண்டயம், நடுவே பூச்செண்டு ஆகியவை கம்பீரமாகக் காட்சியளிக் கின்றன. திருவாசியில் 27 அக்னிச் சுடர் மற்றும் புஷ்பச் சுடர் உள்ள தங்கத்திலான வைரம் பதித்த பெரிய ஜொலிக்கும் திருவாசி காண இன்புறத்தக்கது. வீரகண்டயம், ஞான கண்டயம் (வாள்) ஒவ்வொரு வருடம் சரஸ்வதி பூசையன்று உறையை நீக்கி அபிடேகம் செய்யப்படும். பக்தர்கள் பார்வையிடலாம்.

பதினெட்டு மூலிகைகள், சந்தனக் கட்டை, தூய நெய் ஆகியவற்றால் தயாரிக்கப்படும் கிருஷ்ண கந்தம் (தியாகவினோதம்) என்னும் சாந்து அணிவிக்கப்படுகிறது. தியாகருக்குக் குங்குமப் பூவையும், பன்னீரையும், பச்சைக் கற்பூரத்தையும் சேர்த்து இழைத்தால் கிடைக்கும் சிவப்பு நிறத் திரவியம் திலகமாக இடப்படுகிறது. நவக்கிரகம் ஒன்பது சரவிளக்காகக் காட்சியளிக்கின்றனர். மஹாராஜர் ஆனதால் நந்தி நின்ற நிலையில் காட்சியளிக்கிறார். மற்றும் அடியார்கள் குறை தீர்க்க தியாகேசர் முன் தூது சென்றது போலத் திருவடி நோவச் செல்லுதல் ஆகாது, அத்தொண்டிற்கு யாமும் துணை செய்வேன் என்பது போல இடபம் எழுந்து இருக்கின்றது என்று தியாகராஜ லீலையில் மஹாவித்வான் ஸ்ரீ மீனாட்சி சுந்தரம்பிள்ளை குறிப்பிடுகிறார்.

தியாகேசப் பெருமான், செங்கழுநீர்த்தாமத்தார், செவ்வந்தித் தோட்டழகர், பிச்சியழகர் என பூவோடு சம்பந்தப்பட்ட பெயர்களால் அழைக்கப்பெறுகிறார். பஞ்ச சபைகள் நீக்கி ஆரூர் தியாகராஜர் புஷ்ப சபை என்று அழைக்கப்படுகிறார். தியாகராஜரை, கம்பி காலஅழகர், தியாக வினோதர், தேவர்கண்ட பெருமான், வீதி விடங்கர், கமலேசர், அசைந்தாடும் அப்பர், கருணாகர தொண்டைமான், ஆடவ கிங்கினி காலஅழகர், மற்றும் தியாகசிந்தாமணி என்று அழைக்கப்படுகிறார்.

தியாகராாசர் சந்நிதியில் நடைபெறும் அந்திக்காப்பு வழிபாடு கண்ணையும் கருத்தையும் கவர்வதாக உள்ளது. தேவர்கள் வழிபடுகிறார்கள். தியாகராசப் பெருமானுக்கு முசுகுந்தார்ச் சனைகளும், முகுந்தார்ச் சனையும், சகஸ்ரநாம அர்ச்சனையும் அன்பர்களால் நிகழ்விக்கப் படுகின்றன.

தியாகராசப் பெருமானுக்கு வருடத்தில் 8 அபிஷேகம் மட்டுமே செய்யப்படுகின்றது. தேவர்களால் வழிபடப் பட்டவர் என்பதால் தேவர்களுக்கு 1 நாள் என்பது மனிதர்கள் கணக்கில் 1 வருடம் என்பதன் அடிப்படையில் தேவர்கள் 1 நாளில் 6 கால அபிடேகம் செய்வது, பூலோகத்தில் வருடத்தில் 6 நாட்கள் மட்டும் அபிஷேகமாகவும் பக்த காட்சி காலங்களில் 2 அபிஷேகம் ஆகவும் ஆக 8 அபிஷேகம் நடைபெறும். மற்ற நாட்களில் தினசரி தியாகராஜப் பெருமானுக்குப் பதிலாக வலப்பக்கத்தில் ஒரு வெள்ளிப் பெட்டகத்தில் மரகத லிங்கம் (விடங்கர்) தினமும் 3 காலங்களில் திருமுழுக்குப் பெற்று வீற்றிருக்கிறார். மரகத லிங்கத்தின் மேல் அபிடேகம் செய்த பால், தேன் இவற்றைப் பருகுவதால் தீராத வியாதிகள் தீரும்.

செங்கணானும் பிரமனும் தம்முளே
எங்கும் தேடித் திரிந்தவர் காண்கிலர்
இங்குற்றேன் என்று லிங்கத்தே தோன்றினான்
பொங்கு செஞ்சடைப் புண்ணிய மூர்த்தியே - அப்பர் - 945.

ஆராக் காதலுடன் வணங்கிப் பிரியாவிடை பெற்றுத் தென்னன் திருவாயில் அடைகிறோம். வாயிலின் வலப்பக்கம் இந்திரனும், இடப்பக்கம் முசுகுந்தனும் தியாகரை வணங்கும் கோலத்துடன் நிற்கின்றனர்.

அண்ணாந்து பார்த்தால் திருமால் தியாகராசரை அன்புடன் அணைக்கும் காட்சியைக் காணும் பொழுது கண்களில் நீர் மல்குகிறது. வலப்பக்கம் திரும்பினால் இதே காட்சி ஓவியமாகத் தீட்டப்பட்ட கண்ணாடி அறைக்குள் கவினுறத் தெரிகிறது.

மீளா அடிமை, என்ற பதிகம் பாடிய சுந்தரருக்கு வலக்கண் ஈந்த பெருமான் பலருக்குக் கண் நோய் தீர்த்து அருள் வழங்கியிருக்கிறார். மேலும், சுந்தரருக்குப் பரவையாரை அளித்து மகிழ்வித்த பெருமான், பக்தர்களின் திருமணத்தை முன் நின்று நடத்தி வைப்பார். திருமணம் ஆகாதவர்கள் தியாகராசரை வணங்கி விரைவில் திருமணமாகி வாழ்வர். தியாக மூர்த்தியாகிய தியாகேசன் தனக்கென எதையும் வைத்துக் கொள்ளாத பெருமான். வாரி வழங்கும் வள்ளல். நாம் கையேந்தினால் போதும், வேண்டியதை ஆசை தீர அள்ளி அள்ளிக் கொடுப்பார். அடுத்து வலம் வரும்போது.

**அன்னபூரணி :**

உலகத்து உயிர்களுக்கெல்லாம் அன்னம் வழங்குபவள் அன்னபூரணி. ஞானத்தையும் வழங்குகிறாள். தங்க நிறம் உள்ள ஆடையால் அழகு பொலியத் திகழ்பவள். கருணை வழங்குபவள், தர்மத்தை நிலை நாட்டுபவள்.

**காட்சி கொடுத்தார் :**

நீதி நெறி தவறாத மனுநீதிச் சோழனுக்குக் காட்சி கொடுத்த மூர்த்தியாவார். அரசிளங்குமரன், ஆண் கன்று, மந்திரி அனைவரும் உயிர் பெற்றெழுந்தனர். பங்குனி உற்சவக் காலத்தில் ஒரு நாள் அப்பர், சுந்தரர், சம்பந்தர், மாணிக்க வாசகர், பைரவர் அதிகார நந்தி இவர்களுக்குக் காட்சியருள்வார். இது காண்பதற்கு அரியது.

**வாதாபி கணபதி :**

மேலைச் சாளுக்கிய மன்னனான இரண்டாம் புலிகேசியை அழித்து அவனது தலைநகரைக் கைப்பற்றி வரலாற்றில் முத்திரை பதித்தவர் பரஞ்சோதி (சிறு தொண்டர்) எனும் பல்லவர் தளபதி. நரசிம்மப் பல்லவனின் தானைத்தளபதியான இவர் வாதாபி வெற்றியின் நினைவாக அங்கிருந்து வினாயகப் பெருமான் திருவுருவைக் கொண்டு வந்து சோழநாட்டில் வைத்ததாக வரலாற்றுச் செய்தி உண்டு. அவர் கொண்டு வந்த வினாயகர் அவரது சொந்த ஊரான திருச்செங்காட்டாங் குடியில் பிரதிட்டை செய்ததாகவும், திருவாரூரில் வைத்ததாகவும் இரண்டு விதக் கருத்துக்கள் உண்டு. செங்காட்டாங்குடியில் "**வாதாபி வினாயகர்**" என்ற பெயரில் உள்ள பிள்ளையார் குலோத்துங்கன் காலத்திய சிற்பமாகும். ஆனால் திருவாரூரில் இடம்பெற்றுள்ள வாதாபி வினாயகர் கலை அம்சத்தால் சாளுக்கிய கலை நெறியை முற்றிலும் ஒத்துத் திகழ்கிறது. சோழநாட்டில் பார்க்க இயலாத ஒருவகைப் புதுமைப் படைப்பே இச்சிற்பம். முத்துசுவாமி தீட்சிதர் அவர்கள் இயற்றிய "**வாதாபி கணபதிம்**" என்ற பாடல் இந்த மூர்த்திக்கு முன்புதான் பாடப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது. (குடவாயில் திரு பாலசுப்பிரமணியன் எழுதிய கல்வெட்டு ஆராய்ச்சி நூல்) பக்கத்தில் பஞ்சமுக விநாயகரை தரிசிக்கிறோம்.

**சகஸ்ர லிங்கம் :**

குவிதலும் மலர்தலும் உடையது பேரண்டம் பேரண்டத்தினை இயங்கச் (செயல்பட) செய்வது இலிங்கம். சக என்பது நிலையினையும், ஸ்திரம் என்பது பெறும் பேறாகிய 16 பேறுகளையும் குறிக்கும். எனவே சகஸ்திரம் என்பது எல்லாம் நிறைந்த முழு நிறைவுள்ள இறைவனைக் குறிக்கும். சகஸ்திரலிங்கம் என்றால் தோற்றத்திற்கும், ஒடுக்கத்திற்கும், நிலை பேற்றிற்கும் காரணமாகிய சிவப் பரம்பொருளைக் குறிக்கும். சகஸ்திர லிங்கத்தை வழிபட்டால் 16 பேறுகளும் பெற்று வாழலாம். பாணத்தில் 1008 சிவலிங்கங்கள் அமையப் பெற்ற சிற்பச் சிறப்புப் பார்க்கத்தக்கது. தொடர்ந்து 5 விசுவநாதரை தரிசித்தப்பின்

**மந்திர பீடம்:**

புற்றிடங்கொண்டார் சந்நிதியின் மேற்குப் பக்கம் அமைந்துள்ளது. தமிழ் முனிவன் அகத்தியரால் தாபிக்கப்பட்டது. ஒப்பற்ற ஐந்தெழுத்து மந்திரத்தை மனமார உச்சரிப்பவருக்கு மூவுலகத்தும் இல்லாத பொருளினை எண்ணினாலும் அப்பொருள் கிட்டும்.

**மகாலெட்சுமி:**

திருவினாள் வன்மீக நாதரிடம் தவம் செய்து திருமாலை மணந்தவள். தவம் செய்தே தாலி பாக்கியம் பெற்றாள். நமக்கு வேண்டிய செல்வத்தைக் கொடுப்பாள். தீபாவளிக்கு இங்கு குபேர பூசை (யாகம் வளர்த்து) நடைபெறும்.

**சுப்பிரமணியர்:**

வள்ளி தெய்வானை சமேதராகப் பக்தர்களுக்கு அருள்பாலிக்கிறார். மாதாந்திர கார்த்திகை நட்சத்திர நாளிலும், கந்தர் சஷ்டியிலும் அபிஷேகம் செய்ய, கால செல்வயோக மிக்க பெருவாழ்வு வழங்குவார். பிரகார மேல் தளத்தில் இராசிக் கட்டத்தின் கீழ், கருங்கல் சங்கிலி வேலைப்பாட்டுடன் உள்ளது.

**சந்தான குரவர்கள் -4:**

சைவத்தின் இரு கண்களில் ஒன்றான 14 மெய்கண்ட சாஸ்திரங்களை வழங்கிய அருளாளர்கள். இவர்களை வணங்க சைவ சமய அருள்நெறி கிட்டும். பக்தர்களும் அருட்கவிகள் பாடும் திறன் பெறலாம். (1) மெய்கண்டார் (2) அருள்நந்தி சிவம் (3) மறைஞான சம்பந்தர் (4) உமாபதி சிவம். பரஞ்சோதி முனிவரிடம் மெய்கண்டாரும் அவரிடம் அருள்நந்தி சிவமும் , அவரிடம் மறைஞான சம்பந்தரும் அவரிடம் உமாபதி சிவமும் உபதேசம் பெற்றனர். இதை மெய்கண்ட சந்தானப் பரம்பரை என்பர்.

**நவக்கிரகங்கள்:**

நவகிரகங்கள் சதயகுப்தன் என்ற அசுரனிடம் தாங்கள் இழந்த பதவியை திருவாரூர் இறைவன் அருளால் திரும்ப கொடுத்தார். அவர்களில் பதவியை திரும்ப தரும்போது திருவாரூர் வரும் பக்தர்களுக்கு தாங்கள் நல்லதே செய்வதாக நவகிரகங்கள் உறுதியளித்தனர்.

அதனால் கோள்கள் எல்லாம் வக்கரித்து நில்லாமல் ஒரே வரிசையில் இறைவனுக்குக் கட்டுபட்டு, பக்தர்களுக்கு அருள் பாலிப்பர். நவக்கிரகங்களுக்குத் தீபம் ஏற்றி வழிப்பட்டால் கோள்களின் பாதிப்புகள் இன்றி நல்லனவே நடக்கும். அனுக்கிரக மூர்த்தியாக உள்ளனர். திருநள்ளாறு சென்றாலும் திருவாரூர் அவசியம் வர வேண்டும். ஏனென்றால், நளனும் சனீஸ்வரனும் வழிபட்ட தலம். இவ்விடத்தில் நளன், சனீஸ்வரர், பிரகஸ்பதி, தாரகை பூஜித்த லிங்கங்களும் உண்டு. கலிசெலா நகரம் என்று அழைக்கப்படுவது திருவாரூர். சனி பகவான் ஒவ்வொருவர் ஆயுட்காலத்திலும் கட்டாயம் சஞ்சரிப்பார். அப்படி சனி பகவான் மற்றும் நவகிரகங்களால் பாதிக்கப்பட்டவர்கள் இத்திருக்கோவிலுக்கு வந்து வழிபட்டால் உபாதைகள் குறையும் : தலைக்குவருவது தலைப்பாகையோடு போகும்.

**ர (ரு)ணவிமோசனர் :**

தீராத நோய் தீராக் கடன் தொல்லை முதலியவை தீரும். நோய்வாய்ப்பட்டவர்கள் கடன் தொல்லை மிக்கவர்கள் இப்பெருமானை வணங்கி விமோசனம் பெற்று இனிது வாழ்கிறார்கள். அமாவாசைத் திங்களில் உப்பு, மிளகு, வெல்லம் ஆகிய பொருள்களைக் காணிக்கையாகச் செலுத்தி

"கடன் தீர்ப்பாய் கவலைகள் தவிர்ப்பாய்
உடன்இ ருப்பாய் உடல் நோய்கள் தீர்ப்பாய்
ரு(ரி) ணகரேஸ்வரரே போற்றி போற்றி
உயர்ந்தவை காட்டி உகந்தவை தருவாய்
தாயும் சேயும் தரணியில் சிறக்க
கருவினைக்காத்து காலத்தில் சேர்ப்பாய்
ஆரூர் (ரி)ண கரேஸ்வரரே போற்றி போற்றி"

என்று பாடி விமோசனம் பெறுகின்றனர். ரண விமோசனரை இந்தச் சந்நிதி மகாதுவாரத்தின் வழியாகக் சூரியன் தரிசிக்கிறார்.

அமாவாசையில் பால்அபிஷேகம் செய்தால் கடன்களிலிருந்தும் நோய்களிலிருந்தும் நிவாரணம் பெறலாம்.

**மகிஷாசுரமர்த்தினி :**

இவள் மகிஷன் என்ற அசுரனை வதம் செய்யும் காட்சி கண்ணுக்கு விருந்தாக அமைகிறது. இந்த அம்மையை வணங்கினால் ஏற்படும் இடர்கள் நீங்கி இன்பம் பெறலாம். மேல் புறம் திருநீலக்கண்டர், துர்க்கை, 10 விஸ்வநாதர் உள்ளனர். மொத்தம் ஆரூர் கோயிலில் 9 துர்க்கைகள் உள்ளார்கள். தொடர்ந்து,

**சந்திரசேகரரும் பிரதோஷநாயனாரும் :**

வடகிழக்கே தெற்குநோக்கி தருணேந்து சேகரி சமேதரராய்ச் சந்திரசேகர் அருள்பாலிக்கிறார். இவரை வணங்கினால் கண்ணொளி சிறக்கும். தியாகேசர் சார்பாகச் சந்திரசேகருக்குப் பட்டம் கட்டப்பெற்றுச் சந்திரசேகர் வீதி உலா (திருவிழாக் காலங்களில்) வருவார். அருகில் பிரதோஷ நாயனார், ஆலம் உண்டார் உள்ளனர்.

சந்நிதி மேல் தளத்தில் உத்திரப்பகுதியில் சேத்திரவாரபுரம் என்ற பெயர் விளக்கும் சிற்பம், விஷ்ணு, இந்திரன் தியாகரைப் பூசித்த உருவச் சிற்பமும் துலாபாரமும் அமைந்துள்ளன.

## நடராஜர் மற்றும் கல்யாணசுந்தரர் :

51 அட்சரங்கள் உள்ளடக்கிய அக்னி சுடர் உள்ள திருவாசியில் நடராஜர், சிவகாமியுடன் அருள்பாலிக்கிறார். சிவபெருமானின் ஐந்து தொழில்களான அதாவது 1. உடுக்கை ஏந்திய வலது கை, படைத்தல். 2. அக்னி சுடர் உள்ள இடது கை, அழித்தல். 3. வலது காலில் மிதிப்பது முயலகன் (ஆணவமலம்), மறைத்தல். 4. இடது கை, காத்தல். 5. தூக்கிய இடது கால் திருவடி (குஞ்சிதபாதம்) அருளல். இவற்றுடன் இவர் சிவகாமியைப் பார்ப்பதுபோன்ற நடனம், சிவகாமி மூலம் பக்தர்களுக்கு அருள் பாலிக்கிறார். கல்யாணசுந்தரர் பார்வதிதேவியுடன் தனது இடது கையில் பாயும் மான், வலது கையில் மழுவுடன் உள்ளார். அதாவது உயிர்களின் ஆசைகள் (மும்மலம்) மனதில் துள்ளி ஓடுவதை (பாயும் மான்) தடுத்து நிறுத்தி மழுவால் நீக்குவதாக ஐதீகம்.

## பைரவர்:

பிரம்மதேவன் செய்த பிழைக்குத் தண்டனை வழங்க, கால பைரவர் சிவபெருமானின் கோபத்திலிருந்து தோன்றினார். சூலம், உடுக்கை, பாசக்கயிறு, தண்டம் கையில் ஏந்தியவர் "கறுத்த நிறத்தினர். கோடி சூரிய ஒளிபோலப் பிரகாசிப்பவர் அட்டமிதிதி - சிறப்பாக மார்கழி அட்டமி இவருக்கு உரிய நாள். இவரை வழிபட எமபயம் இல்லை. அருகில் ஈசான்ய, தத்புருட, அகோர, வாமதேவ, சத்யோசாத. 5. தீபமூர்த்திகள் உள்ளன.

## சிவம்:

ஈசானம், தத்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம் என்று ஐம்முகங்களாகச் சதாசிவ மூர்த்தமாக உள்ளது.

1) ஈசானம் என்பது சிவத்தைப் பற்றிய அறிவையும், ஆத்மா வைப்பற்றிச் சிந்திப்பதிலிருந்து விளக்கத்தையும் பெறுவது. (பளிங்கு நிறம் முகம் நடுவில்)

2) தத்புருடம் என்பது சுட்டி அறியும் பிரபஞ்ச அறிவைக் கொண்டது. (பொன்னிறமுகம் கிழக்கு)

3) அகோரம் என்பது சித்தத்தின் விளக்க அறிவு (கருமை நிற முகம் தெற்கு)

4) வாமதேவம் என்பது காமத்தைப் பற்றிய அறிவு. (சிவப்பு முகம் வடக்கு)

5) சத்தியோசாதம் என்பது அண்டகோசத்தின் கீழ் மேல்நிலையும் கொண்ட அறிவாகும்.(வெண்மை முகம் மேற்கு)

## எமசண்டேசர்:

திருவாரூரில் பிறக்க முக்தியாதலால் எமனுக்கு வேலையில்லை. எமனே சண்டேஸ்வரராக முழங்காலில் தலை வைத்து உட்கார்ந்திருக்கிறார். பக்தர்களுக்குப் பெருமானை வணங்கும் பயன் அருள, எமனுக்குச் சண்டேசப் பதவி அளித்திருக்கிறார். பக்கத்தில் சண்டேஸ்வரர் பூஜித்த லிங்கம் உள்ளது.

## சண்டேசர்:

வலப்பக்கத்தில் நின்ற கோலத்தில் உலா வரும் சண்டேசர். இவர் ஆதிசண்டேசர். ஆலயக் காரியங்கள் யாவும் அவர் பெயராலேயே நடைபெறும். இவர் திருவிழாவிற்குத் திருமுகம் எழுதுபவர்.

"மல்குக வேத வேள்வி வழங்குக சுரந்து வானம்
பல்குக வளங்க ளெங்கும் பரவுக அறங்க ளின்பம்
நல்குக உயிர்கட்கெல்லா நான்மறைச் சைவம் ஓங்கிப்
புல்குக உலக மெல்லாம் புரவலன் செங்கோல் வாழ்க."

**பணியாளர்கள் :**

இங்குள்ள பணியாளர்களுள் திருமேனி தீண்டுவார் நயனார், சைவ சுருதித் தலைவர் என்றும், அணுக்கத் தொண்டுசெய்வார் பிரமராயர் என்றும், மணித் தண்டு தாங்குதல் மெய்க்காவல் முதலியன செய்வார் விழிபெருமர் கூட்டத்தார் என்றும், அகக்கோளர் என்றும், இலக்கியங்களில் அழைக்கப் பெறுகிறார்கள். ஆதிசண்டேசுவர் திருவாணையைத் தலைமேல் தாங்கி, விழா அறிவிக்கும் விழாப்பறையருக்கு யானை ஏறும் பெரும்பறையர் என்று பெயர்.



**நாச்சியார் இருவருடன் நம்பி ஆரூரர்**

## பணியாளர்களும் அவர்களின் பணிகளும்:

திருவாரூர்க் கோயிலில் மத்தளத்தைத் தலைக்கு மேல் வைத்துக் கொண்டு சுவாமி புறப்பாட்டின்போது வாசிப்பது பூத நிறுத்தம் எனக் கூறப்படுகிறது. (தற்பொழுது நடைமுறையில் இல்லை) இது இக்கோயிலின் தனி மரபு ஆகும். இக்கோயிலில் பாரி நாயனம் மட்டில் இசைக்கப் படுகிறது. தியாகேசப் பெருமாளுக்கு 18 வாத்யங்கள் உள்ளன. இதில் பல சமூகத்தினர் உள்ளனர். கோயில் பணிகளைச் செய்ய மானந்தியார் பாடுவார். ஆடவுளன் கணிகையர், அலறிப்பாடுவார். கட்டியக்காரர், யானை ஏறுவர்ர். பதியிலார் முட்டுக்காரர், ஓதுவார். பரர்சைவர், கிடுகட்டி. பந்ததி பாடும் தேவதாசிகள் இப்படிப் பல குடும்பத்தினர் இருந்திருக்கிறார்கள். (திருவாரூர் உலா : 69-70)

## திருவாரூரில் பார்க்க வேண்டிய முக்கிய இடங்கள் :

மனுநீதிச் சோழனின் நினைவாகத் திருக்கோயிலின் வடகிழக்கு மூலையில் விட்டவாசல் கோபுரவாசல் அருகே அமைக்கப்பட்டுள்ள வரலாற்றுச் சின்னம் (கல்தேர்)

❖ திருவாரூர் கிழக்கு வீதியில் தேரடி அருகில் திருவாரூரின் சுவாமிமலை என்று அழைக்கப்படும் அருள்மிகு பழனியாண்டவர் திருக்கோயில் மற்றும் தேரடி வினாயகர்.

❖ கமலாலயத் திருக்குளத்தின் நடுவில் அமைந்துள்ள நாகதோஷம் நீக்கும் அருள்மிகு நாகநாதசுவாமி திருக்கோயில் பண்டைக் காலத்தில் ஒரு யாகம் நடந்தபோது நடுநாயகரான சிவலிங்கம் பரிவாரங்களுடன் இதன் இடையே பிரதிஷ்டை பெற்றுள்ளது (திருவாரூர் மாலையில் தெரிகிறது ) பிரதோஷ வழிபாடு நடைபெறுகிறது.

❖ கமலாலயத்தில் சுற்றுலாத்துறைப் படகுச் சவாரி

❖ வடக்கு வீதியில் பழனியாண்டவர் கோயிலில் எழுந்தருளி யிருக்கும் அருள்மிகு பாலசுப்பிரமணியர் அ/மி பஞ்சமுக ஆஞ்சநேயர் அ/மி ஐயப்பன் இவர்களுக்கு தினமும் வழிபாடும், அமாவாசையில் அன்னதானமும் நடைபெறுகிறது. மூன்று கோயில்களுக்கும் 13-09-07ல் குடமுழுக்கு நடைபெற்றது.

❖ தியாகராஜர் கோயில் நிர்வாகத்திற்குட்பட்ட பிடாரி கோயில் தெருவில் எழுந்தருளியுள்ள பிடாரி அம்மன் (முட்டுக்காரர் (பராமரிப்பில் உள்ளது.) மற்றும் பக்கத்தில் உள்ள ஆதிபராசக்திகோயில் மற்றும் வழிபாடு மன்றம்)

- காகிதக்காரத் தெருவில் ராஜகோபுரத்துடன் எழுந்தருளியிருக்கும் அருள்மிகு மாரியம்மன் கோயில் பிரசித்தி பெற்றது. வைகாசி மாதம் 4 வது திங்கட்கிழமை தீமிதி உற்சவம் நடைபெறும்.
- மடப்புரம் அருள்மிகு சோமநாதசுவாமி கோயில். சந்நிதியில் சந்திரத் தீர்த்தம் உள்ளது. இதில் தியாகராஜர் சொற்படி இந்திரன் சோமநாதரைப் பிரார்த்தனை செய்து மூழ்கித் தன் வெண்குஷ்டம் நீங்கி எல்லா நலன்களும் பெற்றார். (தியாகராஜர் சர்க்கம்).
- சங்கீத மும்மூர்த்திகள் (1) தியாகய்யர் (2) முத்துசாமி தீட்சிதர் (3) சாமா சாஸ்திரி பிறந்த இடங்கள் .
- தியாகராஜர் திருக்கோயிலில், அலுவலகம் அருகில் உள்ள கலைக்கூடம் (மியுசியம்).
- புதுத்தெரு நாலுகால் மண்டபம் சமீபம்

  நிர்மாணிக்கப்பட்டுள்ள ஸ்ரீ ராகவேந்திரர் பிருந்தாவனம்.
- குமரன் கோயில் தெருவிலுள்ள குமரன் கோட்டகம். ஸ்ரீ தெய்வானை வள்ளியுடன் சுப்ரமணியர் மற்றும் சொக்கர் மீனாட்சியுடன் அருள்பாலிக்கிறார்கள்.
- புதுத்தெருவில் கருணாகரத் தொண்டைமான் வழிபட்ட ஞானம்பாள் சமேத கருணாகரேஸ்வரர் கோவில் உள்ளது.
- துர்க்காலயா ரோட்டில் உள்ள விஸ்வகர்மாவினர்க்குச் சொந்தமான காஞ்சி காமாட்சிஅம்மனுக்கு நிகரான காமாட்சியம்மன் கோவில். இதில் சூரிய பூஜை சிறப்புடையது.
- தெற்குக் கோபுரவாசலிலுள்ள ராஜதுர்க்கை, ராஜதுர்க்கையை அஸ்தம், சித்திரை நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் வழிபட்டால் எல்லா நலன்களும் பெறலாம். வெள்ளிக்கிழமை தோறும் கார், வேன் மற்றும் இருசக்கர வாகனங்கள் வைத்திருப்பவர்கள் அம்பாளை வழிபடுவார்கள்.
- விஜயபுரம் ஆற்றுப்பாலம் அருகில் கமலேஸ்வரர் கோயில். கமல முனிவர் வழிபட்டது. திருப்புகழ் பாடல் நெ.825.
- (1)வடக்கு வீதியில் மேல வீதி மூலையில் உள்ள விஸ்வநாதர், (2) மேல வீதியில் உள்ள கூட்டுறவு நகர வங்கிக்கு பக்கத்திலுள்ள விஸ்வநாதர், (3) முனிசிபல் அலுவலகம் பக்கம் உள்ள விஸ்வநாதர் ஆக மூன்று கோயில்களில் விஸ்வநாதர் அம்மனுடன் ஒரே வீதியில் அருள்பாளிக்கின்றனர்.

## சுற்றியுள்ள சில கோயில்கள்:

❖ **மாற்றுரைத்த விநாயகர் :**

கமலாலயம் கீழ்க்கரையில் மாற்றுரைத்த வினாயகர் உள்ளார். இவர், சுந்தரமூர்த்தி நாயனார் விருத்தாசலத்தில் இறைவன் தந்த பன்னீரு ஆயிரம் பொற்காசுகளை மணிமுத்தாறில் இட்டுத் திருவாரூர்க் கமலாலயத்தில் தர வேண்டும் என்று வேண்டினார். பெருமானும் அவ்வாறே செய்வதாக அருளினார். ஆற்றிலிட்ட சில பொற்காசுகளை சுந்தரர் கையில் எடுத்து வந்து கமலாலயத்தில் பெற்ற காசுகள் அதன் மாற்றுக் குறையாமல் இருக்கின்றதா என வினாயகரை வேண்ட அவரும் அவ்வாறே மாற்றுப் பரிசோதித்துத் தந்ததால் மாற்றுரைத்த வினாயகராக இருந்து அருள் பாலிக்கிறார். (8.3.2007 ல் குட முழுக்கு நடைபெற்றது. இவரை முத்துசாமி தீட்சிதர் கொள்ளை ராகத்தில் ஸ்ரீ மகா கணபதி மாம் என்ற கீர்த்தனை பாடி சொர்ண ஆகர்ஷண விக்ன ராஜா என்று சிறப்பிக்கிறார்)

❖ **ருத்ரகோடிஸ்வரர் :**

ஓடம்போக்கி ஆற்றுப்பக்கம் கோடி லிங்கங்கள் பூஜித்த அருள்மிகு சௌந்தரநாயகி சமேத ருத்ரகோடிஸ்வரர் கோயில் உள்ளது. பக்கத்தில் பிராமணர் இனத்தினர் சுடுகாடு உள்ளது. அந்த சுடுகாட்டை அப்புறப்படுத்த நகராட்சி முயற்சிக்கும் போது அந்தக் கோயில் மூலவர் சுடுகாட்டுப் புகை மேல்பட்டு சுவாசிப்பதாக நீதிமன்றம் மூலம் உத்திரவுப்பெற்றுள்ளனர். (கோயில் திருப்பணி செய்யவேண்டும்)

❖ **விருப்பாட்சீஸ்வரர்:**

விருப்பாட்சி நடப்பில் ஐந்து சிவலிங்கங்கள் உள்ள புராதன அருள்மிகு சுந்தரநாயகி சமேத விருப்பாட்சிச்சுவரர் கோயில் உள்ளது. விருப்பாட்சிச்சுவரன் என்ற அசுரனை சிவன் வதம் செய்த போது அவன் தன் பெயர் விளங்க கேட்டுக் கொண்டதால் விருப்பாட்சிச்சுவரர் என அழைக்கப்படுகிறது. கோயில் சிதிலமடைந்துள்ளது. உள்ளே விநாயகர், முருகன், பின்புறம் லிங்கோற்பவர் சப்தமாதர்கள் உள்ளனர். (கோயில் திருப்பணி செய்யவேண்டும்)

❖ **திருநீலகண்டர் கோவில் :** சந்நிதித் தெருவிலுள்ள உள்ளது. குலாளர்களால் சிறப்பாகப் பராமரிக்கப்படுகிறது. சுந்தரர் திருத்தொண்ட தொகையில் போற்றப்படும் முதலாவது நாயன்மார் திருநீலகண்டர். மாதுசொன்ன சொல்லால் இளமை துறக்க வல்லேன் அல்லன் என்றார் பட்டினத்தார். அவர் போற்றிய மூன்று நாயன்மார்களில் ஒருவர் (திருநிலகண்டர், கண்ணப்பர், சிறுதொண்டர்) திருநீலகண்டர், திருவாரூர் தியாகராஜர் வலக்கால் பாத தரிசனத்திற்கு வந்தவர் சந்நிதித் தெருவில் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து பூஜித்தார். அந்தச் சிவலிங்கத்தைக் கொண்டு குலாளர்களால் அமைக்கப் பட்டது இந்தக் கோயில் . அதில் திருநீலகண்டர் நாயனார், எழுந்தருளியுள்ளார். தை மாதம் விசாக நட்சத்திரத்தில் குருபூஜை நடைபெறும்.

**மாணிக்க நாச்சியார் :**

வடக்கு வீதியும், கீழவீதியும் கூடும் இடத்தில் உள்ள கோவில் மாணிக்க நாச்சியார். பதி இல்லாத கணிகையர் குலத்தினர். இவர் தன் தொழிலில் ஒரு நேர்மையைக் கடைபிடித்தார். அன்றாடம் பொருள் தந்து தம்மிடம் வரும் காமுகரை அன்று இரவு முழுவதும் தன் கணவராகவே கருதுவார். இந்த அரிய ஒழுக்கத்தை உலகறியச் செய்ய இறைவன் ஒரு நாள் கிழ வேதியராக நாச்சியார் வீடு வந்தார். அவர் ஆன்மீக கலவியில் கழித்தார். ஆனால் பொருளுக்குப் பதிலாக வேதியர் உத்ராட்ச மாலை கொடுத்தார். சற்று நேரம் சென்ற பின் வேதியர் இறந்து போனார். இதற்காக நாச்சியார் வேதியருடன் உடன்கட்டை ஏறத்துணிந்தார். ஆனால் சிதை எரியாது போயிற்று. இறைவன் காளை வாகனத்துடன் காட்சி தந்து மாணிக்க நாச்சியாரை உலகறியச் செய்து அருள் பாலித்தார்.

தியாகராஜர் தேருக்குச் செல்லும் போது இவர் மரபினர் அர்ச்சனை செய்து வடம் பிடிப்பதாக வரலாறு. தற்போது சிறப்பாக வழிபாடு நடைபெறுகிறது.

**பரவை நாச்சியார் கோவில் :**

தெற்குக் கோபுர வாசலில் உள்ள பரவை நாச்சியார் கோயிலில் சுந்தரர் வேண்டுகோளுக்கு இணங்க, குண்டையூர் கிழார் அளித்த நெற் கோட்டைகளைப் பஞ்ச பூதகணங்கள் வேடம் அணிந்தவர்கள். மாசி மாதம் உத்திர நட்சித்திரத்தில் கொண்டு வந்து சேர்ப்பார்கள். மேற்படி கோயிலில் அன்று மாலை சிறப்பு ஆராதனையும், பக்தர்களுக்கு நெல் விநியோகமும் நடைபெறும். மறுநாள் தியாகராஜர் கோயில் (அஸ்தம்) கொடியேற்றம் நடைபெறும். (விபரம் பக்கம் 39) கருவரையில் சுந்தரர், பறவையார், சுந்தரர் பூஜித்த விடங்கர், வெளியில் விநாயகர், சடையனார், இசைஞானியார், யாணை உள்ளனர்.

### திருவாரூர் விஜயபுரம் ரேணுகாதேவி (எல்லையம்மன் கோவில்)

பாண்டவர்கள், பாரதப்போரில் பலரையும் வதம் செய்த தோஷம் நீங்கப் பூவுலகிலுள்ள பல்வேறு புண்ணியத் தலங்களையும் தரிசித்து வந்தனர். வழியில், விசயபுரத்தில் இரத்த ஆறு ஓடுவதைக் கண்டு மார்க்கண்டேய மகரிஷியிடம் விளக்கம் கேட்டனர். இருபத்தொரு தலைமுறை அரச பரம்பரையைக் கொன்ற பரசுராமன் தன் கோடாரியை இவ்வாற்றில் கழுவியதால் ஆறு இரத்தமானது என்பதை மகரிஷி கூறினார். இரேணுகாசூரன் என்பவனுக்கு 21 மனைவி இருந்தும் மகப்பேறு இல்லாததால் மனம் வருந்த கௌதம முனிவர் அறிவுரைப்படி பால துர்க்கையை வழிபட்டான். தேவியின் அருளால் மூத்த மனைவி போகவதி என்பவருக்குப் பிறந்த பெண் குழந்தை ரேணுகாதேவி ஆகும். சோதிடர்கள் ரேணுகாவின் வயிற்றில் பிறக்கும் ஆண் குழந்தை ஆணவமிக்க அரசர்கள் கொட்டத்தை அடக்கி அதர்மத்தை அழித்து தர்மத்தை நிலைநாட்டுகின்ற வீர விசயன் ஆகத் தோன்றுவான் என்று கூறினர். மற்ற மனைவிகள் ரேணுகாவின் குழந்தையை நச்சுப் பாம்பு தீண்டுமாறு செய்தனர். அம்மன் அருளால் கையில் இருந்த கத்தி இரத்தம் படிந்திருப்பதை காட்டி அம்பாள் தான் பாம்பை துண்டாடி குழந்தையைக் காப்பாற்றி விட்டார் என்று மகிழ்ச்சி அடைந்தனர்.

ரேணுகா பல கலைகள் கற்று அழகு தெய்வமாக விளங்கினார். மணமுடிக்க 56 தேச அரசர்கள் போட்டியிட்டனர். துர்க்காத்தேவியின் அருளால் 700 சீடர்கள் கொண்ட ஜமதகினி ரேணுகாவை மணந்து வாழ்ந்து வந்தனர். தினமும் ரேணுகா ஆற்றில் நீராடி மண்குடம் செய்து நீர் எடுத்து வருவது வழக்கம். ஒரு நாள் எதிர்க்கரையில் கந்தர்வ முனிவர்கள் நீர் விளையாட்டில் ஈடுபட்டிருந்ததை ரேணுகா வேடிக்கை பார்த்து இருந்தார். இதையறிந்த ஜமதக்கினி முனிவர் ரேணுகாவின் தலையை வெட்டி வருமாறு தன் மக்கள் மூவரிடம் கூற அவர்களில் இருவர் மறுத்தனர். மூன்றாவது மகன் பரசுராமன் தந்தையின் சொல்லை மேற்கொண்டு தாயின் தலையைக் கொய்து வருகிறான். தன் ஆணையை நிறைவேற்றிய மகன் பரசுராமனிடம் உனக்குத் தேவையான வரம் கேள் என்றார். தந்தையின் ஆற்றலை அறிந்திருந்த பரசுராமன் தன் தாயையும், தாயைக் காப்பாற்ற முற்பட்ட தன்னால் வெட்டுண்ட மாதாங்கினியையும் உயிர்ப்பித்து தருமாறு வேண்டுகிறார். இருவரும் உயிர்பெற்றனர். ஒரு நாள் கார்த்தவீரியார்ச்சுனன் என்ற அரசன் வேட்டையாடிக் களைத்த நிலையில் தன் பரிவாரங்களுடன் ஜமதக்கினி ஆசிரமத்தை அடைந்தான். அவர்களுக்கு ஜமதகினி தம்மிடம் உள்ள காமதேனு என்ற பசுவின் துணை கொண்டு நல் விருந்து படைத்தார்.

காமதேனுவின் ஆற்றல் தன்மையைக் கண்டு மன்னன் தனக்கு அளிக்குமாறு கேட்டான். முனிவர் மறுக்கவே அரசன் ஆணவத்துடன் முனிவரை வெட்டிக் கொன்று காமதேனுவைக் கவர்ந்து சென்றான். கணவன் நிலை கண்டு துயரம் அடைந்த ரேணுகா 21 முறை தன் மார்பில் அடித்து அழுது புலம்புகிறாள். அதைக் கண்ட பரசுராமர் கார்த்தவீரியனைக்கொன்று 21 தலைமுறை அரச பரம்பரையை அழிப்பதாகச் சபதம் ஏற்று கார்த்தவீரியனைக் கொன்றான். தாயார் ரேணுகாதேவி தந்தை ஜமதக்கினி இருவரையும் காவடியில் இரு பக்கம் தூக்கி வைத்துக் கொண்டு பரசுராமன் குருவாகிய தார்த்தரேயரிடம் சென்றான். தார்த்தரேயர் ஆசி கூற தாய் தந்தையர் மறைகின்றனர். கங்கையில் மூழ்கி வருமாறு பரசுராமருக்குக் குரு உத்தரவிடுகிறார். தனது சபதப்படி அரச பரம்பரையை அழிக்க பரசுராமர் முற்படுகிறார். மணக்கோலத்தில் இருப்பவரை பரசுராமர் கொல்வதில்லை என்பதை அறிந்த தசரத சக்கரவர்த்தி, பரசுராமர் வரும்போதெல்லாம் ஒவ்வொரு பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளும் மணக்கோலத்தில் இருக்க வேண்டியதால் தசரதர் 60 ஆயிரம் மனைவியோடு வாழ்ந்ததாக வரலாறு. குரு கட்டளைக்கு இணங்க பரசுராமர் கங்கையில் மூழ்கித் திரும்ப வரும்போது வழியில் பூமி பிளந்து தன் தாய் ரேணுகாதேவியின் சிரசு மட்டும் வெளிவந்த நிலையில் இருப்பது கண்ட பரசுராமர், அவ்விடத்திலேயே தாயின் தலையைப் பிரதிஷ்டை செய்து வழிபடச் செய்தார். அவ்வாறு பரசுராமர், வழிபட்ட இடமே திருவாரூர் விஜயபுரம் கடைவீதி மையத்தில் அமைந்த ரேணுகாதேவி அம்மன் கோயில். திருமாலின் அவதாரம் என்பதால் சங்கு சக்கரத்துடன் பரசுராமர், பஞ்சலோக உற்சவ மூர்த்திகள், ஜமதக்கினி உள்ளனர்.

தஞ்சை ராஜராஜ சோழனின் குல தெய்வமாகப் போற்றப்படும் ரேணுகாதேவியின் பெருமைகளைச் சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான முத்துசாமி தீட்சிதர் புகழ்ந்து பாடியுள்ளார்.

## குரு தெட்சிணாமூர்த்தி மடம் : மடப்புரம்

ஸ்ரீ தட்சிணாமூர்த்தி சுவாமிகள் மடம். இது மடப்புரத்தில் உள்ளது. யோகம் பயின்றோர் தங்குமிடம், தட்சிணா மூர்த்திகள் திருஉருவம் பல வணிகப் பெருமக்கள், செல்வர் இடங்களில் போற்றுதலுக் குரியனவாகத் தமிழக முழுவதும் உள்ளன.

திருச்சியை அடுத்த காட்டூர் பக்கம் கீழாலாத்தூரில் சைவ வேளாளர் குடியில் சிவசிதம்பரம்பிள்ளை நீலாம்பிகை தம்பதியினர் வாழ்ந்தனர். பல் காலம் இவர்களுக்குக் குழந்தை இல்லாததால் திருவண்ணாமலை அருணாசலேஸ்வரைப் பிரார்த்தித்து அவர் அருளால் ஆண் குழந்தை பிறந்தது.

அதற்கு அருணாசலம் என பெயர் சூட்டினர். குழந்தை ஐந்து வயது வரை பேசவில்லை. தாய் தந்தையர் வருத்தமுற்று அண்ணாமலையாரை மீண்டும் தொழ, அண்ணாமலையார் பக்தர் குறை தீர்க்க, உத்திராட்சம், விபூதி, சடாமுடியுடன் துறவியாகத் தோன்றி அருணாசலம் (சுவாமிகள்) முன் தோன்றினர். சுவாமிகள் துறவியாரைக் கண்டவுடன் நிட்டை நீங்கி, நீயே நான் நானே நீ என்றது. முனிவர் சத்தியம் எனக்கூறி அகன்றார். இதைக் கண்ட சுவாமியின் பெற்றோர்கள் வியந்தனர். சுவாமிகள் முதலில் ஆரூர் வடக்கு வீதியில் நாகராஜன் என்பவருக்குச் சொந்தமான வீட்டில் வசித்ததாக தெரிகிறது. அவர் வீட்டின் பின்புறம் சுவாமிகள் உலோகத் திருமேனியாக எழுந்தருளியுள்ளார். வழிபாடு நடைபெறுகிறது. பிறகு மடப்புரம் (வன்மீகபுரம்) இருந்து அருள்புரிந்து வந்தார்கள். சுவாமிகள் பல அற்புதங்கள் செய்துள்ளார்கள். திருவாரூர் கொத்தத்தெரு, அருணாசலம் பிள்ளை என்பவர் சுவாமிகளிடம் மிகுந்த விசுவாசம் உள்ளவர். இவர் ஸ்ரீரங்கம் பெருமாள்கோவில் விழாவிற்குப் பந்தல் போடும் போது திடீரென உயரமான இடத்திலிருந்து விழுந்து விட்டார். அப்போது தெட்சிணா மூர்த்தியை நினைத்து அபயம் அபயம் என்றார். அப்போது சுவாமிகள் கமலாலயக் குளக்கரையில் அமர்ந்திருந்த சுவாமி தெட்சிணாமூர்த்தியை நம்பினால் என்ன செய்வான் எனக்கூறி தனது வலக்கரத்தால் ஒரு பொருளைத் தாங்கி கீழே வைப்பது போன்று வைத்தது. அருணாசலம் அவ்வாறு உயரத்திலிருந்து தான் தவறி கீழே விழுந்தும் ஏதும் ஆகவில்லை என்பதை அறிந்து சுவாமிகளிடம் நிரந்தர அடிமையாகி விட்டார். **சித்தூர் சோமநாத முதலியார் என்பவர்** பெரிய தனவந்தர். இவர் குன்ம நோயால் பாதிக்கப்பட்டு சிகிச்சை செய்து பலனின்றி அவதிப்பட்டார். கடைசியாக தில்லைக் கூத்தனிடம் முறையிட நடராஜபெருமான் கனவில் தோன்றி உனது நோய் தீர்க்க திருவாரூரில் தெட்சிணாமூர்த்தி என்ற துறவி நிர்வாணமாகத் திரிவான். அவனிடம் செல்வாயாக.(நடராஜர் அருளால் தெட்சிணாமூர்த்தி என பெயர் மாற்றம் ஏற்பட்டது) என அசரீரியாக ஒலித்தது. முதலியார் உடனடியாக ஆரூரில் சுவாமிகள் திருவடிகளில் விழுந்தார். சுவாமிகள் தன் கையிலிருந்து உணவை முதலியார் வாயில் இட்டதும் அக்கணமே தீராத குன்ம நோய் தீர்ந்தது. விராலிமலையில் சுவாமிகள் பசித்திருந்த போது அதாவது நடுநிசியில் முருகப் பெருமான் சிறுவனாக வந்து பொங்கலை வெள்ளித் தாம்பாலத்தில் வைத்து புசிக்கச் செய்தார். மேலும், ஸ்ரீ தியாகராஜர் ஆழித்தேர்விழா காண நாட்டின் பல பாகங்களிலிருந்து மக்கள் வருவார்கள். சாதுக்களும், சந்நியாசிகளும், ஒருங்கே கூடுவார்கள். ஒருசமயம் 1. ஸ்ரீகிருஷ்ணானந்த கிரி சுவாமிகள் 2. ஸ்ரீ சங்கர சரஸ்வதி சுவாமிகள் 3. ஸ்ரீ ராமானந்தபாரதி சுவாமிகள் இவர்கள் தற்செயலாக செல்வது போல தெட்சணாமூர்த்தி சுவாமிகளை தரிசித்தனர்.

அங்கு படித்துறையில் கூட்டத்தின் நடுவே வெயிலையும் பொருட்படுத்தாது படுத்திருக்கும் சுவாமிகளைக் கண்டு எங்கேனும் மர நிழலிருந்தால் சுகமாக இருக்குமே என்று மனத்திற்குள் எண்ணினார்கள். இவர்கள் உட்கருத்தை உணர்ந்த சுவாமிகள் சேதனமாகிய ஆன்மாவிற்கு, அசேதனமான விருட்சமா சுகத்தை தரும். அப்படி தந்தால் காணல் நீரும் உஷ்ணபூமியை குளிர செய்யும். உண்மை நோக்கின்மையை பேதப்பிரதிக்கு மூலம் என்றார் வந்தவர்கள் பல கால தேடுதலுக்கு விடைக்கின்றது. சாதுக்கள் அவையில் இக்கருத்தை அதன் உண்மை பொருளை உணர்ந்து விரித்து உரைக்கின்றனர். பின்னாளில் "தெட்சணாமூர்த்தி சுவாமிகள் வாக்கிய சிந்தனம்" என்று, இதை நூலாக விளக்கமாக வெளியிட்டனர். இப்படிப் பல அற்புதங்கள் செய்துள்ளார்கள்.

சுவாமிகள் 27.08.1835 -ஆம் வருடம் பிற்பகல் 12 மணியளவில் (ஆவணி உத்திரம்) முன்னமே தயார் செய்து வைத்திருந்த திருவாரூர் மடப்புரம், ஓடம்போக்கி ஆற்றங்கரைப் பக்கம் சிவசொரூபத்தில் கலந்தார்கள். அந்த மடம் ஜீவ சமாதி ஆகும். இவரை உள்ளன்போடு சரணடைந்தால் நினைத்தது நடக்கும். மகா குருபூஜை ஆவணி உத்திரத்தில் நடைபெறும்.

நாகை குருவருள் திரு கீ. நாகராஜன் அவர்களுக்கு உஜாலா மூலம் சுவாமிகள் திருமந்திரம் விளக்கம் அருள் புரிகிறார்கள். இதுவரை திரு. நாகராஜன் திருமந்திரம் விளக்க உரை ஆறு தொகுப்புகள் வெளியிட்டுள்ளார்கள். படித்து அரிய வேண்டிய கருவூலம்.

**துருவாச நாயனார் : (தூவாய நாயனார்):**

(பரவையுண்மண்டளி) இக்கோயிலை பரவைநாச்சியார் கட்டி இறைவனை எழுந்தருளச் செய்துள்ளார் என்கிறார்கள். சுந்தரர் பாடல் பெற்றது. திருத்தேருக்குச் சமீபமாகப் பரவையுண்மண்டளி என்ற திருக்கோயிலுண்டு. அதுவும் சுந்தரர் திருப்பாடலால் திகழ்வது. இறைவன் திருநாமம் தூயவர்(மண்டலேசன்): இறைவி திருநாமம் பஞ்சின் மெல்லடியாள். ஆனால், இறைவன் மண்டலேசன் என வழங்கப்பெறுகிறார். துருவாசர் திருவுருவம் ஒன்று விநாயகருக்குப் பக்கத்தில் உள்ளது. துருவாசர் வழிபட்டதால் துருவாச நாயனார் என்ற திருநாமமே தூவாய நாயனார் என்று ஆயிற்று என்பர். ஆனால் சுந்தரர் திருவாக்கு

" **தூவாய தொண்டு செய்வார் படுதுக்கங்கள் காவாயே**" என்றும், " **பஞ்சேறு மெல்லடியாளை ஓர் பாகமாய்**" என்றும் வருவன இறைவன், இறைவி திருநாமங்களை விளக்கும் சான்றுகளாகும். சனீஸ்வரர் பகவானுக்குத் தனி சந்நிதி உள்ளது.

## திருவாரூரை சுற்றியுள்ள ஊர்கள்

### திருப்பள்ளி முக்கூடல் (குருவி ராமேஸ்வரம்)

**அஞ்சனாட்சி உடன் உறையும் திருநேத்திரநாதசுவாமி (முக்கோணநாதர்) :**

திருவாரூரிலிருந்து 5 கீ.மி. உள்ளது. இது தியாகராசர் கோயில் நிர்வாகத்திற்கு உட்பட்டது. அப்பர் பாடிய தலம். சோழ மன்னனின் சிவ வழிபாட்டிற்குக் குதிரைக்காரர் கொள்ளுப் பையினால் சிவலிங்கம் அமைத்தார். மன்னர் அதை வழிபட்டு உணவு அருந்தச் சென்றார். பின்னர் குதிரைக்காரர் கொள்ளுப் பையினை எடுத்த போது கொள்ளுப் பையானது உண்மையில் சிவலிங்கமானது. இதனால் சோழமன்னர் இவ்வாலயத்தை அமைத்ததாக வரலாறு. ஜடாயு இங்கு இறைவனை வழிபட்டுத் தன்னுடைய இறுதிக்காலம் பற்றிக் கேட்க இறைவன் சீதையை இராவணன் கவர்ந்து வரும்பொழுது நீ தடுப்பாய் உன் சிறகுகள் வெட்டப்படும் அப்பொழுதுதான் உன் முடிவு என்று அருளினார்.

ஜடாயு, வருத்தத்துடன் நான் காசி கங்கை போன்ற புண்ணிய தீர்த்தங்களில் நீராடாமல் உயிர் விட வேண்டுமா? எனக் கேட்க, இறைவன் ஜடாயுவிற்கு அருள் செய்யும் நோக்கத்துடன் முக்கூடல் தீர்த்தத்தை உண்டாக்கி அதில் மூழ்குமாறு தெரிவிக்க, ஜடாயு அதில் மூழ்கி, புண்ணிய தீர்த்தங்களில் நீராடிய பலனைப் பெற்றார். இந்தத் தீர்த்தம் திரிவேணி சங்கமத்திற்கு நிகரானது. சிலை விக்கிரகங்கள் மிக நேர்த்தியாக உள்ளன. 27.01.2003ல் குடமுழுக்கு சிறப்பாக நடைபெற்றது.

### விளமல் :

திருவாரூர் திருக்கோயில் நிர்வாகத்திலுள்ள மற்றொரு கோயில் விளமல் (திருவிளமர்) சுவாமி பதஞ்சலி மனோகரர், தேன்மொழி. சம்பந்தர் பாடியது. ஒவ்வொரு வருடமும் விளமலிலிருந்து பதஞ்சலி, வியாக்கிரபாதர் ஆரூர் வந்த பின்னர் தியாகராஜர் கோயில் உற்சவம் நடைபெறுவதாக வரலாறு. குட முழுக்கு நடைபெற்றது 30.08.2004.

### புலிவலம் மற்றும் வண்டாம்பாளை திருக்கோயில்கள்:

திருவாரூர் தியாகராஜ பெருமான் அருளாட்சிக்கு உட்பட்ட ஆலயத்தில் தெற்கே அக்காலத்தில் மூன்றாம் பிரகாரமாக விளங்கியது புலிவலம். மதுரையில் அந்தணர் குலத்தில் பிறந்த கோகர்ணர் பெயருடைய இரண்டு சகோதரர்கள் ஆயுள் காலம் முடியும் முன் எமதூதர்கள் அழைத்துச் சென்று விட காலன், புண்ணியம் செய்த அவர்களை மீண்டும் பூலோகத்திற்கு அனுப்பி பிருத்திவி தலமான திருவாரூரில் சிவலிங்கம் ஸ்தாபித்து வழிபட்டால் எமபயம் நீங்கிச் சிவபதம் சேரலாம் எனக் கூற அதன்படி இருவரும் திருவாரூர் திருக்கோயில் தென்பால் புலிவலத்தில்

தெட்சிணகோகர்னேஸ்வரர், அனுக்கிரக கிரமமாக மேற்கு நோக்கி அமைத்து வழிபட்டும் மற்றும் தியாகேசர் கோயில் வடபால் வண்டாம்பாளையில் உத்திரகோகர்னேஸவரர் கோயில் ஆகிய இரு ஆலயம் அமைத்து எல்லாவித பேறுகளையும் பெற்றதாக வரலாறு. புலிவலம் அ/மி. ஆனந்தவல்லி உடனுறை தெட்சிணகோகர்னேஸ்வரர் ஆலயம் குடமுழுக்கு 31.08.06 அன்று சிறப்பாக நடைபெற்றது.

**திருநெய்ப்பேர் (நமி நந்தியடிகள்)**

திருவாரூரில் இருந்து 8 கி.மீ. தெற்கே (திருஏமாப்பூர்) திருநெய்ப்பேர் உள்ளது. நமிநந்தி அடிகள் நாயனார் (அந்தணர்) பிறந்த ஊர். திருவாரூர் கோயிலில் தினமும் தீபம் ஏற்றுவார். எண்ணெய் கிடைக்காத காரணத்தால் இறைவன் அருளால் தண்ணீரால் விளக்கு ஏற்றியவர். ஒரு சமயம் ஆரூர் தியாகராஜர் மணலி கோவில் திருவிழாவில் செல்லும் போது இவர் கலந்து கொண்டு திரும்பி, தனது வீட்டிற்குச் சென்ற சமயம் இரவு ஆனதால் பலதரப்பட்ட மக்களோடு பழகியதால் தீட்டு எனக் கருதி வெளித் திண்ணையில் படுத்து,மறுநாள் காலை நீரில் மூழ்கி வீட்டுக்குள் செல்லலாம் எனப்படுத்தவர் உறங்கிவிட்டார். கனவில் தியாகராஜர் தோன்றி ஆரூரில் யாவரும் சிவகணங்கள். ஜாதி மதம் பார்க்க வேண்டாம் எனச் சொன்னதால் வருந்தி ஆரூரில் தங்கித் தன் தொண்டினைச் செய்தார் இவர் தொண்டருக்கு ஆணி என்று அப்பர் அழைத்தார். திருநெய்ப்பேர் தெற்கே 5 கி.மீ. கோட் புலி நாயனார் அவதரித்த திருநாட்டியத்தாங்குடி உள்ளது. இது பழைமையான வேலைப்பாடமைந்த கோயில்.

**திருக்காரவாசல் :**

(சப்த விடங்க தலங்களில் ஒன்று - திருவாரூரிலிருந்து தெற்கே 10 கி.மீ. உள்ளது.) (ஆதிவிடங்கர்) இறைவன் கண்ணாயிர நாதர் இறைவி கைலாயநாயகி தலமரம் பலா. சம்பந்தர் பாடியது. வியாபாரி ஒருவன் தான் கொண்டு வந்த ஜாதிக்காய் மூட்டைகளை கடுக்காய் என்று பொய் கூற அம்மூட்டைகள் கடுக்காய்களாக மாறின. கோயில் குளம் வடகரையில் உள்ள கடுக்காய் விநாயகரை வேண்ட மீண்டும் ஜாதிக்காய் மூட்டைகளாயின.

**திருநெல்லிக்காவல் :**

திருவாரூரிலிருந்து திருத்துறைப்பூண்டி மார்க்கத்தில் 15 கி.மீ தூரத்தில் உள்ளது. இறைவன் நெல்லிவன நாதர், ஆமலேஸர். இறைவி மங்களநாயகி ஆமலேஸ்வரி. தலமரம் - நெல்லி, சம்பந்தர், அப்பர், சுந்தரர் பாடியது.

தேவலோகத்தில் உள்ள கற்பகத்தரு, சந்தானத்தரு, அடிசந்தனத்தரு, மந்தாரத்தரு, பாரிசாதத்தரு, ஆகியவை செருக்குற்று துருவாசக முனிவரை மதிக்கத்தவறின. அவருடைய சாபத்திற்கு ஆளாகி நெல்லி மரங்களாய் இத்தல இறைவனுக்கு நிழல் தந்து சாபம் நீங்கப்பெற்றன. தக்கன் யாகத்தில் கலந்துகொண்ட சூரியன் தான் இழந்த பல்லையும், கண்ணையும், சந்திரன், தான் இழந்த ஒளியையும் இங்கு வழிபாடு செய்து பெற்றனர். சிவபெருமான் போலவே தனக்கும் 5 தலைகள் இருத்தலால் தானும் சிவபெருமானுக்கு நிகர் என கர்வம் கொண்ட பிரம்மாவின் ஒரு தலையைக் கொய்ததுடன் படைத்தல் தொழிலையும் சிவபெருமான் நீக்கினான். பிரம்மன் இத்தலத்திற்கு வந்து வழிபட்டு படைத்தல் தொழிலைப் பெற்றான் என்பது வரலாறு.

## திருத்தங்கூர் மற்றும் திருக்கொள்ளிக்காடு :

திருநெல்லிக்காவலிலிருந்து மேற்கே 2 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. இறைவன் அருள்மிகு வெள்ளி மலைநாதர் அருள்மிகு பெரியநாயகி சம்பந்தர், அப்பர், சுந்தரர் பாடியது. ஊழிக்காலத்தில் கடல் கோளால் அழியும்போது இத்தலம் மட்டும் அழியாமல் தேங்கி நின்றமையால் தேங்கூர் என்று பெயர் பெற்றது. திருமகள், பாண்டவர், பீஷ்மர், அசுர குரு, கோள்கள் வழிபட்டு பேறு பெற்றனர். அசுர குரு சுக்கிரன் வாம அவதாரத்தில் மாவலியிடம் மண் வேண்டியபோது மன்னனின் தாகத்தை தடுக்க வழி நீங்க இத்தலம் வழிபெற்று பாவ விமோசனம் பெற்றான். பக்கத்தில் 1கி.மீ தூரத்தில் திருக்கொள்ளிக்காடு தலம் உள்ளது. சம்பந்தர் பாடியது. சனீஸ்வரருக்கு (பொங்குசனி) தனி சந்நிதி உள்ளது. இத்தலத்தில் கூடினார்க்கு அருள் செய்பவர் கொள்ளிக்காடரே, என்பது சம்பந்தர் வாக்கு. இக்கோயிலை கற்கோயிலாக முதலாம் இராஜராஜசோழன் புதுப்பித்தார்.

## திருப்புகலூர் :

திருவாரூரிலிருந்து வடகிழக்கில் 18 கி.மீ. (12+6) உள்ளது. இந்த கோயில் வேளாக்குறிச்சி ஆதினம் நிர்வாகத்திற்கு உட்பட்டது. உயிர்கள் இறைவன் திருவடிகளை புகலாக அடைந்த ஊர். எனவே திருப்புகலூர் என்ற பெயர் பெற்றது. திருநாவுக்கரசர் சித்திரை சதய நாளில் இறைவனுடன் ஐக்கியமான தலம். முருகநாயனார் அவதாரத்தலம். சுந்தரருக்கு இறைவன் செங்கற்களைப் பொன்னாக மாற்றித்தந்த தலம். இறைவன் அக்னிபுரீஸ்வரர், சரன்யபுரிஸ்வரர் கோணப்பிரான். இறைவி சூலிகாம்பாள், கருந்தார்குழலி புன்னைமரம் அக்னிதீர்த்தம். மூவர் பாடல் பெற்ற தலம். திருப்புகலூர் கோயிலுக்குள்ளேயே வர்தமானிஸ்வரம் உள்ளது. இறைவன் வர்தமான லிங்கம் அம்பாள் மனோன்மணி சம்பந்தர் பாடல் பெற்றது.

திருப்புகலூரிலிந்து தென்கிழக்கே 3 கி.மீ தூரத்தில் வேளாக்குறிச்சி ஆதின அருளாட்சிக்கு உட்பட்ட திருச்சங்காட்டாங்குடி உள்ளது. சிறு தொண்டநாயனார் அவதாரத்தலம்.

**நன்னிலம் :**

திருவாரூரிலிருந்து 16 கி.மீ. வடமேற்கில் உள்ளது. ஸ்ரீ மதுவனேஸ்வரர், மதுவனநாயகி, பிரம்ம, சக்கரதீர்த்தம், வில்வமரம் சுந்தரர் பாடியது. கோச்சங்கட் சோழர் கட்டிய மாடக்கோயில். விருத்தாசூரன் கொடுமைக்கஞ்சி தேவர்கள் வழிபட இறைவன் தேவர்களை தேனீக்களாக மாற்றி அடைக்கலம் தந்தனர். தேனீக்காளக வழிப்பட்டால் "மதுவனம்" என்ற பெயரும் உண்டு. 14.9.2008 குடமுழுக்கு நடைபெற்றது.

**கேக்கரை (இராம கயை):**

திருவாரூரிலிருந்து வடகிழக்கே 2 கி.மீ. தொலைவில் உள்ளது. சுவாமி விஸ்வநாதர், கயா தீர்த்தம் மூதாதையர்களின் பிதிர் கடன்கள் தீர்த்தத்தில் செய்வார்கள். செய்நன்றி கெட்ட பேய் ஒன்று தீர்த்தத்தில் மூழ்கி மோட்சமடைந்தது. திருவாரூர் கோயில் நிர்வாகத்திற் குட்பட்டது. குடமுழுக்கு 5.9.2008-ல் நடைபெற்றது.

**திருவாரூர் குடமுழுக்கு நடைபெற்ற வருடங்கள்:**

1. 04.02.1945 திரு. எம்.ஏ. பாண்டியன் பிள்ளை, பி.ஏ., நிர்வாகஅதிகாரி
2. 04.04.1988 திரு எஸ். ஸ்ரீதரன், பி.ஏ., நிர்வாக அதிகாரி
3. 09.04.2001 திரு த. கஜேந்திரன், எம்.ஏ.,பி.எல்., நிர்வாக அதிகாரி.

**கட்டளைகள் :**

1. அபிஷேகக்கட்டளை
2. இராஜன்கட்டளை
3. அன்னதானக்கட்டளை
4. அர்த்தசாமக்கட்டளை
5. உள்துறைக்கட்டளை
6. விசு புண்யகாலக்கட்டளை
7. பாலாயிக்கட்டளை
8. பரிவட்டக்கட்டளை
9. கற்பூரக்கட்டளை
10. திருச்சாந்துக்கட்டளை
11. சுக்கிரவாரக்கட்டளை
12. சேதுபதிக்கட்டளை
13. வீதிவிடங்கன்கட்டளை

ஸ்ரீ தியாகராஜருக்கு நிலம் 1001 வேலி (6,500 ஏக்கர்) உள்ளது.

**மடங்கள் சத்திரங்கள் :**

சுந்திரமூர்த்தி நாயனார் மடம், வேளாக்குறிச்சி மடம், குருபூஜை மடம், நாட்டுக் கோட்டை நகரத்தார் மடம், கன்னியர் மடம், மேளம் வாசிப்பார் மடம், சோமநாத சுவாமி மடம், கந்தப்பச் செட்டி மடம், திருவாவடுதுறை ஆதீனக்கிளை மடம், பச்சையப்பர் சத்திரம் முதலியன.

**தியாகராஜருக்குரிய பதினாறு அங்கப் பொருள்கள் :**

| | | | |
|---|---|---|---|
| 1. | தண்டு | - | மணித்தண்டு |
| 2. | கொடி | - | தியாகக் கொடி |
| 3. | ஆசனம் | - | இரத்தினச் சிம்மாசனம் |
| 4. | மாலை | - | செங்கழுநீர்மாலை |
| 5. | வாள் | - | வீரகண்டயம் |
| 6. | நடனம் | - | அஜபா நடனம் |
| 7. | யானை | - | அயிராவணம் |
| 8. | மலை | - | அரதன சிருங்கம் |
| 9. | முரசு | - | பஞ்சமுக வாத்தியம் |
| 10. | நாதஸ்வரம் | - | பாரி |
| 11. | மத்தளம் | - | சுத்தமத்தளம் |
| 12. | குதிரை | - | வேதம் |
| 13. | நாடு | - | சோழநாடு |
| 14. | ஊர் | - | திருவாரூர் |
| 15. | ஆறு | - | காவிரி |
| 16. | பண் | - | பதினெண்பண் |
| | நட்சத்திரம் | - | விசாகம் |

**திருவாரூரைப் பற்றிய சிறப்புப் பாடல்கள் :**

1) **திருஞான சம்பந்தர்** தனது தேவாரத்தில் "சித்தந் தெளிவீர்காள்,
அத்தனாரூரைப் பத்தி மலர்தூவ, முத்தி யாகுமே.
துன்பந் துடைப்பீர்காள், அன்ப அனியாரூர் நன்பொன்
மலர்தூவ, இன்ப மாகுமே என்கிறார். மற்றும்,

தந்தையார் போயினார் தயாரும் போயினார், தாமும் போவார்
கொந்தவேல் கொண்டு ஒரு கூற்றத்தார் பார்க்கின்றார்
கொண்டு போவார்
எந்தநாள் வாழ்வதற்கே மனம் வைத்தியால் ஏழை நெஞ்சே
அந்தண் ஆரூர் தொழுது உய்யலாம் மையல் கொண்டு
அஞ்சல் நெஞ்சே என்கிறார்.

2) **திருநாவுக்கரசர்** - வானுலகத்தைவிட்டுத் திருவாரூர் மண்புகுந்த வகையை, ஆயிரம் தந்தங்களுடைய ஐராவணம் என்கிற சிறந்த வெள்ளை யானையின் மீது ஏறித் தேவர்களின் சிறப்பை விரும்பாமல், காளையின் மீது ஏறித் திருவாரூரை விரும்பி ஆளவந்தார் தியாக விநோதர் என்கிறார். (உயிராவணம்)

3) **சுந்தரமூர்த்தி சுவாமிகள்** - திருநாவலூரில் அவதரித்ததாலும் புகுந்தவீடாகிய திருவாரூரையே பிறந்த வீடாக்கிக் கொண்டதிலிருந்து ஆரூரின் அருமையும், பெருமையும்தெளிவாகிறது. சுந்தரர் பரவை நாச்சியாரை மணந்து பலகாலம் திருவாரூரில் வாழ்ந்திருக்கும் பேறு பெற்றவர். பிற தலங்களுக்குச் சென்ற போதும் கூடத் திருவாரூரானை மறக்கமுடியாமல் நினைத்து உருகியவர்.

"ஏழிசையாய் இசைப் பயனாய் இன்னமுதாய் என்னுடைய
தோழனுமாய் யான்செய்யுந் துரிசுகளுக் குடனாகி
மாழையொண்கண் பரவையைத்தந் தாண்டானை
மதியில்லா ஏழையேன் பிரிந்திருக்கேன் என் ஆரூர்
இறைவனையேஎன்பதால் விளங்குகிறது.

4) **மாணிக்கவாசகர்**- "ஆரூரைப் புகழ்ந்த வாயால் வேறொரூரைப் புகழமாட்டேன்." என்பதற்கிணங்க,
"ஓங்கெயில் சூழ் திருவாரூர் உடையானே அடியேன்
நின் பூங்கழல்கள் அவையல்லாது எவையாதும் புகழேனே
என்கிறார் திருவாசகத்தில்

5) உலக இன்பங்களின் கொள்களமாகத் திகழ்ந்ததை சேக்கிழார் பெருமான்" இன்பத் துறையுள் விரவுவார் சூழ்ந்த பல்வேறிடத்தர் செல்நகர் என்பர். திருவாரூரில் பிறந்த காரணத்தினாலேயே தண்டியடிகள் பெருமையும் தவமும் உடையவராகத் திகழ்கிறார் என்கிறார் சேக்கிழார்.

6) ஸ்ரீ குமர குரபர சுவாமிகள் - சோழர் ஆட்சியின் திருவாரூர்த் தேர் ஓரடி ஊர்ந்தால், ஓராயிரம் பொன் வாரி இறைக்கப் படுமாம். தேர் ஊர்ந்த செல்வத் தியாகனே எனக் குறிப்பிடுவார்.

7) தருமையாதீன முதல் குருவான ஞான சம்பந்தரின் குருவாக உள்ள கமலைஞானபிரகாசர் (கமலை என்றால் திருவாரூர்) தியாகராஜர்ப் பள்ளுவில், திருவாரூரானைப் போற்றுகிறார் கீழ்கண்ட தனிப் பாடல்களில் ஆரூர் பாராட்டப்படுகிறது.

## 8) நையாண்டிப் புலவர்

இவர் திருவாரூர்ப் பெருமையை மிக நயமாகப் பாடுகிறார். புற்றிடம் கொண்ட வன்மீகனைக் கொடிக்கம்பத்தில் கீழ் நின்று போற்றுபவர்களுக்குச் சொர்க்கம் பத்து அடிக்கு அப்பால், மோட்சம் பத்தடிக்குள்ளாகவே என்பது,

"ஆரூர்நாதன் கோவில் பொற்கம்பத்தடியில் நின்று
வன்மீகநாதனை யுன்னிப் போற்றினோர்க்குச் சொர்க்கம்
பத்து அடிக்கு அப்பால் மோட்சம் பத்தடியாகத்
தோன்றும் தானே" என்பர்.

பிறக்க முக்தி தரும் சொர்க்கத்தையும், மோட்சத்தையும் தனக்குள்ளே தாங்கி நிற்கும் விதத்தினை வெளிப்படுத்தும் திறன் வியக்கத்தக்கது.

**9) கவிராஜர் காளமேகம் :**

ஆரூர் தியாகேசனைப் பாடும்போது பிரம்மா திருமாலுக்கு அறிவுரை வழங்குகிறார். ஏ பிரம்மா, திருமாலே அன்னப் பறவையாகவும், பன்றியாகவும், வடிவெடுத்துப் போனீர்களே உங்களால் எம்பெருமான் திருமுடியும், திருவடியும் பார்க்க முடிந்ததா? உங்களுக்குத் திறமை இருந்திருந்தால் திருவாரூர்ப் பரவை நாச்சியார் வீட்டு வாசற்படிக் கல்லாய்க் கிடந்திருந்தால் சுந்தரமூர்த்திக்காகத் தூது சொல்ல வரும் எம்பிரான் அடி, முடியைப் பார்த்திருக்கலாம். தவறவிட்டீர்கள்

**ஆனார் இலையே அயனும் திருமாலும்,
காணார் அடிமுன் காண்பதற்கு
மேனாள் இரவு திருவாரூரில் எந்தைபிரான்
சென்ற பரவை திருவாயிற்படி"** என்கிறார்.

மேலும், காளமேகம் ஆரூரானை வஞ்சகப் புகழ்ச்சியாக, தியாகேசனே தரையில் பாதம் பாவாது, ஓயாது நீ ஆடிக்கொண்டிருப்பதன் ரகசியம் எனக்கு புரிந்துவிட்டது. மற்றவர்கள் அதனை அஜபா நடனம் என்று பார்த்து ரசிக்கிறார்கள். எனக்கல்லவா அதன் உண்மை புரியும். சுந்தரருக்காக நீ ஒரு முறையா தூது போனாய்? இருமுறை யல்லவா தூது போனாய்? இப்படி நீ ஓயாமல் தூது போய்க் கொண்டிருந்தால் உன்னால் எப்படி நிற்க முடியும்? நீ ஆடிக் கொண்டுதான் இருக்க வேண்டும் எனக் கேட்கிறார். தனது தனிப்பாடலில்.

**"திருந்தாடு அரவணையும் தென் கமலை ஈசர்,
இருந்தாடா தென்செய் திடுவார் பொருந்த
ஒரு காலே அல்லவே ஓண்டொடிக்கா வன்று
இருகாலும் சந்து போனால்"** என்பார்.

**10) இராமசாமிக் கவிராயர் :**

தியாகேசன் பெரும்புகழைப் போற்றிப் புகழ்வதோடு வேறு வேறு தெய்வங்களையும், கிண்டலும் கேலியும் செய்கிறார். பலவகையான வாகனங்களில் ஏறித் திரியும் வேறு வேறு தெய்வங்களே! நீங்கள் ஏன் சும்மா அலட்டிக் கொள்கிறீர்கள்! குருமூர்த்தியாய் வந்து வினையொழிக்கும் திருவாரூர்த் தியாகேசனைப் போல் உங்களால் நற்கதியைக் காட்ட முடியுமா? நீங்கள் ஏன் தேவையில்லாமல் திரிகிறீர்கள். நீங்கள் சும்மா திரிகின்ற திரி மூர்த்திகளே தவிர ஆரூரானைப் போலத் திருமூர்த்தியாக முடியுமா? என்கிறார்.

**"குருமூர்த்தமாய் வந்து வினையொழித்து**
**முக்திதனைக் கொடுக்கத் தியாகர்**
**ஒரு மூர்த்தியில்லாமல் மற்றுமொரு**
**மூர்த்தங்களு முண்டோ? நெஞ்சமே!"**
**திருமூர்த்தி என்பார்கள், அவரவர்**
**வாகனம் ஏறி சேறிற் சும்மா,**
**திரிமூர்த்தி அல்லாமல், ஒரு மூர்த்தியும்**
**கதியில் சேர்ந்திடாரே**

என்கிறார் இதில் திருவாரூர் சிறப்பும் உள்ளது.

**11) மகாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளை.**

ஆரூர்ப் பெருமானே முன்பொருகால் சுந்தரருக்காகத் தூதுவனாக மண்தோய நடந்து சென்றாயே, அதுபோல இனி செல்லக் கூடாது. அப்படிச் செல்வதானால் என் முதுகில் மேல்தான் ஏறிக் கொண்டு செல்ல வேண்டும் என்று சொல்வது போல நந்தியம் பெருமான் நின்று கொண்டிருக்கிறாராம். மற்ற கோயில்களில் இருந்த கோலத்தில் இருக்கும் நந்தி ஆரூரில் மட்டும் நின்ற கோலத்தில் இருக்கும் ரகசியம்.

**"பிணை அடியர் குறைக்கிரங்கிப் பெருமான் நீ எழுந்தருளின் துணையடிகள் கன்றமனம் தூது சென்றார் போல் உடையா(து) அணைகுறியென் வெரிநிவர்ந்தென்று நின் நோக்கி நிற்பது போல் இணையில் விடங்கப் பெருமான் எதிர் நிற்கும் மால்விடையே"** என்றவாறுப் பேசப்படுகிறது.

**12) வடலூர் வள்ளலார் ராமலிங்க அடிகள் :**

வைணவத்தின் 12 ஆழ்வார்கள் ஒருவர் கூடத் திருவாரூரைப் பற்றிப் பாடவில்லையே என்கிற குறையிருக்கிறது. அப்படிப் பாடியிருந்தால் திருவாரூர் ஒரு திவ்ய தேசமாக இருக்கும். இந்தக் குறை நீங்க வடலூர் வள்ளலார் ஆரூர்ப் பெருமானைத் திருமாலாகப் பாவித்துப் பாடுகிறார் திருவாரூர்ப் பதிகத்தில் அவர்,

**"மணியாறு கண்டத்து எண்டோள் செவ்வண்ண பவளமாலையே அணியால் விளங்கும் திருவாரூர் ஆராவமுது"**

என்று பாடுகிறார் பவளமாலை என்ற சொல்லும், ஆராவமுது என்ற சொல்லும் ஆழ்வார்கள் கையாள்வது, வள்ளலார் தியாகேசனைத் திருமாலாகப் பார்ப்பதால் திருவாரூரும் திவ்ய தேசமாகிறது.

## 13) பெரியபுராணம் :

திருவாரூர்ப் பெருமையினையும், புகழையும் பக்திச் சுவை சொட்டப் பாடிய சேக்கிழார் பெருமான்,

**"திருவாரூர்ப் பிறந்தார்கள் திருத்தொண்டு தெரிந்துணர ஒருவாயால் சிறியனால் உரைக்கலாம் தகைமையதோ"**

என்று பாடிய பின் வேறு யாரால் உணர்த்த முடியும்?

## திருமுறைகளும் பிற சிறப்புப் நூல்களும் :

### சமயக் குரவர்கள்

| | | |
|---|---|---|
| 1. | திருஞானசம்பந்தர் பாடல்கள் | 55 |
| 2. | அப்பர் பாடல்கள் | 208 |
| 3. | சுந்தரர் பாடல்கள் | 87 |
| 4. | மாணிக்கவாசகர் பாடல்கள் | 3 |
| 5. | பூந்துருத்தி நம்பிகாட நம்பி திருவிசைப்பா | 3 |
| | திருப்பல்லாண்டு (சேந்தனார்) | 3 |
| 6. | அருணகிரி நாதர் திருப்புகழ் | 3 |

7. திருவருட்பா (II திருமுறை) வடலூர் வள்ளலார் இராமலிங்கஅடிகள் மற்றும் மனு முறை கண்ட வாசகம்
8. பதினோராம் திருமுறை சேரமான் பெருமாள் இயற்றிய திருவாரூர். மும்மணிக் கோவை.
9. பட்டினத்தார் பாடிய மனுநீதி வாசகம்
10. திருவாரூர் கமலாலயம் சிறப்பு :
    சிதம்பரம் மறைஞான சம்பந்தர் கி.பி. 1547ல் இயற்றிய (கமலாலய மகாத்மியம் வடமொழி என்பதன் சிறப்பு)

## 11. திருவாரூர் புராணம் :

நிரம்ப அழகிய தேசிகர் மாணாக்கர் அளகை சம்பந்தர் கி.பி. 1592 இல் இயற்றியது (நாகர் கண்டமென்னும் வடமொழி நூல் மொழி பெயர்ப்பு)

**12. தேரூர்ந்த சோழ புராணம் :**
*மனுநீதி கண்ட சோழன் வரலாறு.*

**13. தியாகராஜர்லீலை :**
*திரிசிரபுரம் மகாவித்வான் ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளை கி.பி.1845 -ல் தியாகராசப் பெருமானின் 364 லீலைகளில் முதல் 13 லீலைகளையும் 14 -வது லீலையின் முற் பகுதியும் உடையது.*

**14. திருவாரூர் நான்மணிமாலை :**
*ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் இயற்றியது.*

a. பிட்சாண்டார் கோயில் இராஜகோபால் பிள்ளை வெளியிட்ட "தியாகராஜர் லீலை" 1 முதல் 364 வரை. (சென்னை உ.வே.ச. நூல்நிலையத்தில் கிடைக்கும்.)

b திருவோத்தூர் பானுகவி எழுதிய திருவாரூர் புராண வசனம்.

**15. தியாகராஜர் பள்ளு :** *16 - ஆம் நூற்றாண்டில் கமலை ஞானப்பிரகாசர் இயற்றியது.*

**16. தியாகராஜர் குறவஞ்சி :** *17 - ஆம் நூற்றாண்டில் ஏற்பட்டது.*

**17. திருவாரூர் நான்மணிமாலை :** *இலக்கணவிளக்கம். இயற்றிய திருவாரூர் வைத்தியநாத தேசிகர் இயற்றியது.*

**18. திருவாரூர் ஒருதுறைக் கோவை :**
*400 செய்யுள்கள். கீழவேளூர் குருசாமி தேசிகர் பாடியது.*

**19. கமலாம்பிகை பிள்ளைத் தமிழ்**
*(தருமை ஆதின சிதம்பர முனிவர்)*

**20. திருவாரூர் உலா :** *அந்தகக் கவி வீரராகவ முதலியார் இயற்றியது.*

**21. திருவாரூர்க் கோவை :** *கி.பி.14 - ம் நூற்றாண்டு சைவ எல்லப்ப நாவலர் இயற்றியது.*

**22. கமலாம்பிகை மாலை**

**23. தியாகராசர் கழிநெடில்**

**24. தியாகவசந்த கலிப்பா**

**25. காளமேகப்புலவர் தனிப் பாடலாக இயற்றியது.**

**26. பெரிய புராணம் உரை எழுதியவர் திருவாரூர் திரு.வி.க.**

*மேற்கண்ட பாடல்கள் ஆரூர்ப் பூங்கோயில் பற்றிப்பாடியவை. அதுமட்டுமன்றி.*

(1) திருவாரூர் அரனெறிகோயில் என்று வழங்கும் அசலேஸ்வரர்,

(2) திருவாரூர் கீழவீதி பரவையுண் மண்டளியும் பாடல் பெற்ற கோயிலாகும். முறையே அப்பர் சுந்தரர் பாடியது.

திருவாரூர் தமிழ்மொழி அல்லாமல் பிற மொழி களான வட தெலுங்கு, மராத்தி போன்ற மொழிகளிலும் தலவரலாறு இடம் பெற்றுள்ளன.

1. அஜபாரகசியம்
2. ஆடகேஸ்வரர் மஹாமாத்தியம்
3. கமலாலய மஹாமாத்தியம்
4. தியாகராஜ லீலை மஹாமாத்தியம்.
5. சமற்காரபுர மான்மியம்
6. தேவையாகபுரம் மாண்மியம்
7. முசுகுந்த மாண்மியம்
8. இராமகயா மாண்மியம்
9. ஸ்ரீபுர மாண்மியம்
10. ஸகந்த புராணம்
11. சோத்தாரபுர மாண்மியம்
12. முசுகுந்த சகஸ்கர நாமம் (பிச்சாண்டார் கோவில் ஜமீன் ராஜகோபால் பிள்ளை வெளியிட்டுள்ளார் சென்னை அடையாரில் உ.வே.ச. நூல் நிலையத்தில் கிடைக்கும்.)
13. தியாகராஜ அஷ்டகம்
14. கமலாம்பாள் அஷ்டகம்
15. முத்துசாமி தீட்சிதரின் நவாபரண கீர்த்தனை.

தஞ்சை மன்னன் சகாஜியால் இயற்றப்பட்ட தெலுங்கு நூல்களான,

1. தியாகப்பதம்லு
2. பஞ்சரத்தின பிரபந்தம்
3. சங்கர பல்ஜிசேவா பிரபந்தம்
4. சங்கரகாளி நடன சம்வாரம் என்பனவும்,

மராத்திய மொழியில் இராம பண்டிதர் இயற்றிய,

1. தியாகேச மஹாபத்மம்
2. தியாகேசராஜ விலாசா
3. தியாகராஜா தியானா
4. கமலாலய மஹாமத்திய

தியாகேச ஸ்வா ஆஹமொத்தியான என்ற நூல்களும் தலப்பெருமை வாய்ந்தனவாக உள்ளன.

# பதிகங்கள்

**அருள்மிகு விநாயகர் துதி :**

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்
புந்தி யில் வைத்தடி போற்றுகின்றேனே.

## தமிழ் முதல் வேதம் - திருஞானசம்பந்தர்

பிடியதன் உருஉமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவர் இடர்
கடி கணபதி வர அருளினன் மிகு கொடை
வடிவினர் பயில்வலி வலம் உறை இறையே

சித்தம் தெளிவீர்காள், அத்தன் ஆரூரைப்
பத்தி மலர்தூவ, முத்தியாகுமே
பிறவி அறுப்பீர்காள் அறவன் ஆரூரை
மறவா தேத்துமின், துறவியாகுமே

துன்பம் துடைப்பீர்காள், அன்பன் அணி ஆரூர்
நன்பொன் மலர்தூவ இன்பமாகுமே
உய்யஉறுவீர்காள், ஐயன் ஆரூரைக்
கையினால் தொழ, நையும் வினைதானே

அரக்கன் ஆண்மையை நெருக்கினான் ஆரூர்
கரத்தினரல் தொழதிருத்தம் ஆகுமே
சீரூர் சம்பந்தன், ஆரூரைச் சொன்ன
பாரூர் பாடலார், பேறார் இன்பமே

சோலையில் வண்டினங்கள் சுரும்போடு இசைமுரலச் சூழ்ந்த
ஆலையின் வெம்புகை போய்முகில் தோயும் ஆரூரில்
பாலோடு நெய்தயிரும் பயின்றாடும் பரமேட்டி பாதம்
காலையும் மாலையும் போய்ப் பணிதல் கருமமே.

## தமிழ் இரண்டாம் வேதம்

(திருஞானசம்பந்தர் (திருவாரூர்)

தந்தை தாய் தன்னுடன் தோன்றினார் புத்திரர் தாரமென்னும்
பந்தம் நீங்காதவற்கு உய்ந்து போக்கி லெனப்பற்றினாயே
வெந்த நீறாடிய ராதியார் சோதி யார் வேதகீதர்
எந்தை ஆரூர்த் தொழுது உய்யலாம் மையல் கொண்டு அஞ்சல் நெஞ்சே

## கோளறு பதிகம் (2ம் திருமுறை)

1. வேயுறு தோளிபங்கன் விடமுண்டகண்டன்
மிக நல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை முடிமேலணிந்தென்
உள்மே புகுந்த அதனால்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி
சனிபாம்பு இரண்டும் உடனே
ஆசறு நல்லநல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே

2. என்பொடு கொம் பொடாமை யிவைமார்பிலங்க
எருதேறி யேழையுடனே
பொன்பொதி மத் தமாலை புனல்சூடி வந்தென்
உளமே புகுந்த அதனல்
ஒன்பதொடொன்றோடேழு பதினெட்டோடாறு
உடனாயநாள்களவைதாம்
அன்பொடு நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே.

3. உருவளர் பவளமேனி ஒளி நீறு அணிந்து
உமையோடும் வெள்ளைவிடை மேல்
முருகலர்கொன்றை திங்கள் முடிமேலணிந்தென்
உளமே புகுந்த அதனால்
திருமகள் கலையதூர்தி செயமாதுபூமி
திசை தெய்வமானபலவும்
அருநெறி நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே.

4. மதி நுதல் மங்கையோடு வடபாலிருந்து
மறை ஓதும் எங்கள் பரமன்
நதியோடு கொன்றைமாலை முடி மேலணிந்தென்
உளமே புகுந்த அதனால்
கொதி யுறுகாலனங்கி நமனோடு தூதர்
கொடு நோய்களானபலவும்
அதி குணம் நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே.

5. நஞ்சு அணி கண்டன் எந்தை மடவாள் தனோடும்
   விடையேறும் எங்கள் பரமன்
துஞ்சிருள் வன்னிகொன்றை முடிமேலணிந்தென்
   உளமே புகுந்த அதனால்
வெஞ்சின அவுணரோடும் உரும் இடியும் மின்னும்
   மிகையானபூதம் அவையும்
அஞ்சிடும் நல்ல நல்ல அவை நல்ல நல்ல
   அடியாரவர்க்கு மிகவே

6. வாள்வரி அதளது ஆடை வரிகோவணத்தர்
   மடவாள்தனோடும் முடனாய்
நாண்மலர் வன்னி கொன்றை நதி சூடி வந்தென்
   உளமே புகுந்த அதனால்
கோளரி உழுவையோடு கொலை யானை கேழல்
   கொடு நாக மோடு கரடி
ஆளரி நல்லநல்ல அவை நல்ல நல்ல
   அடியாரவர்க்கு மிகவே.

7. செப்பிள முலைநன் மங்கை ஒரு பாகமாக
   விடைஏறு செல்வன் அடைவார்
ஒப்பிள மதியு மப்பும் முடி மேல ணிந்தென்
   உளமே புகுந்த அதனால்
வெப்பொடு குளிரும் வாதம் மிகையான பித்தும்
   வினையான வந்து நலியா
அப்படி நல்ல நல்ல அவை நல்ல நல்ல
   அடியாரவர்க்கு மிகவே.

8. வேள்பட விழிசெய்தன்று விடைமேலிருந்து
   மடவாள் தனோடு முடனாய்
வாண்மதி வன்னி கொன்றை மலர்சூடி வந்தென்
   உளமே புகுந்த அதனால்
ஏழ்கடல் சூழ் இலங்கை யரையன்றனோடும்
   இடரானவந்து நலியா
ஆழ்கடல் நல்லநல்ல அவைநல்ல நல்ல
   அடியா ரவர்க்கு மிகவே.

9. பலபல வேடமாகும் பரனாரி பாகன்
பசுவேறு மெங்கள் பரமன்
சலமகளோ டெருக்கு முடி மேலணிந்தென்
உளமே புகுந்த அதனால்
மலர்மிசையோனுமாலும் மறையோடு தேவர்
வருகாலமானபலவும்
அலைகடல் மேரு நல்ல அவை நல்லநல்ல
அடியாரவர்க்கு மிகவே.

10. கொத்தலர் குழலியோடு விசயற்கு நல்கு
குணமாயவேடவிகிர்தன்
மத்தமு மதியும் நாகம் முடிமேலணிந்து என்
உளமே புகுந்த அதனால்
புத்தரொடு அமணைவாதில் அழிவிக்கும் அண்ணல்
திருநீறு செம்மை திடமே
அத்தகு நல்லநல்ல அவை நல்லநல்ல
அடியாரவர்க்கு மிகவே.

11. தேனமர் பொழில்கொள் ஆலை விளைசெந்நெல்துன்னி
வளர் செம்பொனெங்கும் நிகழ
நான்முகனாதி யாயபிரமாபுரத்து
மறைஞான ஞான முனிவன்
தானுறுகோளும் நாளும் அடியாரை வந்து
நலியாத வண்ணம் உரைசெய்
ஆனசொல்மாலை ஓதும் அடியார்கள் வானில்
அரசாள்வர் ஆணை நமதே.

## (இரண்டாம் திருமுறை) திருஞான சம்பந்தர் திருநீற்றுப்பதிகம்

1. மந்திரம் ஆவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தரம் ஆவது நீறு துதிக்கப்படு வது நீறு
தந்திரம் ஆவது நீறு சமயத்தில் உள்ளது நீறு
செந்துவர்வாய் உமைபங்கன்திரு ஆலவாயான்திருநீறே

2. முத்தித் தருவது நீறு முனிவர் அணிவது நீறு
சத்தியம் ஆவது நீறு தக்கோர் புகழ்வது நீறு
பத்தி தருவது நீறு பரவஇ னியது நீறு
சித்தி தருவது நீறு திரு ஆலவாயான் திருநீறே.

## தமிழ் மூன்றாம் வேதம் - திருஞானசம்பந்தர் திருவாரூர்

கருத்தனே கருதார்புர மூன்றெய்த
ஒருத்தனே உமையாள் ஒரு கூறனே
திருத்தனே திருவாரூர் எம் தீவண்ண
அருத்த என் எனை அஞ்சல் என்னாததே

## சிற்றேமம் (சித்தாய்மூர்)

1. வானார் திங்கள் வாள்முக மாதர் பாடவார் சடைக்
   கூனார் திங்கள் சூடியோ ராடல்மேய கொள்கையான்
   தேனார் வண்டு பண்செயுந் திருவாருஞ்சிற்றேமத்தான்
   மானார் விழிநன் மாதோடும் மகிந்த மைந்தனல்லனே. 3-42-5

2. காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
   ஓதுவார் தமை நன்னெறிக்கு உய்ப்பது
   வேதம நான்கினு மெய்ப்பொருள் ஆவது
   நாதன்நாமம் நாமச்சி வாயவே.

## 3-ம் திருமுறை - திருக்கழுமலம்

மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணில் நல்ல கதிக்கு யாதுமோர்குறைவிலைக்
கண்ணின் நல் அஃதுறுங் கழுமல வளநகர்ப்
பெண்ணில் நல்லாளொடு ம் பெருந்தகை இருந்ததே.

## தமிழ் நான்காம் வேதம் (திருநாவுக்கரசர்) திருவாரூர்

மெய்யெல்லாம் வெண்நீறு சண்ணித்த மேனியான் தாள் தொழாதே
உய்யலாம் என்று எண்ணி உறி தூக்கி உழிதந்தென் உள்ளம் விட்டுக்
கொய்யுலா மலர்ச் சோலைக் குயில்கூவ மயிலாலும் ஆரூரைக்
கையினால் தொழாது ஒழிந்து கனியிருக்கக் காய்கவர்ந்த கள்வனேனே.

பூங்கழல் தொழுதும், பரவியும் புண்ணியா புனிதா உன்பொற்கழல்
ஈங்கு இருக்கப் பெற்றேன் என்ன குறையுடையேன்
ஓங்கு தெங்கு இலையார்கமுகு இளவாழை மாவோடு மாதுளம்பல
தீங்கனி சிதறும் திருவாரூர் அம்மானே.

## திருக்கொண்டீஸ்வரம்

பாலனாய்க் கழித்த நாளும் பனிமலர் கோதைமார்தம்
மேலனாய்க் கழித்த நாளும் மெலிவோடு மூப்பு வந்து
கோலனாய்க் கழித்த நாளும் குறிக்கோளிலாது கெட்டேன்
சேலுலாம் பழனவேலித் திருக்கொண்டீ சுரத்துள்ளானே.

## திருவேகம்பம்

கருவுற்ற நாள் முதலாக உன் பாதமே காண்பதற்கு
உருகிற்று என் உள்ளமும் நானும் கிடந்து அலந்து எய்த்தொழிந்தேன்
திருவொற்றியூரா திருஆலவாயா திருஆரூரா
ஒருபற்று இலாமையும் கண்டு இரங்காய் கச்சி ஏகம்பனே.

## தமிழ் நான்காம் வேதம் (அப்பர்)

நணியார் சேயார் நல்லார் தீயார் நாடோறும்
பிணி தான் தீரும் என்று பிறங்கிக் கிடப்பாரும்
மணியே பொன்னே மைந்தா மணாளா என்பார்க்கு
அணியார் ஆரூர் ஆதிரை நாளால் அதுவண்ணம்.

## தமிழ் ஐந்தாம் வேதம் (திருநாவுக்கரசர்)

வண்டு உலாம் மலர் கொண்டு வளர்சடைக்கு
கிண்டை மாலை புனைந்தும் இராப்பகல்
தொண்டர் ஆகித் தொடர்ந்து விடாதவர்க்கு
அண்டம் ஆளவும் வைப்பர் ஆரூரரே

## தமிழ் ஆறாம் வேதம்
## திருத்தாண்டகம் - திருநாவுக்கரசர் - திருவாரூர்

1. முன்னம் அவனுடையநாமங் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணங்கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சி யானாள்
அன்னையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தைத்
தன்னை மறந்தாள் தன்நாமம் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே.

2. ஒருவனாய் உலகேத்த நின்ற நாளோ
ஓருருவே மூவுருவமான நாளோ
கருவனாய்க் காலனைமுன் காய்ந்த நாளோ
காமனையுங் கண்ணழலால் விழித்த நாளோ
மருவனாய் மண்ணும் விண்ணுந் தெரித்த நாளோ
மான்மறிக்கை யேந்தி யோர் மாதோர் பாகந்
திருவினாள் சேர்வதற்கு முன்னோ பின்னோ
திருவாரூர் கோயிலாகக் கொண்ட நாளே.

3. நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலை இல்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோம் அல்லோம்
இன்பமே எந்நாளும் துன்பமில்லை
தாமார்க்கும் குடியல்லாத் தன்மையான
சங்கரன்நற்சங்க வெண்குழையோர்காதிற்
கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
கொய்மலர்ச் சேவடியிணையே குறுகி னோமே.

4. பிறப்போடு இறப்பு என்றும் இல்லாதான்காண்
பெண்ணுருவோடு ஆணுருவாய் ஆயினான்காண்
மறப்படுமென் சிந்தை மருள் நீக்கினான்காண்
வானவரும் அறியாத நெறி தந்தான்காண்
நறப்படு பூமலர்தூபம் தீபம் நல்ல
நறும் சாந்தம் கொண்டு ஏற்றி நாளும் வானோர்
சிறப்போடு பூசிக்கும் திருவாருரில்
திருமூலட்டானத் தென் செல்வன்தானே.

5. உயிராவணம் இருந்து உற்றுநோக்கி
உள்ளக் கிழியின் உருஎழுதி
உயிராவணம் செய்திட்டு உன்கைத்தந்தால்
உணரப்படு வாரோடு ஒட்டிவாழ்தி
அயிராவணம் ஏறாதே ஆனேறு ஏறி
அமரர் நாடாளாதே ஆரூர் ஆண்ட
அயிராவணமே என் அம்மானே நின்
அருட்கண்ணால் நோக்காதார் அல்லாதாரே

6. பற்றி நின்ற பாவங்கள் பாற்றவேண்டில்
பரகதிக்குச் செல்வது ஒரு பரிசு வேண்டில்
சுற்றிநின்ற சூழவினைகள் வீழ்க்க வேண்டில்
சொல்லுகேன் கேள்நெஞ்சே துஞ்சா வண்ணம்
உற்றவரும் உறுதுணையும் நீயே என்றும்
உன்னை அல்லால் ஒரு தெய்வம் உள்கேன் என்றும்
புற்றரவக் கச்சு ஆர்த்த புனிதா என்றும்
பொழில் ஆரூரா என்றே போற்றா நில்லே!

## திருப்புகலூர்

எண்ணுகேன் என் சொல்லி எண்ணுகேனோ
    எம்பெருமான் திருவடியே எண்ணில் அல்லால்
கண்ணிலேன் மற்றோர்களை கண் இல்லேன்
    கழலடியே கை தொழுது காணின் அல்லால்,
ஒண்ணுளே ஒன்பது வாசல் வைத்தாய்
    ஒக்க அடைக்கும் போது உணரமாட்டேன்,
புண்ணியா உன்னடிக்கே போது கின்றேன்
    பூம்புகலூர் மேவிய புண்ணியனே

### திருத்தாண்டகம் ஆறாம் திருமுறை – (அப்பர்)

### தியாகராஜ சுவாமி வழிபாடு – தமிழ் அர்ச்சனை

1. *கற்றவர்கள் உண்ணும் கனியே போற்றி!*
    *கழல் அடைந்தார் செல்லும் கதியே போற்றி!*
*அற்றவர்கட்கு ஆர் அமுதம் ஆனாய் போற்றி!*
    *அல்லல் அறுத்து அடியேனை ஆண்டாய் போற்றி!*
*மற்று ஒருவர் ஒப்பில்லாமைந்தா போற்றி!*
    *வானவர்கள் போற்றும் மருந்தே போற்றி!*
*செற்றவர்தம் புரம் எரித்த சிவனே போற்றி!*
    *திருமூலட்டானனே போற்றி! போற்றி!*

2. *வங்கமலி கடல் நஞ்சம் உண்டாய்போற்றி!*
    *மதயானைஈருரிவை போர்த்தாய் போற்றி!*
*கொங்கு அலரும் நறும் கொன்றைத் தாராய் போற்றி!*
    *கொல்புலித்தோல் ஆடைக் குழகா போற்றி!*
*அங்கணனே அமரர்கள் தம் இறைவா போற்றி!*
    *ஆல மரநிழல் அறம் சொன்னாய் போற்றி!*
*செங்கனகத் தனிக் குன்றே சிவனே போற்றி!*
    *திருமூலட்டானனே போற்றி போற்றி!*

3. *மலையான்மடந்தை மணாளா போற்றி!*
    *மழவிடையாய் நின்பாதம் போற்றி போற்றி !*
*நிலையாக என் நெஞ்சில் நின்றாய் போற்றி!*
    *நெற்றி மேல் ஒற்றைக் கண்ணுடையாய் போற்றி!*
*இலையார்ந்த மூவிலை வேல் ஏந்தி போற்றி!*
    *ஏழ்கடலும் ஏழ் பொழிலும் ஆனாய்போற்றி!*
*சிலையால் அன்று யெயிலெரித்த சிவனே போற்றி!*
    *திருமூலட்டானனே போற்றி போற்றி!*

4. பொன்னியலும் மேனியனேபோற்றி போற்றி!
பூதப் படையுடையாய் போற்றி போற்றி!
மன்னியசீர்மறை நான்கும் ஆனாய் போற்றி!
மறியேந்து கையானே போற்றி போற்றி!
உன்னுவமர்க்கு உண்மையனே போற்றி போற்றி
உலகுக் கொருவனே போற்றி போற்றி
சென்னிமிசை வெண் பிறையாய்போற்றி ! போற்றி!
திருமூலட்டானனே போற்றி! போற்றி!

5.. நஞ்சுடையகண்டனே போற்றி போற்றி!
நற்றவனே நின்பாதம் போற்றி போற்றி!
வெஞ்சுடரோன்பல் இறுத்த வேந்தே போற்றி!
வெண்மதி அம் கண்ணி விகிர்தா போற்றி!
துஞ்சு இருளில் ஆட உகந்தாய் போற்றி!
தூநீறு மெய்க் கணிந்த சோதி போற்றி!
செஞ்சடையாய்நின்பாதம் போற்றி போற்றி!
திருமூ லட்டானனே போற்றி போற்றி!

6. சங்கரனேநின் பாதம் போற்றி போற்றி!
சதாசிவனே நின்பாதம் போற்றி போற்றி!
பொங்கரவா நின்பாதம் போற்றி போற்றி!
புண்ணியனே நின்பாதம் போற்றி போற்றி!
அங்கமலத்து அயனோடு மாலும் காணா
அனல் உருவாநின்பாதம் போற்றி போற்றி!
செங்கமலத் திருப்பாதம் போற்றி போற்றி!
திருமூலட்டானனே போற்றி போற்றி!

7. வம்புலவு கொன்றைச் சடையாய் போற்றி
வான்பிறையும் வாளரவும் வைத்தாய் போற்றி!
கொம்பு அனையநுண் இடையாள் கூறா போற்றி!
குரைகழலாற் கூற்றுதைத்த கோவே போற்றி
நம்பும் அவர்க்கு அரும் பொருளே போற்றி போற்றி!
நால் வேதம் ஆறங்கமானாய் போற்றி!
செம்பொனே - மரகதமே மணியே போற்றி!
திருமூலட்டானனே போற்றி போற்றி!

8. உள்ளமாய் உள்ளத்தே நின்றாய் போற்றி!
உகப்பார் மனத்து என்றும் நீங்காய் போற்றி!
வள்ளலே போற்றி! மணாளா போற்றி!
வானவர் கோன்தோள்துணித்த மைந்தா போற்றி!
வெள்ளையே ஏறும் விகிர்தா போற்றி!
மேலோர்க்கும் மேலோர்க்கும் மேலாய்போற்றி!
தெள்ளுநீர்க் கங்கைச் சடையாய் போற்றி!
திருமூலட்டானனே போற்றி போற்றி!

9, பூவார்ந்த சென்னிப் புனிதா போற்றி!
புத்தேளிர் போற்றும் பொருளே போற்றி!
தேவார்ந்த தேவர்க்குத் தேவே போற்றி!
திருமாலுக்கு ஆழி அளித்தாய்போற்றி!
சாவாமே காத்து என்னை ஆண்டாய் போற்றி!
சங்கொத்த நீற்று எம் சதுரா போற்றி!
சேவார்ந்த வெல் கொடியாய் போற்றி போற்றி!
திருமூலட்டானனே போற்றி போற்றி!

10. பிரமன் தன் சிரம் அரிந்த பெரியோய் போற்றி!
பெண் உருவோடு ஆண் உருவாய் நின்றாய் போற்றி!
கரம் நான்கும் முக்கண்ணும் உடையாய் போற்றி!
காதலிப்பார்க்கு ஆற்ற எளியாய் போற்றி!
அருமந்த தேவர்க் கரசே போற்றி!
அன்று அரக்கன் ஐந்நான்கு தோளுந்தாளும்!
சிரம் நெரித்த சேவடியாய்போற்றி போற்றி!
திருமூலட்டானனே போற்றி போற்றி!

## தமிழ் ஏழாம் வேதம் (சுந்தரர்)

1. கட்டமும் பிணியும் களைவானைக்
காலற் சீறியகால் உடையானை
விட்டவேட்கை வெந்நோய் களைவானை
விரவினால் விடுதற் கரியானை
பட்ட வார்த்தை படநின்ற வார்த்தை
வாராமே தவிரப் பணிப்பானை
அட்டமூர்த்தியை மட்டவீழ் சோலை
ஆரூரானை மறக்கலுமாமே.

2. செத்தபோதி னில்முன்னின்று நம்மை
சிலர்கள் கூடிச்சிரிப்பதன் முன்னம்
வைத்த சிந்தையுண்டே மனமுண்டே
மதி யுண்டே விதியின் பயனுண்டே
முத்தன் எங்கள் பிரானென்று வானோர்
தொழ நின்ற திமில் ஏறுடையானை
அத்தன் எந்தை பிரான் எம்பிரானை
ஆரூரானை மறக்கலுமாமே.

3. நின்ற வினைக் கொடுமை நீங்க இரு பொழுதும்
துன்றுமலர் இட்டுச் சூழும் வலம் செய்து
தென்றல் மணம்கமழும் தென் திருவாரூர்புக்கு
என்றன்மனம் குளிர என்று கொல் எய்துவதே.

4. மீளா அடிமை உமக்கே ஆளாய்ப் பிறரை வேண்டாதே
மூளாத் தீப்போல் உள்ளேகனன்று முகத்தால் மிக வாடி
ஆளாய் இருக்கும் அடியார் தங்கள் அல்லல் சொன்னக்கால்
வாளாங்கிருப்பீர் திருவாரூரிர் வாழ்ந்து போதீரே.

## தம்பிரான் தோழர் சுந்தரர் அருளிய திருத்தொண்டத் தொகை

1. தில்லை வாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்
திருநீல கண்டத்துக்குக் குயவானர்க்கு அடியேன்
இல்லையேஎன்னாத இயற்பகைக்கும் அடியேன்
இளையான்றன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக்கு அடியேன்
விரி பொழில் சூழ் குன்றையர்விறன் மிண்டர்க்கும் அடியேன்.
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக்கு அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே.

2. இலைமலிந்த வேல் நம்பி எறிபத்தற்கு அடியேன்
ஏனாதி நாதன்தன் அடியார்க்கும் அடியேன்
கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பற்கு அடியேன்
கடவூரில் கலயன்தன் அடியார்க்கும் அடியேன்
மலைமலிந்த தோள்வள்ளல் மானக் கஞ்சாறன்
எஞ்சாத வாட்டாயன் அடியார்க்கும் அடியேன்
அலைமலிந்த புனல்மங்கை ஆனாயர்க்கு அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே.

3. மும்மையால் உலகாண்ட மூர்த்திக்கும் அடியேன்
முருகனுக்கும் உருத்திரபசுபதிக்கும் அடியேன்
செம்மையே திருநாளைப் போவார்க்கும் அடியேன்
திருக்குறிப்புத் தொண்டர்தம் அடியார்க்கும் அடியேன்
மெய்ம்மையே திருமேனி வழிபடாநிற்க.
வெகுண்டெழுந்த தாதைதாள் மழுவினால் எறிந்த
அம்மையான் அடிச்சண்டிப் பெருமானுக்கு அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே.

4. திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக் கரையன்றன் அடியார்க்கும் அடியேன்
பெருநம்பி குலச்சிறைதன் அடியார்க்கு அடியேன்
பெருமிழலைக் குறும்பர்க்கும் பேயார்க்கும் அடியேன்
ஒருநம்பி அப்பூதி அடியார்க்கும் அடியேன்
ஒலிபுனல் சூழ் சாத்தமங்கை நீலநக்கர்க்கு அடியேன்
அருநம்பி நமிநந்தி அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே.

5. வம்பறா வரிவண்டு மணம்நாற மலரும்
மதுமலர்நற் கொன்றையான் அடியலால் பேணா
எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்
ஏயர்கோன் கலிக்கம்பன் அடியார்க்கும் அடியேன்
நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன்
நாட்டமிகு தண்டிக்கும் மூர்க்கர்க்கும் அடியேன்
அம்பரான் சோமாசி மாறனுக்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே.

6. வார்கொண்ட வனமுலையாள் உமைபங்கன்கழலே
மறவாது கல்லெறிந்த சாக்கி யர்க்கும் அடியேன்
சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கும் அடியேன்
செங்காட்டாங்குடிமேய சிறுத்தொண்டர்க்கு அடியேன்
கார்கொண்ட கொடைக் கழறிற்றுஅறிவார்க்கும் அடியேன்
கடற்காழிக் கணநாதன் அடியார்க்கும் அடியேன்
ஆர்கொண்ட வேல் கூற்றன்களந்தைக் கோன் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே.

7. பொய்யடிமை யில்லாத புலவர்க்கும் அடியேன்
பொழிற்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழர்க்கு அடியேன்
மெய்யடியான் நரசிங்க முனையரையற்கு அடியேன்
விரிதிரை சூழ் கடல்நாகை அதி பத்தர்க்கு அடியேன்
கைதடிந்த விரிசிலையான் கலிக்கம்பன் கலியன்
கழல்சத்தி வரிஞ்சையர்கோன் அடியார்க்கும் அடியேன்
ஐயடிகள்காடவர்கோன் அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே.

8. கறைக்கண்டன் கழலடியே காப்புக் கொண்டிருந்த
கணம்புல்ல நம்பிக்கும் காரிக்கும் அடியேன்
நிறைக்கொண்ட சிந்தையான் நெல்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாறன் அடியார்க்கும் அடியேன்
துறைக் கொண்ட செம்பவளம் இருளகற்றுஞ் சோதித்
தொன்மயிலை வாயிலான் அடியார்க்கும் அடியேன்
அறைக்கொண்ட வேல்நம்பி முனையடு வாற்கு அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே.

9. கடல் சூழ்ந்த உலகெலாங் காக்கின்ற பெருமான்
காடவர் கோன் கழற்சிங்கன் அடியார்க்கும் அடியேன்
மடல் சூழ்ந்த தார்நம்பி இடங்கழிக்கும் தஞ்சை
மன்னவனாம் செருத்துணைதன் அடியார்க்கும் அடியேன்
புடைசூழ்ந்த புலியதன் மேல் அரவமாட ஆடி
பொன்னடிக்கே மனம் வைத்த புகழ்த்துணைக்கும் அடியேன்
அடல்சூழ்ந்த வேல்நம்பி கோட்புலிக்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே.

10. பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்
பரமனையே பாடுவார் அடியார்க்கும் அடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கும் அடியேன்
திருவாரூர்ப்பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்
முப்போதும் திருமேனி தீண்டுவார்க்கு அடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கும் அடியேன்
அப்பாலும் அடிச்சார்ந்த அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே.

11. மன்னியசீர் மறை நாவன்நின்றவூர்ப் பூசல்
வரிவளைவாள் மானிக்கும் நேசனுக்கும் அடியேன்
தென்னவனாய் உலகாண்ட செங்கணாற்கு அடியேன்
திருநீல கண்டத்துப் பாணனார்க்கு அடியேன்
என்னவனாம் அரனடியே அடைந்திட்ட சடையன்
இசைஞானிக் காதலன் திருநாவலூர்க்கோன்
அன்னவனாம் ஆரூரன் அடிமை கேட்டு உவப்பார்
ஆரூரில் அம்மானுக்கு அன்பர் ஆவாரே.

**தமிழ் எட்டாம் வேதம் (திருவாரூர்)**
**மாணிக்கவாசகர் (ஆரூரில் தான் ஞானம் பெற்றார்)**

*மருவாதவூரன் திருவாசக தமிழ்மாலை கொள்ளக்*
*குருவானவர் திருவாரூர் தியாகர் (எல்லப்ப நயினார்)*

*பூங்கமலத்தயனோடு மால் அறியாத நெறியானே*
*கோங்கலர்சேர் குவிமுலையாள் கூறா வெண்ணீறாடி*
*ஓங்கெயில்சூழ் திருவாரூர் உடையானே அடியேன் நின்*
*பூங்கழல்கள் அவையல்லா தெவையாதும் புகழேனே.*

*உற்றாரையான் வேண்டேன் ஊர் வேண்டேன் பேர் வேண்டேன்*
*கற்றாரை யான் வேண்டேன் கற்பனவும் இனி அமையும்*
*குற்றாலத்து அமர்ந்து உரையும் கூத்தாஉன் குரைகழற்கே*
*கற்றாவின் மனம் போலக் கசிந்து உருகவேண்டு வனே.*

இதற்கு ராமகிருஷ்ணமடம் வெளியிட்ட திருவாசகத்தில் சுவாமி சித்பவாநந்தர் விளக்கமளிக்கிறார். அதாவது ஒரு மகானிடம் ஒரு கற்றறிந்த இளைஞர் சந்திக்கும் போது மகான் அந்த இளைஞரிடம் மக்கள் தத்தம் சுய நலத்திற்காகவே மற்றவர்களை நேசிக்கின்றனர். அதாவது தாய் தந்தை, மகனையும், மனைவி தன் சுய நலத்திற்காகக் கணவரையும், கணவன் தம் சுயநலத்திற்காக மனைவியையும் நேசிப்பதாகக் கூறினார். உடன் இளைஞன் அப்படி இல்லை. என் தாய் தந்தை அன்புடன் நேசிப்பதாகவும் மனைவி என் மேல் அதிகம் பாசம் உள்ளவளாவும் என் மீது உயிர் வைத்திருப்பதாகவும் கூறினான். முனிவர் இதை விளக்கி உணர வைக்க ஓர் உபாயம் செய்தார். அதாவது இளைஞனிடம் ஒரு குளிகை தருவதாகவும் அதை வீட்டுக்குள் சென்று அருந்த வேண்டும் என்றும் கூறினார்.

அப்படியே சென்று குளிகை அருந்தினான். அவனுக்குச் சற்று நேரம் பேச்சு மூச்சு இல்லை. உடன் அவன் இறந்துவிட்டதாகக் கருதி உறவினர்கள் முட்டி மோதி அழுதனர், இந்த நிலையில் அந்த இடத்திற்கு முனிவர் வந்து என்னால் இறந்தவரை உயிர்ப்பிக்க முடியும். ஆனால்,ஒரு நிபந்தனை. தர்ப்பையைக் கயிற்றால் கட்டி யாரேனும் ஒருவரோடு சேர்த்து கட்டி மந்திரிப்பேன். இளைஞன் உயிர் பெறுவான். ஆனால், தர்ப்பையைக் கட்டிய மற்றவர் உயிர்விட நேரிடும் என்றார். ஒவ்வொருவரும் ஒரு சாக்குபோக்குச் சொல்லி உயிர் கொடுக்க முன்வரவில்லை. இதை அந்த இளைஞன் பேச்சு மூச்சு இல்லாவிடினும் தாய் தந்தை மனைவி பேசிய வார்த்தைகளைக் கவனித்து வந்தான். பிறகு முனிவர் ஏதோ மந்திரம் சொல்லி உயிர் பிழைக்க வைத்தார். ஆகவே இந்த பந்த பாச உறவுகளை நீக்கித் தியாகேசனை ஒன்றுபட்டு நேசிக்க வேண்டும்.

## அச்சோப் பதிகம்

முத்தி நெறி அறியாத மூர்க்கரோடு முயல்வேனைப்
பத்தி நெறி அறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம்
சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட
அத்தன் எனக்கருளியவர் ஆர் பெறுவார் அச்சோவே.

## திருத்தெள்ளேணம்

திருவார்பெருந்துறை மேயபிரான் என்பிறவிக்
கருவேரறுத்தபின் யாவரையும் கண்டதி ல்லை
அருவாய் உருவமும் ஆயபிரான் அவன்மருவுந்
திருவாரூர் பாடி நான் தெள்ளேணங் கொட்டோமோ.

## திருப்பள்ளி எழுச்சி

போற்றி என்வாழ் முதலாகிய பொருளே
புலர்ந்தது பூங்கழற் கிணைதுணை மலர்கொண்டு
ஏற்றி நின் திருமுகத்து எமக்கருள்மலரும்
எழில் நகை கொண்டு நின்திருவடி தொழுகோம்
சேற்றிதழ்க் கமலங்கள்மலரும் தண்வயல்சூழ்
திருப் பெருந்துறை உறைசிவபெருமானே
ஏற்றுயர்கொடியுடை யாயெனை உடையாய்
எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே

போற்றி அருளுக நின் ஆதியாம் பாதமலர்
போற்றி அருளுக நின் அந்தமாம் செந்தளிர்கள்
போற்றி எல்லா உயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்
போற்றி எல்லா உயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்
போற்றி எல்லா உயிர்க்கும் ஈறாம்இணையடிகள்
போற்றி மால் நான்முகனும் காணாத புண்டரிகம்
போற்றி யாம் உய்யஆட் கொண்டு அருளும் பொன்மலர்கள்
போற்றி யாம் மார்கழி நீராடேலோ எம்பாவாய்

## மாணிக்கவாசகர் அருளிய சிவபுராணம் (திருவாசகம்)

நமச்சி வாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க!
இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க!
கோகழி ஆண்ட குருமணிதன் தாள் வாழ்க!
ஆகமம் ஆகி நின்று அண்ணிப்பான் தாள் வாழ்க!
ஏகன் அனேகன் இறைவன் அடிவாழ்க!
வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க!
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்தன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்கு விவார் உள்மகிழுங்கோன்கழல்கள் வெல்க
சிரங்கு விவார் ஓங்கு விக்கும் சீரோன்கழல் வெல்க
ஈசன்அடி போற்றி! எந்தை அடி போற்றி!
தேசன்அடி போற்றி! சிவன்சேவடி போற்றி!
நேயத்தே நின்ற நிமலன் அடி போற்றி!
மாயப் பிறப்பறுக்கும் மன்னன் அடி போற்றி!
சீரார் பெருந்துறை நம் தேவன் அடி போற்றி!
ஆராத இன்பம் அருளும் மலை போற்றி!
சிவனவன் என் சிந்தையுள் நின்ற அதனால்
அவனருளாலே அவன்தாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுராணம் தன்னை

முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பன் யான்
கண்ணுதலான்தன் கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற்கு எட்டா எழிலார்கழல் இறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய்விளங்கொளியாய்
எண்ணிறந்து எல்லை இலாதானே! நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமாறு ஒன்று அறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅநின்ற இத் தாவர சங்கமத்துள்
எல்லாப்பிறப்பும் பிறந்து இளைத்தேன் எம்பெருமான்
மெய்யேஉன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்யஎன் உள்ளத்துள் ஓங்காரமாய்நின்ற
மெய்யா! விமலா! விடைப்பாகா! வேதங்கள்
ஐயா என ஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியனே
வெய்யாய்தணி யாய் இயமானன் ஆம் விமலா
பொய்யாயினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞானமாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே
அஞ்ஞானந் தன்னை அகல்விக்கும் நல்லறிவே
ஆக்கம் அளவிறுதி யில்லாய்அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்தொழும்பின்
நாற்றத்தின் நேரியாய்சேயாய் நணியானே
மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்!
நிறங்கள் ஓர் ஐந்துடையாய் விண்ணோர்கள் ஏத்த

மறைந்திருந்தாய் எம் பெருமான்! வல்வினையேன் தன்னை
மறைந்திட மூடியமாய இருளை அறம் பாவம் என்னும்
அருங்கயிற்றாற் கட்டிப்
புறம் தோல் போர்த் தெங்கும் புழு அழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா! உனக்குக்
கலந்த அன்பாகிக் கசிந்து உள் உருகும்
நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன் மேல் வந்தருளி நீள்கழல்கள்காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே!
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே!
தேசனே! தேனார் அமுதே! சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேச அருள் புரிந்து நெஞ்சில் வஞ்சம் கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா அமுதே! அளவிலாப் பெம்மானே!
ஓராதார் உள்ளத் தொளிக்கும் ஒளியானே!
நீராய் உருக்கி யென் ஆருயிராய் நின்றானே
இன்பமுந் துன்பமும் இல்லானே! உள்ளானே!
அன்பருக்கு அன்பனே! யாவையுமாய் அல்லையுமாம்
சோதியனே! துன் இருளே தோன்றாப் பெருமையனே!
ஆதியனே! அந்தம் நடுவாகி அல்லானே!
ஈர்த்தென்னை ஆட்கொண்ட எந்தை பெருமானே!
கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தம்கருத்தின்
நோக்கரியநோக்கே! நுணுக்கரிய நுண்ணுணர்வே!
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே!
காக்கும் எம் காவலனே! காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே! அத்தா மிக்காய்நின்ற

தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்
தேற்றனே! தேற்றத்தெளிவே! என் சிந்தனையுள்
ஊற்றான உண்ஆர் அமுதே! உடையானே!
வேற்று விகார விடக்கு டம்பின் உட்கிடப்ப
ஆற்றேன் எம் ஐயா அரனே யோ என்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே
நள்ளிருவில் நட்டம் பயின்றாடும் நாதனே
தில்லையுட் கூத்தனே! தென்பாண்டி நாட்டானே!
அல்லற் பிறவி அறுப்பானே! ஓ என்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லியப் பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தின் உள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து.

## தமிழ் ஒன்பதாம் வேதம்

### திருவிசைப்பா- பூந்துருத்தி நம்பிகாடநம்பி

1. பக்தி யாய்உணர்வோர் அருளைவாய்மடு த்துப்
பருகு தோறு அமுதமொத் தவருக்கே
தித்தியா இருக்கும் தேவர்காள் இவர்தம்
திருவுரு இருந்தவா பாரீர்
சத்தியாய் சிவமாய் உலகெலாம் படைத்த
தனிமுழு முதலுமாய் அதற்கோர்
வித்துமாய் ஆரூர் ஆதியாய் வீதி
விடங்கராய் நடங்குலா வினரே

### திருப்பல்லாண்டு - சேந்தனார்

குழல் ஒலி யாழ் ஒலி கூத்தொலி ஏத்தொலி எங்கும் குழாம் பெருகி
விழ ஒலி விண்ணளவும் சென்று விம்மி மிகு திருவாரூரின்
மழவிடையாற்கு வழிவழி ஆளாய் மணம் செய் குடிப்பிறந்த
பழவடியாரோடும் கூடி எம்மானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

# தமிழ் பத்தாம் வேதம்
## திருமூலர் திருமந்திரம்

1. அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்தி ருந்தாரே.

2. நான்பெற்ற இன்பம் பெறுகஇ வ்வையகம்
வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்
ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்
தான்பற்றப் பற்ற தலைப்படும் தானே

3. தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திரு நாமம் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுருச் சிந்தித்தல் தானே!

4. யாவர்க்கும் ஆம் இறைவர்க்கு ஒரு பச்சி லை
யாவர்க்கும் ஆம் பசுவுக்கு ஒரு வாயுறை
யாவர்க்கும் ஆம் உண்ணும்போது ஒரு கைப்பிடி
யாவர்க்கும் ஆம் பிறர்க்கு இன்னுரை தானே

5. பந்தல் பிரிந்தது பண்டாரம் கட்டற்ற
ஒன்பது வாசலும் ஒக்க அடைத்தன
துன்புறு காலத்துரிசுவர மேன்மேல்
அன்புடையார்கள் அழுது அகன்றார்களே

6. ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லை நாணாமே
சென்றே புகும்கதி இல்லைநும் சித்தத்து
நின்றே நிலைபெற நீர் நினைந்துய்ம்மினே.

7. உள்ளம் பெருங்கோவில் ஊண் உடம்பு ஆலயம்
வள்ளல் பிரானார்க்கு வாய் கோபுரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப்புலன் ஐந்தும் காளாமணி விளக்கே.

8. தத்துவம் ஆடச் சதாசி வம்தானாடச்
சித்தமும் ஆட சிவசக்தி தானாட
வைத்த சராசரம் ஆட மறையாட
அத்தனும் ஆடினான் ஆனந்தக் கூத்தன்றே.

9. ஆசை அறுமின் ஆசை அறுமின்
ஈசனோடாயினும் ஆசை அறுமின்கள்
ஆசை படப்பட ஆயவரும் துன்பங்கள்
ஆசை விடவிட ஆனந்தமாமே.

10. சிவனோடு ஒக்கும் தெய்வம் தேடினும் இல்லை
அவனோடு ஒப்பார் இங்கு யாவரும் இல்லை
புவனம் கடந்தன்று பொன்ஒளி மின்னும்
தவனச் சடைமுடித் தாமரையானே.

11. ஊரெல்லாம் கூடி ஒலிக்க அழுதிட்டுப்
பேரினைநீக்கிப் பிணமென்று பேரிட்டுச்
சூரையம் காட்டிடைக் கொண்டு போய்ச் சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்பு ஒழிந்தார்களே.

12. பட மாடக்கோயில் பரமற்கு ஒன்று ஈயில்
நட மாடக் கோயில் நம்பர்க்கு அங்கு ஆகா
நட மாடக் கோயில் நம்பர்க்கு ஒன்று ஈயின்
பட மாடக்கோயில் பரமற்கு அது ஆமே.



## தமிழ் பதினொன்றாம் வேதம்
### (க்ஷேத்ர திருவெண்பா) ஐயடிகள் காடவர்கோன்

காளைவடி வொழிந்து கையுற வோடை - உறவாய்
நாளும் அணுகி நலியாமுன் பாளை
அவிழ்க முகம் பூச்சோலை ஆருரற்கு ஆளாய்
கவிழ்க முகம் கூம்புகளன்கை.

## திருவாரூர் மும்மணிக் கோவை
### (சேரமான் பெருமாள் நாயனார்)

மெல்விரல் நெரிந்து விம்மி வெய்துயிர்த்து
அல்லியங்கோதை அழலுற்றா அங்கு
எல்லையில் இருந்துயர் எய்தினர் புல்லார்
அரிவை பாகத் தண்ணல் ஆரூர்.

## மூத்தநாயனார் இரட்டை மணிமாலை
### (கபில தேவர்)

வினாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்
வினாயகனே வேட்கை தணி விப்பான் வினாயகனே
விண்ணிற்கும் மண்ணிற்கும் நாதனுமாம் தன்மையினால்
கண்ணில் பணி மின் கனிந்து.

## திரு இரட்டை மணிமாலை
### (காரைக்கால் அம்மையார்)

தலையாய ஐந்தினையும் சாதித்துத் தாழ்ந்து
தலையாயின் உணர்ந்தோர் காண்பர் தலையாய
அண்டத்தான் ஆதிரையான் ஆலாலம் உண்டிருண்ட
கண்டத்தான் செம் பொற்கழல்

## திருதொண்டர் திருவந்தாதி (நம்பியாண்டார் நம்பி)

செல்வம் திகழும் திருவாரூர் மதில் வட்டத்துள் பிறந்தார்
செல்வன் திருக்கணத்துள்ளவரே அதனால் திகழ்
செல்வம் பெருகு தென் ஆரூர்ப் பிறந்தவர் சேவடியே
செல்வ நெறியுறு வார்க்கணித்தாய் செழு நெறியே.

## திருவந்தாதி (பட்டினத்துப் பிள்ளையார்)

மெய்த்தொண்டர் செல்லும் நெறி அறியேன் மிக நற்பணிசெய்
கைத் தொண்டர் தம்மிலும் நல்தொண்டு உவந்திலன்
உண்பதற்கே பொய்த்தொண்டு பேசிப் புறம்புறமே
உன்னைப் போற்றுகின்ற இத்தொண்டனேன் பணி
கொள்ளுதியே கச்சி ஏகம்பனே.

## தமிழ் பன்னிரண்டாம் வேதம்
### பெரிய புராணம் - சேக்கிழார்

1. ஐந்து பேர் அறிவும் கண்களே கொள்ள
அளப்பரும் கரணங்கள் நான்கும்
சிந்தையே ஆகக்குணம் ஒரு மூன்றும் திருந்து
சாத்துவிகமே ஆக
இந்துவாழ் சடையான் ஆடும் ஆனந்த எல்லையில்
தனிப் பெருங்கூத்தின்
வந்த பேரின்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்

2. தேராரும் நெடு வீதித் திருவாரூர் வாழ்வார்க்கு
ஆராத காதலின் நம் ஆரூரான் நாமழைக்க
வாரா நின்றா (ன்) அவனை மகிழ்ந்தெதிர் கொள்வீர் என்று
நீராரும் சடைமுடி மேல்நில வணிந்தார் அருள் செய்தார்.

3. புற்றிடங்கொண்ட புராதனனைப் பூங்கோயில் மேய
பிரானையார்க்கும் பற்றிடமாய பரம் பொருளைப் பார்ப்பதி
பாகனைப் பங்கயத்தாள்அர்ச்சனை செய்ய
அருள்புரிந்த அண்ணலை மண்மிசை வீழ்ந்திறைஞ்சி
நற்றமிழ் நாவலர் கோன் உடம்பால் நன்மையின்
தன்மையை மெய்ம்மை பெற்றார்.

## சேக்கிழார் – திருவாரூர் நகரச் சிறப்பு

தண் அளி வெண்குடை வேந்தன்
செயல் கண்டு அறியாது
மண்ணவர் கண் மழை பொழிந்தார்
வானவர் பூ மழை சொரிந்தார்
அண்ணல் அவன் கண் எதிரே
அணி வீதி மழை விடை மேல்
விண்ணவர்கள் தொழ நின்றான்
வீதி விடங்கப் பெருமாள்

## திருவருட்பா
## (வடலூர் வள்ளலார் இராமலிங்க அடிகள்)
## விண்ணப்பம் (II திருமுறை)

தெரியத் தெரியும் தெரிவுடையார்
சிவானு பவத்திற் சிறக்கின்றார்
பிரியப் பிரியும் பெரும்பாவி
அடியேன் பிழையிற் பிழைக்கின்றேன்
துரியப் பொருளே அணி ஆரூர்ச்
சோதி மணி நீ தூயவருள்
புரியப்பெறுவேனெனில் அவர் போல்
யானும் சுகத்திற் பொலிவேனே.

## திருப்புகழ் (அருணகிரி நாதர்)

நீதானேத்தனையாலும் நீடுழி கிருபையாகி
மாதானத் தனமாக பாஞானக் கழல் தாராய்
வேதாமைத் துனவேளே வீராசற் குணசீலா
ஆதாரத் தொளியானே ஆரூரிற் பெருமாளே.

## இலக்குமி துதி

தண்கமலத் திருந்தீசன் அடிக்கமலம் மனக்கமலம் தன்னில் வைத்து
வெண்கமலக் கண்ணானை மணவாளனாப் பெறவா மாதவஞ்செய்து
ஒண்கமலா லயமெனும்பேர் ஒளியார்ந்த திருவாரூர்க் குகந்தணிந்த
பெண்கமலம் கைக்கமலம் பிடித்தகொடிதனைத் தொழுது பெரிதும்
வாழ்வோம்.

## வாழ்த்து (கச்சியப்பர்)

வான்முகில் வழாஅது பெய்க
மலிவளம் சுரக்க மன்னன்
கோன்முறை அரசு செய்க
குறைவிலாது உயிர்கள் வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க
நற்றவம் வேள்வி மல்க
மேன்மை கொள் சைவநீதி
விளங்குக உலகமெலாம்

## பிற சமயம் /மதம் / கொள்கைகள் / சிறுகுறிப்பு :

### ஆதி சங்கரர் :

இவர் கேரள மாநிலம் வடதிருவாங்கூர் பகுதியில் காலடி என்ற ஊரில் கி.பி.788 ல் பிறந்தவர். வியாசர் செய்த பிரம்ம சூத்திரங்களுக்குப் பாஷியம் எழுதியவர். இவரது கொள்கையானது. (அதாவது வேதாந்தம் என்பது) பிரம்மம் ஒன்றே உள்பொருள். உலகம் பிரம்மத்தின் வெறும் தோற்றம் என்பதாகும். இவரின் அத்துவிதம் என்ற சொல்லுக்கு இரண்டாவது ஒரு பொருள் இல்லை என்பதாகும். அதாவது பிரம்மம் ஒன்றே பொருள். பிரம்மம் அறிவு மாத்திரையாய் உள்ள தனிப்பொருள் என்பதாகும். இவ்வாறு தனது ஒரு பொருள் கொள்கையை வற்புறுத்தியதால் இவருடைய மதம் கேவலாத்துவம் (தனிநிலை) என்று கூறப்படுகிறது.

### இராமானுஜர்:

இவர் சென்னைஎய அடுத்த திருப்பெரும்புதூரில் கி.பி. 988ல் பிறந்தவர். கடவுளுக்குக் குணமில்லை என்ற ஆதிசங்கரர் கொள்கையை மறுத்து கடவுளுக்குக் விசேடமான குணங்கள் உண்டு என்றும் கூறியவர். மேலும், கடவுள், உயிர், உலகம், என்ற முப்பொருள்கள், உண்மை பிறப்பு நிலையாகிய யதார்த்தத்தில் மட்டும் உண்டு. முக்தி நிலையில் பரார்த்தத்தில் கடவுள் மட்டுமே உள்பொருள் என்ற கொள்கை உடையவர். இவர் அத்துவிதம் என்ற சொல்லுக்கு பொருளாவது அரசன் ஒருவனுக்குக் குடிமக்களும், ஆடை ஆபரணங்களும் இருப்பது போல் இறைவனுக்கு உயிர்களாகிய அடிமைகளும், உலகமாகிய உடமையும் உண்டு. இவ்வாறு விசேடிக்கப்பட்ட விசிட்டமாய் உள்ள பிரம்மம் ஒன்றே என்பதாகும். இவர் அத்துவிதத்திற்கு விசிட்டம் என்ற அடைமொழி கொடுத்து விளக்கியதால் விசிட்டாத்துவம் என்று இவரது மதம் அழைக்கப்படுகிறது.

### மாத்துவர்:

இவர் கன்னட மாநிலத்தில் கி.பி. 1328 ல் தோன்றியவர். இவர் பிரம்ம சூத்திரங்களுக்கு உரை எழுதும் போது ஆதிசங்கரர், இராமானுஜர், ஆகிய இருவரது கொள்கைகளையும் மறுத்து கடவுள், உயிர் என்ற இருபொருள்களும் உள் பொருள்களே என்ற இருபொருள் கொள்கையை உருவாக்கியதால் இவர் மதம் "துவைதம்" என்று கூறப்படுகிறது.

## சைவ சமயம்

*சைவம் சிவனுடன் சம்மந்தமாவது.*
*சைவம் தனை அறிந்தே சிவம் சாருதல்*
*சைவம் சிவம் தன்னை சாராதிலா நீவுதல்*
*சைவம் சிவானந்தஞ் சாயுச்சியமே (திருமூலர் திருமந்திரம் 1512)*

மதம் என்றால் கொள்கை. சமயம் என்றால் நெறிமுறைகள். சைவ சமயமே சமயம்; சைவத்தின் மேல் சமயமில்லை என்பது ஆன்றோர் வாக்கு. (தாயுமானவர், எல்லப்ப நாவலர்). சைவர்களாகப் பிறந்துள்ள நாம் அவற்றைப் பற்றித் தெரிந்து கொள்வது அவசியம். உலகத்தில் பல சமயங்கள் உள்ளன. எனினும் அவை எல்லாம் ஒவ்வொரு காலத்தில் தோன்றிய காலவரையறை உடையன. நமது சைவ சமயம் தோற்றம் அறியப்படாத பழமை உடையது. பிற சமயங்கள் ஒவ்வொரு கால எல்லையும் ஒவ்வொரு தோற்றக்குறிப்பும் உடையன. சைவ சமயம் காலத்தைக் கடந்து இறைவனாலேயே அளிக்கப் பட்டமையால் இது கால எல்லை அறியப்படாதது.

**"விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயம் செய்தே எரிவினால் சொன்னார் ஏனும் எம்பிரார்க்கு ஏற்றதாகும்"**

என்ற அப்பர் திருவாக்கினால் சைவ சமயத்தின் பொது நோக்கினை அறியலாம். உலகிலுள்ள மக்கள் தாம் பல்வேறாய் இருத்தலால் அவற்றிற்கு ஏற்பப் பல்வேறு சமயங்களும் வேண்டப்படுபவன என்பது சைவ சமய உட்கருத்து. சைவ சமயம் உலகம் உயிர்களது நன்மையின் பொருட்டு இறைவனால் தரப்பட்டது. சைவ சமய நடைமுறைகள் யாவும் உலகுக்கு ஒத்த வகையில் உள்ளன. சைவ தத்துவக் கொள்கைகள் இன்றைய அறிவியல் அறிஞர்களால் ஏற்கத்தக்கனவாய் உள்ளன.

சைவ சமயத்தில் மக்களிடையே ஜாதி குலம் பிறப்பு முதலிய வேறுபாடுகள் இல்லை. 63 நாயன்மார்களே (இறைத்தூதர்கள்) எடுத்துக்காட்டு. இவர்களில் பேரரசர், சிற்றரசர், அந்தணர், வணிகர், வேளாளர், தொழிலாளி, குயவர், சலவையாளர், மீனவர், தாழ்த்தப்பட்டோர் என்று பலர் உளர். இன்னும் இல்லறத்தாரும், துறவிகளும், பெண்களும், உள்ளனர். இவர்கள் பல்வேறு வகையினரானாலும் அனைவரும் "சைவ சமய" நெறியில் என்னும் ஒரே தன்மையில் தோன்றிக் காட்சியளிக்கிறார்கள்.

கால எல்லை அறியப்படாத பழமையான பல வகைச் சிறப்புப் பெற்ற சைவ சமயத்திற்கு முதல் ஆசிரியர் சிவபெருமான். அவர் வேதம், சிவாகமம் என்னும் இரு வகை நூல்களை இயற்றி உதவினார். அதனை உணராத மக்களால் இடைக்காலத்தில் பல குழப்பங்கள் தோன்றலாயின. அக்காலத்தில் இறைவன் திருஅருளால் தமிழ்நாட்டில் தோன்றி விளக்கம் கண்டவர்கள் 1. சம்பந்தர், 2. அப்பர் 3. சுந்தரர், 4. மாணிக்கவாசகர் ஆகிய சமய ஆசிரியர் நால்வரும் மற்றும் 1.மெய்கண்டார், 2.அருள்நந்தித்தேவர், 3.மறைஞானசம்பந்தர் 4. உமாபதி சிவம் என்னும் சந்தான சாரியார் நால்வரும் ஆவர்.

சமயசாரியர்கள் சைவ சமயம் ஒளி குன்றியிருந்த போது நடைப்பயணமாக காடு, மேடு, முள், ஆறு கடந்து வெயில், மழை, பசி பொருட்படுத்தாமல் தமிழ்நாடு முழுவதும் யாத்திரை செய்து இனிய இசைப்பாடல்கள் பாடியும் பல அற்புதங்கள் செய்தும் சைவ சமய உண்மையை விளங்கச் செய்தார்கள். மன்னர்கள் உண்மை உணர்ந்து திருந்தினார்கள். அப்பர் தமிழ்நாட்டின் வடபகுதியில் மகேந்திர வர்ம பல்லவனைச் சைவனாக்கியும், சம்பந்தர் தென்பகுதிப் பாண்டியனைச் சைவனாக்கியும் சைவ சமயத்தை நிலை நாட்டினார்கள் (கி.பி. 7ம் நூற்றாண்டு). இருவருக்குப் பின் 2 நூற்றாண்டுக்குப் பின் சுந்தரர் திருநாவலூரில் அவதாரம் செய்து திருவாரூரில் எழுந்தருளி முன்னவர்கள் செய்தபடி நாடு முழுவதும் சென்று அருட் பாடல்களால் அற்புதங்களால் சைவ சமயத்தை வளர்த்தார். சேர நாட்டு அரசர் சேரமான் பெருமாள் உற்ற நண்பர். சுந்தரர் மேற்கிலும் யாத்திரை செய்தார் (7 ஆம் திருமுறை).

சமயசாரியர்கள், ஜாதி இன்றி சைவ சமயத்தைப் பக்திப் பாடல்கள் மற்றும் பல அற்புதங்களால் வளர்த்த தோடு சமுதாயச் சீர்த்திருத்தங்களும் செய்துள்ளனர். திருஞான சம்பந்தர் தற்போது மூட நம்பிக்கை என்று சொல்லப்படுகிற சகுனம் பார்ப்பது ராகு காலம் பார்ப்பது ஆகியவற்றைச் சாடியிருக்கிறார். சம்பந்தர் அந்தணராக இருந்தும் சாதி வேறுபாட்டில் கவனம் செலுத்தவில்லை. அவருடன் கூட உடனிருந்து யாழ் வாசித்த திருநீலகண்ட யாழ்ப்பாணர் அரிஜன வகுப்பைச் சார்ந்தவர். சம்பந்தருடன் இருந்தவர்கள் அத்துணை பேரும் ஆண் மக்கள்.

ஆனால் திருநீலகண்ட யாழ்ப்பாணர் மனைவியும் கூடவே அவருடன் சென்றார். சம்பந்தருக்கு, உபநயனம் போன்ற சடங்குகளில் விருப்பம் இல்லை. இவரது இனத்தார்கள் ஜாதி பிரதிஷ்டை செய்துவிட்டனர். அதாவது அவர் இனத்தில் பிறக்கும் குழந்தைகளுக்குத் 'திருஞானசம்பந்தர்' என்று பெயர் சூட்டக் கூடாது என்று விதித்தனர். அடுத்து, அப்பர் பெருமான் பிறர் எத்துணைத் துன்பம் செய்தாலும் பொறுமையாக ஏற்றுக் கொண்டு வாழ வேண்டும் என்ற கருத்தை உணர்த்தியும் வாழ்ந்தும் காட்டியவர். அஞ்சுவது யாதொன்றுமில்லை அஞ்சவருவதும் இல்லை மேலும் உழவாரப்பணியின் மூலம் கோயில் சுத்தம் செய்ததோடு அல்லாமல் தெருக்களையும் சுத்தம் செய்துள்ளார். திருவீழிமிழலையில் பஞ்சம் ஏற்பட்ட போது சம்பந்தர், அப்பர் இருவரும் இறைவனிடம் படிக்காசு பெற்று அனைவருக்கும் ஜாதி மத பாகுபாடு இன்றி இலவசமாக உணவு அளித்துள்ளார்கள். அதே போல் சிவ வேதியர் குலத்தில் தோன்றிய சுந்தரர் அக்குலப் பெண்ணைத் திருமணம் முடிக்காமல் கணிகையர்குலப் பெண் பரவை நாச்சியாரையும், வேளாளர் குலப் பெண் சங்கிலியையும் மணம் முடித்தார். இளையான்குடி மாற நாயனார் தெருவில் யார் வந்தாலும் அழைத்து உணவு அளித்தார். மற்றும் திருமூலரும் மக்களுக்குத் தொண்டு செய்தால் அத்தொண்டு இறைவனைச் சென்றடையும் என்று சொல்லுகிறார். ஆகவே நமது நாயன்மார்கள் சமுதாயத் தொண்டும் ஆற்றி உள்ளனர் என்பதை உணரலாம். தேவார மூவரோடு பக்திச் சுவையுடன் கருங்கல் மனமும் கரைந்து உருக மாணிக்க வாசகர் திருவாசகமும் இணைந்தபோது மேலும் சைவ சமயம் சிறந்து விளங்கியது. (8ம் திருமுறை. இவர்கள் இல்லை என்றால் நாம் பெருமை பேசிக் கொள்வதற்குத் திருக்கோயில்கள் எங்கே இருக்கும்? சமயாசிரியர்களுக்குப் பின்னர் 1. நம்பி ஆண்டார் நம்பியாலும் 2. சேக்கிழராலும் (கி.பி. 12 ஆம் நூற்றாண்டு) தமிழ் மறைகள் பன்னிரண்டும் நிரம்பி விளங்கின. சேக்கிழார்க்குப் பின் சைவ சமயம் பொலிவிழந்த பின்னர், பல சாத்திரங்கள், உபதேசங்கள் வாயிலாகச் சைவ சமயத்தை நிலை நாட்டினார்கள். சந்தனாசாரியார்கள் (கி.பி. 13ஆம் நூாற்றாண்டு) மெய்கண்டார் அவர் பால் அருள்நந்தி சிவம் அவர் பால் மறைஞான சம்பந்தர், அவர்களிடம் கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியார் என்ற நிலையில் உபதேசம் பெற்றனர். இவர்கள் உபதேசித்த நூல்கள் 1. சிவஞான போதம், 2. சிவஞான

சித்தியார் போன்ற (14 மெய்கண்ட நூல்கள்) ஆகும். சைவ சமய உட்பொருள் பதி, பசு, பாசம். பதி என்றால் இறைவன். பசு என்றால் உயிர்கள். பாசம் என்றால் உலகம். இவைகள் அனாதியே. பசு (உயிர்கள்) ஆணவமலம், கன்மமலம், மாயா மலத்தில் உழலுகின்றன. இவற்றிலிருந்து விடுபட்டு இறைவன் திருவடி நிழலை அடைய சைவ சித்தாந்தம் மேற்கண்ட அருளாளர்கள் மூலம் வழிகாட்டுகிறது. சந்தனாசாரியார் வழி, திருக்கயிலாய பரம்பரையாகும். கயிலாய பரம்பரையில் தருமை ஆதீன குரு கமலை ஞானபிரகாசர் துறைசை ஆதீன குரு நமசிவாய மூர்த்தி, வேளாக்குறிச்சி ஆதீன குரு சத்திய ஞான தரிசனி போன்றோரும் தோன்றினர். இந்த ஞானப் பரம்பரையில் தோன்றி விளங்குகின்ற 1. தருமை ஆதீனம், 2). திருவாவடுதுறை ஆதினம் 3) வேளாக்குறிச்சி ஆதீனம் போன்ற 18 ஆதீனங்கள் சைவ சமய வளர்ச்சியில் பாடுபட்டு வருகின்றன. சைவமும் தமிழும் தழைத்து இனிதுஓங்குக.

## சைவ சித்தாந்தக் குறிக்கோள் :

1. பேராற்றலும், பேரறிவும் பெருங்கருணையும் கொண்ட வனே முழுமுதல் கடவுள் ஆவார். அவரே சிவம். அவர், எல்லாம் வல்ல தன்மையைப் பெற்றவர். பிற தெய்வங்கள் அத்தன்மையைப் பெற்றுள்ளதாகக் கூறஇயலாது.

2. உயிர் என்றும் அழியாது. உயிரோடு சேர்ந்து இருக்கின்ற உடல், அது வாழும் உலகம், அது அனுபவிக்கும் பொருள்கள் எல்லாம் ஒரு கால எல்லையில் அழியும்.

3. செல்வம், வறுமை, இன்பம், துன்பம், ஆயுட்காலம், இறக்கும்முறை ஆகியவைகள் எல்லாம் நாம் பிறவிக்கு வரும் முன்பே,முற்பிறவியில் செய்த வினைகளின்அடிப்படையில் இறைவனால் தீர்மானிக்கப்பட்டு விட்டன.

4. பெற்றோர் செய்த வினைகள் பிள்ளைகளுக்கோ, பிள்ளைகள் செய்த வினைகள் பெற்றோர்க்கோ சென்று சேராது. அவரவர் செய்த வினைகளை அவரவர்களே அனுபவித்துத்தான் கழிக்க வேண்டும்.

5. ஒரு தீவினைக்குப் பல நல்வினைகளைச் செய்தோ,பிற பரிகாரங்கள் மூலமாகவோ வினைகளை நீக்கிவிட முடியாது.

6. யான் எனது என்ற செருக்கால் (ஆணவத்தால்) நாம் செய்யும் செயல்களுக்கு (கன்மத்துககு) ஏற்பவே, இவ்வுலக வாழ்க்கையை (மாயை)இறைவன் விதியாக (ஊழாக) ஊட்டுகிறான் என்பதே அடிப்படை உண்மை.

7. ஆணவத்தினால் வினைகளும். வினைகளால் உலக வாழ்வில் துன்பங்களும் ஏற்படுகின்றன என்பதால். எக்காலத்தும் ஆணவம் ஏற்படாமல் இருக்க, அற வாழ்க்கையைக் கடைப்பிடிக்க வேண்டும்.

8. அறவாழ்க்கையான, உடலால் செய்கின்ற சிவத் தொண்டையும் (சரியை), உடலாலும், மனத்தாலும் செய்கின்ற சிவபூசையையும் (கிரியை), எப்போதும் சிவத்தையே எண்ணுகின்ற சிவதியானத்தையும் (யோகம்), உலக வாழ்க்கையில் ஈடுபட்டுக் கொண்டே செய்வதற் குரிய வழிமுறைகளையும் குருநாதர் மூலம் உணர வேண்டும்.

9. விபூதி, உருத்திராக்கம் ஆகியவைகளைக் கைக் கொண்டு மூலமந்திரமான ஐந்தெழுத்தை உபதேசித்து, தன்னோடு அணைத்துக் கொண்டு சிவபோகத்தில் (ஞானம்) நிலைத்திருக்க, இறைவன் அருள்புரிபவார். அக்குருவருள் திருவருளை நம்மோடு சேர்ப்பிக்கும்.

10. அத்திருவருளை உணர்ந்து அதில் தீவிரமாக அழுந்தி நிற்கும் போது சிவம் தானே வந்து நம்மை ஆட்கொள்ளும். அக்கணமே வாழ்வில் இன்பம் தழைத்தோங்கும்.

11. அறவாழ்க்கையும், சிவவழிபாடுமே, முற்பிறவில் செய்த வினைகளைப் போக்கிச் சிவபோகத்தை அளிக்கும். சிவபோகத்தால் விருப்புறு காலம் இன்பமாய் வாழ்ந்து, திருவடிப்பேற்றை எண்ணும் காலத்தில் சிவத்தில் கலந்து பேரின்பப் பெருவாழ்வைப் பெறலாம்.

## அருள்மிகு தியாகராஜர் சாயரட்சையில் ஒலிக்கப்படும் மந்திரங்கள் - அலங்கார தீபம்

1. தூரஸி தூர்வ தூர்வந்தம் தூர்வதம் யோஸ்மான்
தூர்வதி தம் தூர்வ யம் வயம் தூர்வாமஸ்த்வம்
தேவானா மஸி ஸஸ்னிதமம் பப்ரிதமம்
ஜுஷ்டதமம் வஹ்னிதமம் தேவஹூதம
மஹ்ருதமஸி ஹவிர்த்தானம் த்ருகும் ஹஸ்வ
மாஹ்வார் மித்ரஸ்ய த்வா சக்ஷுஷா ப்ரேக்ஷே
மா பேர்மா ஸம்விக்தா மாத்வா ஹிகும் ஸிஷம்

2. உத்தீப்யஸ்வ ஜாதவேதோS பக்னத்
நிர்ருதிம் மம பசூ குச்ச மஹ்யமாவஹ
ஜீவனஞ்ச திசோ திச மாநோ ஹி
ஸீஜ்ஜாதவேதோ காமச்வம் புருஷஞ்
ஜகத் அரபிப்ரதயக்ன ஆகஹி ச்ரியா மா பரிபாதய!!
ஸப்ரத ஸாபம் மே கோபாய;
யே சஸப்யா: ஸபா ஸித:
தானியந்த்ரியாவத: குரு ஸர்வமாயுருபா
ஸதாம் அஹே பத்னிய மந்த்ரம் மே
கோபாய யம் ருஷயஸ் த்ரயீவிதா
விது: ருசஸ்ஸாமானி யாஜுகும்ஷி
ஸா ஹி ஸ்ரீரம்ருதா ஸதாம் ப்
யோ வைதாம் ப்ரஹ்மணோ
வேத அம்ருதேநாவ்ருதாம்
புரீம் தஸ்மை ப்ரஹ்ம சயே
ப்ரஹ்மா ஆயு:கீர்த்திம்
ப்ரஜாந்தது:
நவோ நவோ பவதி ஜாயமாநோ
ஹநாம் கேதுருஷஸா மேத்யக்ரே
பாகந்தேவேப்யோ விததாத்யாயந்ப்ர
சந்த்ரமாஸ்திரதி தீர்கமாயு:சோமாஸ்கந்த,வீதிவிடங்க, சாம்ப
பரமேஸ்வர, அலங்கார தீபம் தரிசயாமி

## பஞ்ச தீபங்கள்

1. ஈசாந: ஸ்ஸர்வ வித்யாநாம்
   ஈஸ்வர: ஸர்வ பூதாநாம் ப்ரஹ்மாS திபதிர்
   ப்ரஹ்மணோSதிபதிர் ப்ரஹ்மா சிவோ மே
   அஸ்து ஸதாசிவோம்

   தசஹீதோ ஹவை நாமைஷ:
   தம் வா ஏதம் தசஹூதகும் ஸந்தம்
   தசஹோா தேத்யாசக்ஷதே பரோக்ஷேண
   பரோக்ஷப்ரியா இவ ஹி தேவா:

2. தத்புருஷாய வித்மஹே
   மஹாதேவாய தீமஹி தந்நோ
   ருத்ர: ப்ரசோதயாத்

   ஸப்தஹூதோ ஹவை நாமைஷ:
   தம் வா ஏதகும் ஸப்தஹூதகும் ஸந்தம்
   ஸப்தஹோாதேத்யாக்ஷதே பரோக்ஷேண
   பரோக்ஷப்ரியா இவஹி தேவ:

3. அகோரேப்யோSத கோரேப்யோ
   கோரகோரதரேப்ய: ஸர்வேப்யஸ் ஸர்வ
   சர்வேப்யோ நமஸ்தே அஸ்து ருத்ர
   ரூபேப்ய:!!

   ஷட்டுதோ ஹவை நாமைஷ:
   தம் வா ஏதகும் ஷட்டுதம் தஸந்தம் ஷட்டோதேத்யாசக்ஷதே
   பரோக்ஷேண பரோக்ஷப்ரியா இவ ஹி தேவா:

4. வாமதேவாய நமோ ஜ்யேஷ்டாய நம
   நம ச்ரேஷ்டாய நமோ ருத்ராய நம:
   காலாய நமய கலவிகரணாய நமோ
   பலவிகரணாய நமோ பலாய நமோ
   பலப்ரமதநாய நமஸ் ஸர்வ பூததமநாய
   நமோ மநோந்மநாய நம:!!
   பஞ்சஹூதோ ஹவை நாமைஷ:
   தம் வா ஏதம் பஞ்சஹூதகும் ஸந்தம்
   பஞ்சஹோாதேத்யாக்ஷதே பரோக்ஷேண
   பரோக்ஷப்ரியா இவா ஹி தேவா:!!

5. ஸத்யோஜாதம் ப்ரபத்யாமி
ஸத்யோஜாதாய வை நமோ நம:
பவேபவே நாதிபவே பவஸ்வ மாம்
பவோத் பவாய நம:
சதுர்ஹ ிதோ ஹவை நாமைஷ:
தம் வா ஏதும் சதுர்ஹ ிதகும் ஸந்தம்
சதுர்ஹோதேத்யாசக்ஷதே பரோக்ஷேண
பரோக்ஷப்ரியா இவா ஹி தேவா!!

6. த்ர்யம்பகம் யஜாமஹேஸ ிகுந்திம்
புஷ்டிவர்த்தனம் உர்வாருகமிவ பந்தனான்
ம்ருத்யோர் மூக்ஷ ிய மாம்ருதாத்!!
கௌரி மிமிய ஸலிலானி
தக்ஷத்யேகபதீ த்வபதீ ஸா சதுஷ்பதீ
அஷ்டாபதீ நவபதீ பபூவுஷீ
ஸக்ஷஸ்ராக்ஷரா பரமே வ்யோமான்!!
ப்ருஹத்ஸாம க்ஷத்ரப்ருத்
வ்ருத்தப் வ்ருஷ்ணியம் த்ரிஷ்டு பௌஜ:
சுபித முக்ரவீரம் இந்த்ரஸ்தோமேன
பஞ்சதசேன மத்த்யமிதம் வாதேன
ஸகரேண ரக்ஷ!

விளக்கம்: தைத்ரியம் 4 வது பிரச்னத்தில் இம்மந்திரம் கூறப்படுகிறது.
ஈசானாஸ் ஸர்வ வித்யானாம் ஈசுவரஸ்ஸர்வ
பூதானாம் ப்ரஹமாதி திரப் ரஹண பர மணோதிபதிர்"
ப்ரஹ்மா சிவோமே அஸ்து சதாசிவோம்.
இம்மந்திரத்தால் நியாசம் முறை ஈசான கலா பஞ்சகம்

1. ஈசான ஸர்வ வித்யானாம் சசின்ன நம :
ஊர்த்துவமூர்த்தினி

ஈஸ்வர ஸ்ஸர்வபூதானாம்-அங்கதாயை நம: - கிழக்கு சிரசு

3. "பிர்மாதிபர் ப்ரஹ்மணோதிபதிர் - ப்ரஹ்மேஷ்யை நம :
- தெற்கு சிரசு

4. "சிவோமே அஸ்து" - மரீச்யை நம: - வடக்கு சிரசு

5. சதாசிவோம் - ஜ்வாலியை நம: - மேற்கு முகம்

தத்புருஷ நியாசம்

தத்புருஷாய வித்மஹே" மஹா தேவாய தீமஹி

தன்னோ ருத்ரப் பிரசோதயாத் - (இது ருத்ர காயத்ரியாகும்)

1. "தத்புருஷாய வித்மஹே" சாந்தியை நம: - கிழக்கு முகம்
2. "மஹா தேவாய தீமஹி" - வித்யாயை நம: - தெற்கு முகம்
3. "தன்னோ ருத்ர" - பிரதிஷ்டாயை நம: - வடக்கு முகம்
4. "பிரசோதயாத்" - நிவ்ருத்தியை நம: - மேற்கு முகம்

சத்தியோஜாதம் பிரபத்யாமி சத்யோ ஜாதாய

வை நமோ நம புவே பவே நாதிபவே

பவஸ்வமாம் பவோத் புவாய நம:

| | | |
|---|---|---|
| 1. | "சத்தியோஜாதம பிரபத்யாமி" சித்தியை நம: | வலதுபாதம் |
| 2. | "சத்தியோஜாதாயவை நமோ நம:ருத்வை நம: | இடது பாதம் |
| 3. | "பவேத்" -த்யுத்யை நம: | வலது கை |
| 4. | "அபவே" லக்ஷ்ம்யை நம: | இடது கை |
| 5. | "அநாதிபவே" - மேதாயை நம: | முக்கு |
| 6. | "பவஸ்வமாம்" - காந்யை நம: | பிடரி |
| 7. | "பவ" ஸ்திராயை நம: | வலது தோள் |
| 8. | உத்பவாயநம ஸ்ம்ருத்யை நம: | இடது தோள் |

*(இவ்வாறு மந்திரங்களாக் காட்டி விளக்கியுள்ளனர். மந்திரம் வடமொழி. பொருள் யாரும் சுலபமாய் அறியாது பழக்கத்தால் நியாசம் செய்து கொண்டுள்ளனர். அவ்விதம் சொல்லும் ஆற்றல் வாக்கு ரூபமாகத்தொழிற்படும் என்பது வைதீக கர்ம வாதிகள் நியாயம்.மனம் பதியாத போது ஒரு மந்திரமும் தொழிற்படாது)நன்றி - சிவராஜயோகம் (சிவயோகி மா. இரத்தினசாபாபதி பிள்ளை எழுதியது)*

## சோடசஉபசாரம்

### கண்ணாடி

1. சந்த்ரமா மனஸோ ஜாத:
சக்ஷோஸ் ஸுர்யோ அஜாயத
முகாதிந்த்ரச் சாக்னிச்ச ப்ராணாத்
வாயு ரஜாயத

### குடை

2. தூரமஸ்மச்சத்ரவோ யந்து
பீதா : ததிந் த்ராக்னீ க்ருணுதாந்
தத்விசாகே தந்நோ தேவா அனுமதந்து
யஜ்ஞம்! பச்சாத்புரஸ்தாதபயந்நோ
அஸ்து!

### வெண்சாமரம்

3. ஸோமோ வா ஏதஸ்ய
ராஜ்யமாதத்தே! யோ ராஜா ஸன்
ராஜ்யோ வா ஸோ மேன யஜதே!
தேவ ஸுவா மேதாநி ஹவீகும் ஷி
பவந்தி ஏதாவந்தோ வை
தேவானாகும் ஸவா: த ஏவாஸ்மை
ஸ்வான் ப்ரயசந்தி ஏ தனம்
புனஸ்ஸுவந்தே ராஜ்யாய தேவஸு
ராஜா பவதி!!

ராஜாதிராஜாய ப்ரஸஹ்ய
ஸாஹினே நமோ வயம் வைச்ரவணவாய
குர்மஹே ஸ மே காமான் காம
காமாய மஹ்யம் காமேச்வரோ
வைச்ரவணோ ததாது குபேராய
வைச்ரவணாய மஹாராஜாய நம!!

## விசிறி / ஆலவட்டம்

4. வாயுஸ்தா அக்ரே
ப்ரமுமோக்து தேவ: ப்ராஜாபதி:
ப்ரஜாய ஸம்பிதாந:
ப்ரமுஞ்சமாநா புவநஸ்ய ரேதோ
க்ாதும் தத்த யஜமநாய தேவா:

யஜ்ஞேன யஜ்ஞ- மயஜந்த
தேவா : தானி தர்மாணி
ப்ரதமான்யாஸன் தே ஹ நாகம்
மஹிமான ஸசந்தே யத்ர பூர்வே
ஸாத்யா ஸந்தி தேவா:!!

## வந்தனம்

5. ஓம் ந கர்மணா ந ப்ரஜயா
தனேன த்யாகேனைகே அம்ரு
தத்வ- மானசு: பரேண நாகம் நிஹிதம்
குஹாயாம் விப்ராஜ தேதத்யதயோ
விசந்தி வேதாந்த விஞ்ஞான
ஸுநிச்சிதார்த்தா: ஸந்ந்யாஸ யோகாத்
யதய : சுத்த ஸத்வா: தே ப்ரஹ்ம
லோகே து பராந்தகாலே பராம்ருதாத்
பரிமுச்யந்தி ஸர்வே தஹ்ரம் விபாபம்
பரமேச்ம - பூதம் யத்புண்டரீகம்,
புரம் மத்யஸ்க்கு ஸ்தம் தத்ராபி தஹ்ரம்
ககனம் விசோகஸ் தஸ்மின்
யதந்தஸ் ததுபாஸிதவ்யம் யோ வேதாதெள
ஸ்வர: ப்ரோக்தோ வேதாந்தே ச
ப்ரதிஷ்ட்டித: தஸ்ய ப்ரக்ருதி
லீனஸ்ய ய: பரஸ்ஸ மஹேச்வர:!!

ஓம் பூர்ப்பு வஸ்ஸுவ:
பூகீபல - ஸமாயுக்தம் நாகவல்லி -
தலைர்யுதம் கர்ப்பூர சூர்ண - ஸம்யுக்தம்
தாம்பூலம் ப்ரதிக்ருஹ்யதாம்

## நெய்தீபம் ஆரத்தி

6. ராஜாதிராஜாய ப்ரஸஹ்ய
ஸாஹினே நமோ வயம் வைச்ரவணாய
குர்மஹே ஸ மே காமான் காம
காமாய மஹ்யம் காமேச்வரோ,
வைஸ்ரவனோ ததாது குபேராய
வைச்ரவணாய மஹாராஜாய நம:
ஸர்வஸ்யாப்த்யை ஸர்வஸ்ய
ஜித்யை ஸர்வமேவ தேநாப்நோதி
ஸர்வம் ஜயதி.

## ஸ்ரீ தியாகராஜஸ்வாமி அஷ்டகம்

1. நீலகந்தர பாலலோசன பாலசந்திர சிரோமணே
காலகால கபாலமால ஹிமாலயாசல
ஜாபதே சூலஹதல மூலசங்கர மூலயோகி
வரஸ்துதே தியாகராஜ தயானிதேகம
லாபுரீஸ்வர பாஹிமாம்

2. ஹாரகுண்ளலமல்லிக கங்கண கிங்கிணி
கிருதபன்னகா வீரகட்க குபேரமித்ர
களத்ரபுத்ர ஸமாவிருதா
நாரதாதி முனீந்திரஸன்னுத
நாகசர்ம கிருதாம்பரா
தியாகராஜ தயானிதேக மலர்புரீஸ்வர பாஹீமாம்

3. பூதநாத புராந்த காதுல
புக்தி முக்தி அகப்ரதா
சீதலா மல மந்த மாருத
சேவ்ய திவ்ய களேபரா
லோக நாயக பாகசாஸந
லோக சாக்ஷி சுபூஜிதா
தியாகராஜ தயாநிதே கமலாபுரீஸ்வர பாஹிமாம்

4. சுத்த மத்தள தாளகாஹன
சங்கதிவ்ய ரவப்ரியா
நிருத்த கீத ரஸக்ய நித்ய
சுகந்தி கௌரி ஸரீரஹே
சாருஹார ஸுரா ஸுரா மிருத
பூஜனீய சதாம்புஜா
தியாகராஜ தயாநிதே கமலாபுரீஸ்வர பாஹிமாம்

5. கோர மோஹ மகாந்த கார
திவாகரா கிலஸோகஹா
ஏக நாயக பாக ஸாஸந
ஸம்ஹி சித்த ஜநாமிருதா
பாதுரல ஹ நாஸ நாகில
கோப ஜன்ம நிபூஜிதா
தியாகராஜ தயானிதே கமலாபுரீஸ்வர பாஹிமாம்

6. ஸர்பராஜ் விபீஷி தர்பஹ
ஹிர்த் ஸபேஸ - ஸதாசிவா
நந்தி பிர்ங்கி கணேஸ் வந்தித
சுந்தராங்ரி ஸரோருஹா
வேதஸே கரஸௌ சுதகிரஹ
நாதருபதயாகர்ரா
தியாகராஜ தயானிதே...

7. பங்கஜாஸந சூத்வேத
துரங்கமேரு ஸரஸாநா
பானுசந்திர ரதங்கபூரத
சேஷஸாயிஸிலீமுகா
மந்தஹாஸ ஸிலீகிருத்
திருபுராந்தகா பந்தபாநலா
தியாகராஜ தயானிதே

8. திவ்யரத்ன மஹாஸ நஸாய
மேருதுல்ய மஹாரதா
சக்ரசாமர பர்ஹி பர்ஹி
சமூக திவ்ய சிகாமனே
நித்யசுத்தமஹா விருஷத்வஜ
நிர்விகல்ப நிரஞ்ஜநா
தியாகராஜ தயானிதே

# ஸ்ரீ கமலாம்பிகா அஷ்டகம்

1. வந்தே ஸ்ரீ புரவாஸமம்ப கலயே
   வந்தே ஜகத்காரனே
   வந்தே யோகிமுனீந்திரஸே விதபதே
   வந்தே தயாஸாகரே
   வந்தே பர்வத ராஜமம்பகலயே
   வந்தேந்து சூடாமனே
   தியாயேத் வாம் கமலாம்பிகே பகவதி

2. அம்பாஸ்ரீபுர வாஸிநீம்
   ஸஸிகலாம் அந்தர் கதஜோதிநிம்
   ஆனந்தாமிருதபூர்ண வாரிதிமுகீம்
   அந்தாசி மத்யஸ்தனீம்
   அம்போஜாஸன பூஜிதாங்கயுகள
   பந்தோல்ல ஸ்மப்பிரதீம்
   தியாயேத்வாம் கமலாம்பிகே
   பிர்த்யக்ஷபாக்யபிரதே

3. ஆக்ஞான துவாந்த தீபேக
   ஹரி ஹர பிரம்மா திபிஹி பூஜிதே
   தத்வா ஸ்ரீ ஸரஸாத்மிகே
   ஆனந்த சிரங்கார்ரிதே
   அர்த்தக் ஞான மஹாரதாதி வரதே
   ஐங்கார மந்திரா தயே
   தியாயேத்வாம்.....

4. தத்வார்த்த பிரதமோக்ஷ காரணபராம்
   தத்வஜனை சேவிதாம்
   தத்வாநந்த நிரஜ்ஜதனேகர சிதாம்
   தத்வ பிரியாம் சங்கரீம்
   தத்வக் ஞான பதாம் பூஜாம்
   நவ மஹாம் தாடங்கஸோபானிவிதாம்
   தியாயேத்வாம்.....

5. மாயேமங்கள பீடமத்யநிலயே
மாஹேஸ்வரர் சாலயே
மந்திரார்த்பூத மந்திரயந்திரநிலவே
மாரஸ்ய ஜீவோதயே
மாநமாந மனிந்திரசாருவலயே
மாயாமாயே சிந்தயே
தியாத்யேத்வாம்...

6. நாநாரத்ன விசித்ரபத்மயுகளாம்
நாநஜனௌ சேவிதாம்
நாநாயோகி முனீந்திரஸேவிதபதாம்
நாராயணே நார்சிதாம்
நாநாபுஷ்பககந்தமால்யயுகளாம்
நாதாந்த ரிபாத்மிகாம் தியாயேத்வாம்

7. ஸ்ரீ சக்ராங்கித பிந்து மத்ய வஸிதாம்
ஸ்ரீ கண்டதேஹ ஸ்ரீதாம்
ஸ்ரீ நாதா திகுரு திரயீம் சிவகராம்
ஸ்ரீ நாத பாதார்ச்சிதாம்
ஸ்ரீ மௌந ஸ்ரீ தௌதஸர் பிவதநாம்
ஸ்ரீ கும்ப திவ்யாம் ருதாம்
தியாயேத்வாம்....

8. கல்யாணாத்பூ தகாரண கவிபிரதாம்
கந்தர்ப கோடிபிரதாம்
கார்யா காரணகத்வரைக நிலயாம்
காந்தா மாய விக்ரஹாம்
காம்யார்த்த பிரதமோக்ஷ நாரணாபராம்
கஸ்தூரிநா பத்ரிகாம்
தியாயேத் வாம்....

# திருவாரூர்க் கல்வெட்டுகள்



ஸ்ரீ தியாகராஜர்



கமலாம்பாள்

இக்கோயிற் கல்வெட்டுகள் 65-க்கு மேல் இருக்கின்றன. இவற்றில் முதல் இராசராசன் (569 of 1904: 570,571 of 1904) முதல் இராசேந்திரன் (0568, 569 of 1904), இராசாதித்தன் (670 of 1919), முதற்குலோத்துங்கன் (541 of 1904), விக்ரமசோழன் (541 of 1904), விக்ரமசோழன் (164 of 1904), இரண்டாம் குலோத்துங்கன் (553 of 1904 : 269 of 1901), மூன்றாம் இராசேந்திரன் (555 of 1914), இரண்டாம் இராசராசன் (538 of 1904) என்ற இவர்தம் கல்வெட்டுகளும், கி.பி. 9 ஆம் நூற்றாண்டைய ஸ்ரீமான் ஸ்ரீவல்லபன் என்ற பாண்டி மன்னன் கல்வெட்டும் (539 of1904 ), கி.பி. 1268-1308 -ல் இருந்த மாறவர்மன் குலசேகரன்- கல்வெட்டும் (55 of 904), அச்சுதப்ப நாயகன் (கி.பி. 1572-1614) கல்வெட்டும், சரபோஜி மன்னன் (கி.பி. 1711-1727) கல்வெட்டும் பிறவும் காணக் கிடைக்கின்றன.

இராசராசன் பாட்டியும் கண்டராதித்தர் மனைவியுமான செம்பியன்மாதேவியார் ஆரூர் அரநெறிக்கோயிலைக் கற்கோயில் ஆக்கினார். அக்கோயிலின் தினசரிப் பூசைக்காக 234 பொற்காசுகள் அளித்தார்: வெள்ளிப் பாத்திரங்களைக் கொடுத்தார்.

1. முதற்குலோத்துங்கன் காலத்தின் (கி.பி. 1070- 1110) பூங்கோவில் நம்பி என்பவன் 'வீர அணுக்கன்' என்னும் அரசனது நம்பிக்கைக்குரிய தலைவன் மீது நூல் ஒன்றைப் பாடினான். அது "வீர அணுக்க விஜயம்' எனப்பட்டது. 2. முதல் இராசாதிராசன் ஆணைப்படி வீதி விடங்கப் பெருமானுக்குப் பொற்பல்லக்குச் செய்ய, கோயில் பண்டாரத்திலிருந்து பொன் பாத்திரங்களும் வெள்ளிப்பாத்திரங்களும் பயன்படுத்தப் பட்டன. 3. திருமண்டபம் பொன்னால் சமைக்கப் பலவகைப் பொன் வகைகள் குறிக்கப் பட்டுள்ளன. 4. கோவிலில் அரசனது பிறந்த நாட்கள் ஐப்பசியில் சதயமும், ஆடியில் ஆருத்ராவும் கொண்டாடப் பட்டு வந்தன. 5.தேவாரம் பாடுவார்க்கு நில தானம் செய்யப்பட்டது. 6. இராசராசமடை என்பது இக்காலப் பவுன் நிறை போன்ற அரசாங்க (standard) நிறை ஆகும். (அதற்கு 3 கழங்சு 1 மஞ்சாடி 1 குன்றிமணி எடையுள்ள) பொன் சரியானது) 7. கோயில் காரியங்களைக் கவனிக்கக் குழு (Temple Assembly) இருந்தது.

அது கோயில் காரியங்களைக் கவனிக்கத் தேவாசிரியன் என்ற மண்டபத்திற் கூடிவந்தது. 8. கன்றினைக் கொன்ற மகனைத் தேர்க்காலிட்டுக் கொன்ற மனுநீதிச் சோழனுக்கு அமைச்சனாக இருந்த ஒருவனது வழியில் வந்த குலோத்துங்க சோழ மாவலிவாணராயன் என்பவன் செய்த அறச்செயல் குறிப்பதொரு கல்வெட்டு. 9. இரண்டாம் குலோத்துங்கன் அநபாயன் என்று பல கல்வெட்டுகளிற் கூறப்பட்டுள்ளான். அவன் காலத்தில் திருவாரூர்க் கோயிலில் ஓராண்டில் 56 திருவிழாக்கள் நடைபெற்று வந்தன. 10. திருவாரூர் கி.பி.13 ஆம் நூற்றாண்டில் ஜயமாணிக்க வளநாட்டைச் சேர்ந்திருந்தது.

11. மூன்றாம் குலோத்துங்கனை வீதிவிடங்கப் பெருமான் நம்தோழன் திரிபுவன வீரதேவன் என்று சொன்னதாக ஒரு கல்வெட்டுக் கூறுகிறது. 12. ஒரு கல்வெட்டில் அக்காலச் சமூக நிலை விளக்கப்பட்டுள்ளது. நாரதர், மஸ்கரர், யாக்ஞவல்கியர் முதலான அறநூல் ஆசிரியர்கள் குறிக்கப்பட்டுள்ளனர்: கலப்புச் சாதியாரான அநுலோமருடைய தோற்றம், கடமைகள், உரிமைகள் முதலியன விளக்கப்பட்டுள்ளன. 13. லக்கன தன்னையக உடையார் என்ற அமைச்சனது கௌரவத்திற்காகச் சித்தரசன் மகனான நாகராசன் என்பவன் மேற்குக் கோபுரத்தைக் கட்டினான் என்று கன்னடக் கல்வெட்டு ஒன்று கூறுகிறது. 14. கங்கை கொண்ட சோழபுரத்து உடையார் வீதிவிடங்க தேவர் மனைவி, அம்மனுக்கு விலை உயர்ந்த நவமணிகள் அளித்தாள் என்று கல்வெட்டு ஒன்று கூறுகிறது. 15. மற்றக் கல்வெட்டுகள் பலர் கோவிலுக்கு வைத்த நிலம், விளக்கு முதலிய பலவகைத் தானங்களைக் குறிக்கின்றன. 'சுந்தரர் தாயான இசைஞானியார் திருவாரூரில் இருந்த கமலாபுரம் ஞான சிவாசாரியார் மகளார்' என்று ஒரு கல்வெட்டுக் கூறுகிறது.

## செப்பேடு தரும் அரிய செய்தி

நம் திருக்கோவிலில் உள்ள செப்பேடுகள் புதிய பல செய்திகளை உலகுக்கு அறிவிக்கும் தன்மையன. அவற்றுள் ஒரு செப்பேட்டில் உள்ள செய்தி வியப்புக்குரியதாகும்.

24.12.1648 முதல் 14.11.1686 முடிய 37 ஆண்டுகள் 10 மாதம் 20 நாட்கள் தில்லை நடராசர், தில்லையிலே இருந்து வெளியே கொண்டு செல்லப்பட்டார். குடுமியான்மலை, மதுரை, திருவாரூர் ஆகிய ஊர்களில் வைக்கப்பட்டு, பின்னர் தில்லைக்குக் கொண்டு வரப்பட்டார். இச்செய்தியை நம் திருக்கோவில் செப்பேட்டில் உள்ள பாடல் விளக்குகிறது. திருவாரூரில் 30 வருடம் இருந்துள்ளது. "விடையில் வந்த செம்பொன்அம் பலத்தான் அந்த

வெள்ளியம் பலத்திலே விரும்பிச் சென்ற
நடையில் வந்த வருஷமோ சர்வ தாரி
நாயமார் குழியிருபத் தைந்து நாளாம்
கடையில்வந்த வருஷங்காற் திகையீ ரேழு
கதிர்வாரந் திரும்ப வந்து கலந்த நாளாம்
இடையில் வந்த வருஷமெண்ணிப் பார்க்கில் முப்பந்
தேழு பத்து மாத நாள் இருபதாமே."

இந்நிகழ்ச்சி கீழ்க்கண்ட காரணங்களால் நிகழ்ந்திருக்கலாம் என்று எண்ணப்படுகிறது. (1) பீசப்பூர் சுல்தான் படையெடுப்பால் நிகழ்ந்திருக்கலாம். (2) சிதம்பரம் பகுதியில் கடுமையான பஞ்சம் ஏற்பட்டதால் இருக்கலாம். மற்றும் நாயக்க மன்னர்கள் வைணவத்தில் ஆர்வம் காட்டியதால் இருக்கலாம்.

**முடிவுரை :**

தற்பொழுது ஆலயத்தின் நிர்வாக அதிகார்ரி அவர்களின் தீவிர முயற்சியினால் ஆலயம் நன்கு பராமரிக்கப்படுகிறது.

1. கோயிலின் தூய்மை பராமரிக்கப்படுகிறது.
2. ஆழ்குழாய் கிணற்று நீர் எல்லா சந்நிதிகளுக்கும் குழாய் வழி வழங்கப்படுகிறது.
3. ஆரியன், மற்றும் மொட்டை கோபுர வாசலில் பக்தர்கள் தம் பாதங்களைத் தூய்மை செய்துகொண்டு உட்புக ஏதுவாகத் தண்ணீர் பாய்ச்சும் அமைப்பு நிறுவப்பட்டுள்ளது.
4. பசுக்களைப் பராமரிக்க ஏதுவாகப் பசுமடம் உள்ளது. இங்கிருந்து அபிடேகத்திற்கான தூய்மையான பசும்பால் பெறப்படுகிறது.
5. அலுவலகப் பக்கம் தண்ணீர் தொட்டி ஏற்படுத்தி செங்கழுநீர் புஷ்பம், நீலோற்பலம் புஷ்பம் பயிரிட ஏற்பாடு செய்யப்படுகிறது.
6. தங்கத்தேர் அமைப்பதற்கான முயற்சியும் நடைபெறுகிறது.

இவ்வாறு எண்ணிலடங்காச் சிறப்புகளைப் பெற்றுத் திகழ்வது திருவாரூர்த் தியாகராசப் பெருமான் திருக்கோயில் ஆகும். பன்னிரு திருமுறைகளிலும் போற்றப்பெறும் அளவிற்கு இக்கோயில் சிறப்புப் பெற்றுள்ளது. கடவுளர்களும், தேவர்களும், முனிவர்களும், சித்தர்களும், நாயன்மார்களும், அடியார்களும் வணங்கி வழிபட்ட பெருமையும், இந்தியா மற்றும் வெளிநாடுகளிலிருந்து எண்ணிலாப் பக்தர்களும், சிவத்தொண்டே உயரிய தொண்டெனப் போற்றிவரும் ஆதீனத் தலைவர்களும் இன்றளவும் இத்திருக்கோயில் வந்து போற்றிச் செல்லும் மாண்பும் உடையது, இத்திருக்கோயில் ஆகும்.

பக்தர்களாகிய நாமும் வேண்டுவோர்க்கு, வேண்டுவன வெல்லாம் வேண்டியாங்குத் தரும் ஆரூர்ப் பெருமானின் திருக்கோயில் வந்து, வழிபட்டுப் பேரின்பக் கடலில் மூழ்கித் திளைப்போமாக!






## திருவாரூர்
## சங்கீத மும்மூர்த்திகளில் முத்துசாமி தீட்சகர் இயற்றிய
## கமலாம்பாள் தேவி நவாவரண கீர்த்தனைகள்

*ராகம் : தோடி* *ரூபகதாளம்*

### *பல்லவி*

கமலாம்பிகை (அம்பா) ஆச்ரித
கல்ப லதிகே சண்டிகே ஜகதாம்பிகே
கமனீயா ருணும் சுகே
கர வித்ருத சுகே - மாமவ
கமலாம்பிகே - ஜகதம்பிகே

### அநுபல்லவி

கமலா ஸனாதி பூஜித கமலபதே பஹுவரதே (கமலா)
கமலாலய தீர்த்த வைபவே சிவே கருணார்ணவே

### சரணம்

ஸகல லோகசு நாயிகே ஸங்கீத ரஸிகே அம்பா
சுக வித்வப் பிரதாயிகே ஸுந்தரி கத மாயிகே
விகளே பர முக்திதான நிபுணே அகஹரணே
வியதாதி பூத கிரணே வினோத சரணே

### மத்திய காலம்

ஸகலே குருகுஹ சரணே ஸதா சிவாந்த :
கரணே அகசட தபாதி வர்ணே
அகண்டைக ரஸ பூர்ணே (கமலா)

*(1)*

*ராகம் : ஆனந்தபைரவி* *திரிபுடதாளம்*

***பல்லவி***

கமலாம்பா ஸம் ரக்ஷதுமாம் (ஸ்ரீ அம்ப)
கமலாம்பா ஸம் ரக்ஷதுமாம் (ஸ்ரீ அம்ப)
கமலாம்பா ஸம் ரக்ஷதுமாம் - ம் ஹ்ருத
கமல நகர நிவாஸினி அம்பா

***அ.பல்லவி***

ஸுமன ஸாராதி தாப்ஜ முகி ஸுந்தர மனப்ரிய கரஸ கீ
கமல ஜானந்த போதஸகி காந்த தார பஞ்ஜரசு கீ (கம)

***சரணம்***

த்திரிபுராதி சக்ரேஸ்வரி அனிமாதி ஸித்தீச்வரி
நித்யா காமேச்வரீ க்ஷிதிபுர த்ரைலோக்ய மோகன சக்ரவர்த்தினீ
ப்ரகட யோகினி ஸுராரிபு மஹிஷா ஸீராதி மர்த்தினீ
நிகம புராணாதி ஸம் வேதினீ

***மத்தியம காலம்***

த்ரி புரேஸி குருகுஹ ஜனனீ த்ரிபுர பஞ்ஜனரஞ்சனீ
மது ரிபு ஸஹோதரி தலோதரீ த்ரிபுர ஸுந்தரி மஹேஸ்வரி (கம)

*(2)*

*ராகம் : கல்யாணி* *ஆதிதாளம்*

***பல்லவி***

கமலாம்பாம் பஜரே ரே மானஸ
கல்பித மாயா கார்யம் த்யஜரே

***அநுபல்லவி***

கமலா வாணி ஸேவித பார்ச்வாம்
கம்புஜயக்ரீவாம் நததேவாம்

### மத்தியம காலம்

கமலாபுர ஸதனாம் ம்ருதுகதனாம் கமனீய ரதனாம்
கமலவதனாம் (கமலா)

### சரணம்

ஸர்வா சாபரி பூரக சக்ர ஸ்வாமினீம் பரமவிசகாமினீம்
துர்வா ஸார்சித குப்த யோகினீம் துகத்வம்ஸினீம் ஹம்ஸினீம்
நிர்வாண நிஜஸுக ப்ரகாயினீம் நித்ய கல்யாணீம் காத்யாயனீம்
சர்வாணீம் மதுபவிஜய வேணீம் ஸத்குருகுஹ ஜனனீம் நிரஞ்ஜனீம்

### மத்யம காலம்

கர்வித பண்டா ஸுர பஞ்சனீம் காமா கர்ஷின்யாதி ரஞ்சனீம்
நிர்விசேஷ சைதன்ய ரூபிணீம் உர்வீ தத்வாதி ஸ்வரூபிணீம் (கம)

### (3)

*ராகம் : சங்கராபரணம்* *தாளம் : ரூபகம்*

### பல்லவி

ஸ்ரீ கமலா ம்பிக யா கடாக்ஷி தோ ஹம் (அம்ப)
ஸச்சி தாநந்த பரிபூரண ப்ரஹ்மாஸ்மி (ஸ்ரீ)

### அநுபல்லவி

பாக சரஸநாதி ஸகல தேவதாஸேவிதயா
பங்கஜாஸநாதி பஞ்சக் ருத்யா க்குத்பாவிதயா

### மத்யம காலம்

சோகஹர சதுர பதயா மூகமுக்யாவாக் ப்ரதயா
கோ கநத விஜய பதயா குருகுஹ தத்ரை பதயா (ஸ்ரீ)

### சரணம்

அநங்க குஸு மாத்யஷ்ட சக்த்யா காரயா
அருணந வர்ண ஸம்க்ஷோபன சக்ரா காரயா
அநந்த கோட்யண்ட நாயக சங்கரநாயிகயா
அஷ்ட வர்காத்மக குப்ததரயா வரயா

### மத்யம காலம்

அநங்காத்யு பாஸிதயா அஷ்ட தளாப் ஜஸ்திதயா
தநுர்பாண தர கரயா ஸீதாஸாகரயா (ஸ்ரீ)

*(4)*

*ராகம் : காம்போதி* *அடதாளம்*

**பல்லவி**

கமலாம்பிகாயை கனகாம் சுகாயை
கர்பூர வீடிகாயை நமஸ்தே, நமஸ்தே (கம)

**அநுபல்லவி**

கமலா காந்தாநு ஜாயை காமேச்வர்யை அஜாயை
ஹிமகிரி தநுஜாயை ஹ்ரீம்கார பூஜ்யாயை

**மத்யம காலம்**

கமலா நகர விஹாரிண்யை கலஸமூஹ ஸம் ஹாரிண்யை
கமனீய ரத்ன ஹாரிண்யை கலிகல்மஷ பரிஹாரிண்யை (கம)

**சரணம்**

ஸகல சௌபாக்யதாய காம்போஜ சரணாயை
ஸம் சேஷா பிண்யாதி சக்தியுத சதுர்த்தா வரணாயை
ப்ரகட சதுர்தச புவன பரணாயை
ப்ரபல குருகுஹ சம்ப்ரதாயாந்த கரணாயை
அகலங்க ரூப வர்ணாயை அபர்ணாயை ஸீபர்ணாயை
ஸீகரத்ருத சாப பாணாயை சோபனக ரமனுக கோணாயை

**மத்யம காலம்**

ஸகுங்கு மாதி லேபனாயை சராசராதி கல்பனாயை
சிகுர : விஜித நீலகனாயை சிதானந்த பூர்ண கனாயை (கம)

*(5)*

*ராகம் : பைரவி* *தாளம் : ஜம்ப*

**பல்லவி**

ஸ்ரீ கமலாம்பாயா : பரம் நஹி ரே ரே - சித்த
க்ஷித்யாதி ஸிவாந்த தத்த்வஸ்வரூபிண்யா: ॥ ஸ்ரீ ॥

### அநுபல்லவி

ஸ்ரீ கண்ட விஷ்ணு விரிஞ்சாதி ஜனயித்ரியா
சிவாத்மக விச்வ கர்த்ரியா : காரயித்ரியா

### மத்யம காலம்

ஸ்ரீ கர பஹிர் தசார சக்ர ஸதித்யாஸ் ஸேவித
பைரவீ பார்கஸ்ரீ பாரத்யா

### சரணம்

நாதமய ஸூக்ஷ்ம ரூபஸர்வஸித்தி ப்ரதாதி
தச சக்த்யா ராதித மூர்த்தே
ச்சோத்ராதி தசகரணாத் மக குல கௌளி காதி
பஹீ விதோ பாஸீத கீர்த்தே
அபேத நித்ய சுத்த புத்த முக்த ஸச்சிதானந்த
மய பரமாத்வைரஸ்பூர்தே
ஆதி மத்யாந்த ரஹிதா ப்ரமேய குருகுஹ மோதித
ஸர்வார்த்த ஸாதகஸ் பூர்தே

### மத்யம காலம்

மூலாதி நவாதார் வ்யாவ்ருத்த தசத்வனி பேதஞ்ச
யோகி ப்ருந்த ஸம்ரக்ஷி ண்யா :
அஞதி மாயா வித்யா கார்ய காரண வினோத
கரண படுதர கடாக்ஷ வீக்ஷிண்யா (ஸ்ரீ)

**(6)**

ராகம் : புன்னாகவராளி தாளம் : ரூபகம்

### பல்லவி

கமலாம்பிகா / யாஸ்தவ பக்தோ ஃஹம்
சம்கர்ய ஸ்ரீ கர்யாஸ் ஸங்கீத ரஸிதா யா (ஸ்ரீ)(கம)

### அநுபல்லவி

ஸீ மசரேக்ஷு கோதண்ட பாஸாங்குஸ பாண்யா
அதிமதுர தர / வாண்யா சர்வாண்யா : கல்யாண்யா

### மத்யம காலம்

ரமணீய புன்னாக வ / ராளி விஜித, வேண்யா : (ஸ்ரீ)(கம)

### சரணம்

தச கலா / த்மக வஹ்னி / ஸ்வரூப ப்ர / காசாந்தர் தசார

ஸர் / வரக்ஷாகர / சக்ரேச்வ / ர்யா : த்ரிசாதிநுத

கச வர்க / த்வய மய ஸர் / வஜ்ஞாதி / தச சக்தி ஸமேத மாலினீ

சக்ரே / ஸ்வர்யா : த்ரிதச விம்சத் / வர்ண கர்பி / ணீ / குண்டலின்யா/

தஸ முத்ரா / ஸமாரா / தித கௌளின் / யா /

### மத்யம காலம்

தசாதா திநுத குரு குஹ / ஜனக சிவ போதின்யா /

தசகரண வ்ருத்தி மரீசி / நிகர்ப யோகின்யா : ஸ்ரீ / (கம)

### (7)

ராகம் : ஸஹாணா தாளம் : திரிபுட

### பல்லவி

ஸ்ரீ கமலாம்பிகாயா பக்திம் கரோமி

ச்ரித கல்பவாடி காயாம் சண்டி காயாம் ஜகதம்பிகாயாம் (ஸ்ரீ)

### அநுபல்லவி

ராகா சந்த்ர வதனாயாம் ராஜீவ நயநாயாம்

பாகாரிநுத சரண்யாம் ஆகாசாதி கிரண்யாம்

### மத்யம காலம்

ஹ்ரீம் கார விபி நஹரின்யாம் ஹ்ரீம்கார ஸுசரீரின்யாம்

ஹ்ரீம் கார தருமஞ்ஜர்யாம் ஹ்ரீம்காரேஸ்வர்யாம்

கௌர்யாம் (ஸ்ரீ)

### சரணம்

சரீரத்ரய விலக்ஷண ஸுகதர ஸ்வாத்மாநு போகின்யாம்
விரிஞ்சி ஹரீசான ஹரிஹய வேதிதர ஹல்ய யோகின்யாம்
பாரதி வாக்தேவதா ரூபவஸிந்யாதி விபாகிந்யாம்
சராத்மக ஸர்வரோகஹர நிராமய ராஜயோகிந்யாம்

### மத்யம காலம்

கரத்ருத வீணாவாதின்யாம் கமலாநகர வினோதின்யா
ஸுரநர முனி ஜன மோதின்யாம் குருகுஹ வரப்ரஸா
தின்யாம் (ஶ்ரீ)

### (8)

***ராகம் : கண்டா ராகம் — தாளம் : ஆதிதாளம்***

### பல்லவி

ஶ்ரீ கமலாம்பிகே அவாவசிவே
கரத்ருத சுக சாரிகே

### அநுபல்லவி

லோக பாலினி கபாலினி சூலினி லோக ஜனனி பகமாலினி ஸ்க்ருதா

### மத்யம காலம்

லோகயமாம் ஸர்வ ஸித்தி
ப்ரதாயிகே திரிபுராம்பிகே பாலாம்பிகே (ஶ்ரீ)

### சரணம்

ஸந்தப்த ஹேம ஸந்நிப தேஹே
ஸதா கண்டைக ரஸப்ரவாஹே
ஸந்தாப ஹர த்ரிகோண கேஹே
ஸ காமேச்வரீ சக்தி ஸமூஹே
ஸந்ததம் முக்தி கண்டாமணி கோஷாயமான கவாடத்வாரே
அநந்த குருகுஹ விதிதே கராங்குலிந கோதய
விஷ்ணு தஸாவதாரே

### மத்யம காலம்

அந்த கரணேக்ஷு கார்முக ஸப்தாதி பஞ்சதன் மாத்ர விசி காத்யந்த
ராக பாசத்வேசாங் குசதா கரேதி ரஹஸ்ய யோகினீ பரே (ஶ்ரீ)

(9)

*ராகம் : ஆஹிரி ராகம்* *தாளம் : ரூபக தாளம்*

### பல்லவி

ஸ்ரீ கமலாம்பா ஜயதி அம்பா ஸ்ரீ கமலாம்பா ஜயதி
ஜகதம்பா ஸ்ரீ கமலாம்பா ஜயதி ச்ருங்கார ரஸ·கதம்பா
மதம்பா ஸ்ரீ கமலாம்பா ஜயதி சித்பிம்பா
பிரதிபிம்பேந்து பிம்பா ஸ்ரீ கமலாம்பா ஜயதி

### மத்யம காலம்

ஸ்ரீ புரபிந்து மத்யஸ்த சிந்தாமணி மந்திரஸ்த
சிவாகார மஞ்சஸ்திதி சிவகாமே சாங்கஸ்த (ஸ்ரீ)

### அநுபல்லவி

ஸுகராந நாத்யர்சித மஹா த்ரிபுர ஸுந்தரீம்
ராஜரஜேச்வரீம் ஸ்ரீ கர ஸர்வாநந்த மய -
சக்ர வாஸினீம் ஸுவர்ஸினீம் சிந்தயேஹம்

### மத்யம காலம்

திவாகர சீத கிரண பாவ காதி விகாஸ கரயா
பீகர தாபத்ரயாதி பேதன் துரீண தரயா
பாகரிபு ப்ரமுகாதி ப்ரார் தித ஸுகளே பரயா
ப்ராகட்ய பரா பரய பாலீதோ தயா கரயா (ஸ்ரீ)

### சரணம்

ஸ்ரீ மாத்ரே நமஸ்தே சின் மாத்ரே ஸேவித ரமா ஹரிதாவி தாத்ரே
வாமாதி சக்தி பூஜித பரதேவதாயா ஸகலம் ஜாதம்
காமாதி த்வாதச பிருபாஸித காதி ஹாதி ஸாதி மந்ர ரூபிண்யா :
ப்ரே மாஸ்பத சிவ குருகுஹ ஜனன்யாம்
ப்ரீதியுக்த மச்சித்தம் விலயது

### மத்யம காலம்

ப்ரஹ்ம மய ப்ரகாசினீ நாமரூப விமர்சனீ
காம கலா ப்ரதர்சினீ ஸாமரஸ்ய நிதர்சினீ (ஸ்ரீ)


சப்தவிடங்கர் ஸ்தலங்கள்
KUMBAKONAM
VALANGIMAN
KUDAVASAL
NIDAMANGALAM
TIRUVARUR DISTRICT
MANNARGUDI
TIRUTTURAIPPUNDI
PATTUKKOTTAI
VEDARANYAM
திருநள்ளாறு
திருநாகை
திருவாரூர்
திருக்கரவாசல்
திருக்குவளை
திருவாய்மூர்
(வேதாரண்யம்)
திருவாரூர் to திருக்காரவாசல் - 10 கி.மீட்டர்
திருவாரூர் to நாகப்பட்டினம் - 25 கி.மீட்டர்
திருவாரூர் to திருக்குவளை - 20 கி.மீட்டர்
திருவாரூர் to திருவாய்மூர் - 23 கி.மீட்டர்
திருவாரூர் to வேதாரண்யம் - 60 கி.மீட்டர்
திருவாரூர் to திருநள்ளாறு - 35 கி.மீட்டர்

# புராண ஓவியம்



மனுநீதிச்சோழன் மகன் வீதிவிடங்கன் தேர் ஓட்டி சென்ற போது தேரில் அடிபட்டு பசுவின் கன்று இறந்ததால் மன்னன் தன் மகனை தானே தேர்க்காலில் ஏற்றுவதை காட்டும் அழகிய ஓவியம்.



சைவத்தின் மேல் சமயம் வேறிலை அதில் சார் சிவமாம்
தெய்வத்தின் மேல் தெய்வம் இல்லெனும் நான்மறைச் செம்பொருள்
வாய்மை வைத்த சீர்திருத் தேவாரமும் திருவாசகமும்
உய்வைத் தரச் செய்த நால்வர் பொற்றாள் எம் உயிர்த்துணையே

